# துன்பச் சுழல்

அ. மு. பரமசிவானந்தம், எம்.ஏ., எம்.லிட்.
துணைத் தமிழ்ப் பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி, சென்னை

தமிழ்க்கலைப் பதிப்பகம்
சென்னை - 30

## முன்னுரை

வாழ்வில் எத்தனையோ வகையில் இன்பமும் துன்பமும் ஒன்றை ஒன்றுப்பற்றிக் கலந்தே வந்து கொண்டிருக்கின்றன. காரணமறியாது ஒருவருக் கொருவர் தம்மை உளத்தால் பறிமாறிக் கொள்ளு கின்றனர். 'அன்பு' அனைவரிடத்தும் செல்லத்தக்க ஒன்ருயினும் சிலரிடம் நம்மை அறியாமலேயே அது படர்கின்றது.

நாடு தோறும் சட்டங்களும் திட்டங்களும் நாள் தோறும் வளர்ந்து கொண்டே வந்த போதிலும், கொள்ளையும் கொலையும் மட்டும் குறைந்த பாடில்லை. உலக மக்களுக்கிடையில் உள்ள பொருளாதார ஏற்றத் தாழ்வு நீங்கி, நம் நாட்டுப் பழங்காலப் புலவர்கள் கூறுவதுபோன்று, பொருளாதார உரிமை உலகில் மலரின், அன்று ஒருவேளை கொள்ளையும் கொலையும் நீங்கலாம்.

துன்பத்தில் சளையா உள்ளமே இறுதியில் இன்பப்படியில் காலை வைத்து ஏறும் தகுதி வாய்ந் தது. இத்தகைய வாழ்க்கைத் தத்துவங்களை அடிப் படையாகக் கொண்டு அமைந்ததே இந்த நவீனம். இந் நூலைத் தமிழன்னையின் அடிகளுக்கு உரிமை யாக்குகின்றேன்.

தமிழ்க்கலை இல்லம்,<br>சென்னை–30<br>1 — 8 — 1951

அ. மு. ப.

# துன்பச் சுழல்

## I

## சுழலிலே பிறந்தான்

இன்பத்தின் இடையில் மக்கள் என்றும் இலங்க விரும்புகின்றனர். ஆனால் அந்த எண்ணம் எல்லோருக்கும் எப்போதும் நிறைவேறுவதில்லை. சிலர் பிறந்தநாள் தொட்டு மறையும் நாள் வரையில் அல்லலிடையிலே அவதிப்பட்டு மாய்கின்றார்கள். சிலர் இன்ப துன்பங்களை மாறிமாறித் துய்க்கின்றனர். ஒரு சிலர் என்றும் இன்பத்தில் இருப்பது போல் பாவனை செய்கிறார்கள். அவர் தம் வாழ்வை நன்கு ஆராய்ந்து பார்த்தால் சிற்சில சமயங்களிலாவது அவர் துன்பச் சுழலில் பட்டு உழல்கின்றார்கள் என்பது நன்கு விளங்கும். அதைப்போன்று என்றும் துன்பத்தில் பட்டுழலும் ஒருவனுக்கும் வரண்ட பாலைவனத்திடை பாய்ந்தோடி வற்றும் காட்டாறு போன்று, அங்கொன்றும் இங்கொன்றுமாக இன்பத்தேன் சுவைதரும்; ஆனால் அளவினதாக இருக்கும். துன்பச் சுழலிலேயே துடிதுடித்து வாடும் சிலருக்கு எதிர்பாராத வகையில் இன்பச் சோலை எதிர்ப்படும். பிறந்தநாள் தொட்டுப் பெருந்துன்பச் சுழலில் பட்டுழன்றவன் 'தனியன்.' தனியன் என்ற பெயரை அவனுக்கு அவன்பெற்றோர் வைக்கவில்லை. பெயர் சூட்டு விழா நடைபெறவில்லை. எப்படியோ அவன் யாருமற்ற அனாதை என்ற காரணத்தால் 'தனியன்' என்ற பெயரை அவனுக்குச்

கூட்டிற்று சமூகம். அவன் உண்மையில் தனியன்; தனிமைக் குணம் உடையவன்தான். எப்படி? அவன் வாழ்வில் புகுந்து பார்ப்போம்.

செல்லம்மாள் ஏழைக் குடியில் பிறந்தவளல்லள். அவளது முன்னோர் அவளுக்கென ஒதுக்கிவைத்த சொத்துக்களும் இருந்தன. அவள் கணவனாக எண்ணியவனும் அப்படி ஒன்றும் ஏழை அல்லன். நல்ல செல்வன் அல்லனாயினும் வாழ்வுக்குப் போதுமான அளவு செல்வம் பெற்றவன் தான். செல்லம்மாளின் பெற்றோர்கள் அவளை இளமையிலேயே விட்டுச் சென்றார்கள். அவள் தனது அத்தை வீட்டில் வளர்ந்து வந்தாள். அந்தக் காலத்தில்தான் அவள் சாதாரணப் பள்ளிப் படிப்பைப் படித்து முடித்தாள். தமிழில் நன்கு எழுதப்படிக்கக் கற்றுக்கொண்டாள். அவளது வளர்ச்சியில் மாறுதல் ஏற்பட்டது. கலியாணப் பருவமும் வந்துற்றது.

அவள் வாழ்ந்துவந்த இடம் ஒரு சிறு கிராமம். திருவண்ணாமலையிலிருந்து ஐந்துகல் தொலைவில் உள்ளது. அங்குள்ள கிராமப் பள்ளிக்கூடத்தில் நன்கு படித்தாள். அவளது பெற்றோர்கள் தம் சொத்துக்களைப்பற்றி எழுதி வைத்த உயில் சாசனம் அவளது அத்தையினிடம் தான் இருந்தது. அவள் மணப் பருவம் எய்திய காலத்தில் மணம் பேசப் பலர் வந்தனர். அவருள் அத்தை, அவளுக்குச் சொந்தமான ஒருவரது மகனைக் கணவனாகத் தேர்ந்தெடுத்தாள், அவன் சென்னையில் படிக்கின்றவனும் ; செல்வனும் ; அழகனும்; ஆண்மையுடையவனும். அவனைப் பற்றிக் கேள்வியுற்றாள் செல்லம்மாள். அவனையே மணக்க வேண்டும் என்றும் உறுதி செய்தாள். ஒரு நாள் திடீரென்று அவன் ஊருக்கு வருகிறான் என்று கேள்விப்பட்டாள். அவனைக் காணவேண்டுமென்று துடியாய்த் துடித்தாள். அவள் அத்தையும் அவனை வரவேற்பதற்கு நல்ல ஏற்பாடுகளைச் செய்தாள். செல்லம்மாள் விதவிதமான கறிவகைகள் செய்து வைத்தாள். எதிர்பார்த்தவன் வந்துவிட்டான்.

இருவருக்கும் மகிழ்ச்சிதான். அவனை நேரில்கண்ட செல்லம்மாள் தன்வசம் இழந்தாள். ஓடிஆடி அவனுக்குப் பணிவிடை செய்தாள். இரண்டொரு நாள் தங்கினன். பிறகு மறுபடியும் வருவதாகச் சொல்லிவிட்டுச் சென்னை சென்றான்.

திருமணம் நடப்பதற்குள்ளாகவே அவர்கள் காதல் முற்றிக் கனியத் தொடங்கிற்று. அவனும் அடிக்கடி வந்து சென்று கொண்டிருந்தான். புகைப்படங்கள் எடுத்தான்; போற்றினன். பாவிப் பேதைப்பெண் தன் உள்ளத்தை மட்டுமின்றி உடலையும் அவனுக்கு ஒப்படைத்தாள். அவனும் சிறிதும் களங்கமில்லாதவன்தான். கலியாணம் செய்து கொள்ளப் போகும் காரிகையிடம் முன் கூட்டிப் பெறும் இன்பம் தமிழ் மரபுக்கு ஏற்றதுதானே என எண்ணினன். தமிழ் இலக்கியங்கள் படித்தவன் அவன். ஆகவே 'கற்பெனப் படுவது களவின் வழித்தே' என்ற வகையில் காதல் வாழ்வைத் தொடங்கினன். செல்லம்மாள் கருவுற்றாள். அவள் காதலன் அவளை எப்படியும் இரண்டொரு திங்களில் மணப்பேன் என்று உறுதிகூறி இருந்தான். அந்த எண்ணத்தில் அவள் தன்னையும் மறந்திருந்தாள். ஆனல் நாளேற ஏற அவள் எண்ணம் தளர்ந்தது; உடலும் தளர்ந்தது. மாற்றம் அறிந்த அத்தை திடுக்கிட்டாள். உண்மை உணர்ந்தாள். செல்லம்மாள் பெற்ற வசவு எல்லைக்கடங்காது. அவளைப்பழித்த அதே கிழவிக்கு அந்த இளைஞனைப் பழிக்கத் தோன்றவில்லை. அவன் அடிக்கடி அங்குவந்தது குற்றமாகப் படவில்லை அவளுக்கு. ஆனல் அவன்முன் செல்லம்மாள் ஓடிஆடிப் பணிசெய்தது குற்றமாகப்பட்டது. வந்தவன் மயக்கமுற்றதைப் பற்றிய கவலை இல்லை அவளுக்கு. அவனை மயக்கிவிட்டாள் என்ற குற்றம் சாற்றப்பட்டாள் செல்லம்மாள். ஆம், ஆண் எப்படிவேண்டுமானலும் கொடுமை இழைக்கலாம். பெண்கள் சிறுபிழை செய்தாலும் மானக்கேடல்லவா? இருபதாம் நூற்றாண்டின் இடையில் நாகரிகம் பேசும் இந்த நாளிலும்கூட அது உண்மையாகத்தானே இருக்கிறது. ஏதோ பெண்களுக்குச் சமஉரிமை என்பதெல்லாம் ஏட்டிலும் மேடையிலும் தானே. நாட்டிலும்

வீட்டிலும் பெண்கள் எங்கே உரிமை தரப்பட்டுள்ளார்கள். யாரோ ஒருவர் இருவர் உயர்ந்த பதவியில் உள்ளதைக் கொண்டே நாடு திருந்திவிட்டது என்று சொல்லலாமா? செல்லம்மாள் வேதனை பெருகிற்று. அவளை மணம் புரிய வந்த அந்தத் தலைவன் அவள் இருந்த திசை நோக்கிப் பார்க்கவில்லை. ஆனால் அவன்மேல் குற்றமில்லை என்பதை அப்பேதைப் பெண் எவ்வாறு அறிவாள்? அவள் அத்தைக் குத்தான் என்ன தெரியும்? அவனுடைய பெற்றோர்கள் செல் லம்மாளின் நிலை அறிந்த பின்-அது தம்மகனால் வந்ததென அறிந்த பின்னும்-அவளைத் தங்கள் மகனுக்குக் கொள்ள நினைக்கவில்லை. அவன் எவ்வளவோ மன்றாடினான். தானே அதற்குக் காரணம் என்பதை எடுத்துக் காட்டியும் பெற்றோர் அவனை மேலும் மேலும் கடிந்தார்களே ஒழிய, அவளைக் கலியாணம் செய்துகொள்ள விடவில்லை. மற்றும் அவனை வடநாட்டுச் சாந்திநிகேதனத்தில் படிக்க உடனே அனுப்பி விட்டார்கள். என்ன செய்வான் இளைஞன். சீர்திருத்தக் காரன் தான்; செல்வனும் கூடத்தான். என்ன செய்ய முடிந்தது? பெற்றோர் சொல்லைத்தட்டி நடக்கமுடியவில்லை என்றாலும், அப்படிப் புறப்படும்போது செல்லம்மாளுக்கும் அவள் அத்தைக்கும் ஒரு கடிதம் எழுதிவிட்டுச் சென்றான். ஆனால் அவன் அறியான், அதுவே அத்தை உயிருக்கு 'உலை வைக்கும்' என்பதை.

விரைந்து செல்லும் கல்கத்தா மெயிலில் இளைஞன் வாடி வதங்கி வாழ்விழந்து செல்கின்றான். அதே நிலையில் அந்தக் குக்கிராமத்தில் தபால்காரன் ஒரு கடிதத்தைச் செல்லம்மாள் கையில் கொடுத்துவிட்டுச் செல்கின்றான். அன்று அத்தையிடம் கடிதம் வந்திருப்பதாகச் சொன்னாள் செல்லம்மாள். அவள் உத்திரவுப்படியே கடிதத்தைப் பிரித்துப் படித்தாள். அவளால் தொடர்ந்து கடிதத்தைப் படிக்க முடியவில்லை. கண்ணீர் விட்டாள். கோவென்று கதறினாள். அத்தைக்கும் ஒருவாறு செய்தி விளங்கிவிட்டது. அவன் அக்கடிதத்தில் தான் எவ்வளவு முயன்றும் செல்லம் மாளை மணக்கப் பெற்றவர்கள் இசையவில்லை என்றும், தன் னைத் தூரத்தே அனுப்பினாலன்றி வேறு வழியில்லையென்று

கண்ட பெற்ருேர் தன்னை வடநாட்டுக்கு அனுப்பிவிட்டார் கள் என்றும் எழுதி இருந்தான். செல்லம்மாளைத் தேற்றி முழுவதும் படிக்கக் கேட்டாள். 'பையன் நல்லவன், என் றேனும் வந்து மணம் செய்துகொள்ளுவான்' என்று எண் ணிய கிழவியின் உள்ளம் நூறு சுக்கலாய் நொறுங்கிற்று. அன்று படுக்கையில் வீழ்ந்தவள் மறுபடியும் எழுந்திருக் கவேயில்லை. அவள் உள்ளத்தைச் செல்லம்மாளைப் பற்றிய கவலையே பெரிதாக வாட்டிற்று.

நாள் நமக்கென நிற்பதில்லை யல்லவா! நாள் நாளாக, திங்கள் திங்களாகத் தேய்ந்துகொண்டே வந்தது காலம். கிழவி தன் முடிவு நாளை எண்ணிக்கொண்டே இருந்தாள். செல்லம்மாள் வயிற்றிலுள்ள சிறு கருவும் வளரத் தொடங் கிற்று. அவளது பத்தாந் திங்கள் தொடக்கமும், கிழவி யின் இறுதி யாத்திரையும் ஏறக்குறைய ஒரே சமயத்தில் நடந்தன. நிறை கருக்கொண்ட செல்லம்மாள் கிழவிக்குச் செய்யவேண்டிய சடங்கையெல்லாம் செய்து முடித்தாள். ஊரில் பலர் பலவாறு அவளைப் பழித்துரைத்தாலும், ஒரு பெரியவர்மட்டும் அவள்மீது இரக்கங் காட்டி அவளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தார். ஊரார் பலவாறு அவளை ஏசிஞர்கள். பாவம் அந்த ஊருக்கு அவள் மிகுந்த செல் வத்துக் குரியவள் என்பது தெரியாது. அவளும் தான் தன் தந்தை எழுதிவைத்த அத்தனை செல்வங்களையும் மதிப் பிட்டா வைத்திருக்கிருள். ஏதோ தந்தையின் உயில் அத்தை யிடம் இருந்ததால் அதன் மூலம் தனக்குச் சிறிது பொருள் வர வாய்ப்பு உண்டு என்ற ஒன்றுதான் அவளுக்குத் தெரியும். அவள் மேலும் அவ்வூரில் தங்க விரும்பவில்லை. சிறு கிரா மத்தில் உள்ளவர்கள் பெரும்பாலும் வம்பளப்பதிலேயே காலத்தைக் கழிப்பார்கள். 'அவர்கள் உண்டு, அவர்கள் வேலை உண்டு' என்று போவது கிடையாது. ஊர் முழு திலும் என்னென்ன நடக்கின்றது என்று கணக்கிட்டு, அவைகளைப் பற்றியே பேசிக்கொண்டிருப்பார்கள். சென்னை யில் ஒரே வீட்டில் குடியிருக்கும் இருவருக்குள் ஒருவர் குடிலில் நடப்பது மற்ருெருவருக்குத் தெரியாது. ஆனல் சிறு கிராமங்களில் ஊர் முழுதும் ஒரு சிறு செயலுக்காக

அமர்க்களப்படும். இல்லதும் பொல்லதுமாகப் பல கட்டுக் கதைகளும் கிளம்பும். அதுவும் ஏழைகளைப் பற்றியதாக இருந்தால் சொல்லவேண்டியதில்லை. வெறும் வாயை மெல்லு பவர்களுக்கு அவல் கிடைத்தால் கேட்கவா வேண்டும்? கணவனுக வரப் போகின்றவன் என்ற காரணத்தால் பேதைப் பெண் கருத்தழிந்த கதை அவ்வூரார் வாய்க்கு நல்ல பேச்சாயிற்று. அவர்கள் பேச்சுக்கள் செல்லம்மாளைச் சுட்டெரித்தன. தவிர, மகப்பெறு காலமும் அண்மையில் வந்துவிட்டது. இனி அந்தக் குக்கிராமத்தில் இருப்பதால் பயனில்லை என்பதைக் கண்ட செல்லம்மாள் அந்தப் பெரிய வரின் துணைக்கொண்டு அருகில் உள்ள திருவண்ணுமலை மருந் தகத்தை நாடிச் சென்ருள். தன்னுடன் பெற்ரேர் அளித்த அந்தச் சிறு பெட்டியைக் கொண்டு செல்ல அவள் மறக்க வில்லை. ஐந்து கல் தொலைவும் கடந்தாள். ஒரு கட்டை வண்டி அவளுக்குத் துணைசெய்தது. பெரியவர் ஊரார் வசவுக்கு அஞ்சி ஊர்க் கோடியிலேயே நின்றுவிட்டார். அவர்தான் அந்தக் கட்டைவண்டியில் அவளை ஏற்றி அனுப் பினுர். வழியில் வண்டிக்காரன் கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லப் போதும் போதும் என்ருகிவிட்டது அவ ளுக்கு. நல்லவேளை, அந்த வண்டிக்காரன் சற்று வயதான வனுக இருந்தான்; செல்லம்மாள் நிலைகண்டு உண்மையி லேயே அவனும் வருந்தினுன். எப்படியோ பொழுது விடி வதற்கும், அண்ணுமலை வந்து சேர்வதற்கும் சரியாக இருந் தது. வண்டியிலிருந்து இறங்கி, தட்டுத் தடுமாறிப் பிள் ளைப் பெறுதலைக் கவனிக்கும் பெரிய கிறித்தவ மருந்தகத்தின் வாயிலுக்கு முன் வந்துவிட்டாள் செல்லம்மாள்.

மருத்துவசாலையின் பெரிய மருத்துவர் அப்போது தான் நோயாளிகளைப் பார்வை யிட்டுவிட்டு, வாயிலண்டை வந்தார். இந்தத் துவண்ட செல்லம்மாளைக் கண்டதும் அவருக்கும் பரிவு உண்டாயிற்று. மருத்துவர்கள் பரிவுக் குணம் காட்ட வேண்டியவர்கள்தானே. ஆனுல் சென்னை யில் வாழ்கின்ற மருத்துவரில் சிலர் உயிரினும் பணத்தை ஓம்புகின்றவர்கள்தாம். அவர்களிடம் பரிவை விலைகொடுத்து வாங்க முடியாது. நாள்தோறும் பல ஏழைக் கிராம மக்

களைக் காணும் அந்த அண்ணுமலை மருத்துவர் மனமிரங்கிச் செல்லம்மாளின் முழு வரலாற்றையும் கேட்டறிந்தார். உடனே பெண் வைத்தியரைக் கூப்பிட்டுப் பிரசவ விடுதிக்குச் செல்லம்மாளை அழைத்துச் செல்ல ஏற்பாடு செய்தார். அவருக்கு நன்றி செலுத்திவிட்டுச் செல்லம்மாள் அப்பெண் மருத்துவருடன் தனி விடுதிக்குச் சென்று சேர்ந்தாள்.

பிரசவ விடுதியில் பலர் இருந்தனர். சில குழந்தைகள் பிறந்து இரண்டொரு நாட்கள்தான் ஆயின என்பதையும் கண்டாள் செல்லம்மாள். தனக்குப் பிறக்கப்போகும் குழந்தை எப்படி யிருக்குமோ என்று எண்ணமிட்டாள். ஒரு சிலர் பிறந்த குழந்தைகளுடன் கொஞ்சிக் குலவுவதைக் கண்டாள். இன்னும் சில நாட்களில் தானும் அவ்வாறு கொஞ்சிக் குலாவலாம் என்று கோட்டை கட்டினுள். வரவர அவளுக்கு வலி அதிகமாயிற்று. மருத்துவர்கள் பாலும் உணவும் கொடுத்தார்கள். முன்னுள் இரவு கண் விழித்த காரணத்தாலும், பயணக் களைப்பாலும் அப்படியே படுக்கையில் உறங்கிவிட்டாள். விழித்துப் பார்க்கும்போது நன்கு இருட்டி விட்டது. அருணையில் அந்த இருளைக் கிழித்துக்கொண்டு ஆண்டவன் கோயிலில் அடிக்கும் மணி ஒலி எங்கும் பரந்தது. ‘அண்ணுமலையானே, எனக்கு ஏன் இந்தக் கொடுமை?’’ என்று எண்ணினுள் செல்லம்மாள். குழந்தை பிறந்தால் பிறகு அக்குழந்தையுடன் மருந்தகத்தை விட்டு ‘எங்கே செல்வேன்’ என்று சிந்தை நொந்தாள். உடல் நோய் அதிகமாயிற்று. அவள் வருத்தம் கண்ட பெரிய பெண் வைத்தியர் தக்க நர்சுகளை உடன் இருக்கச் செய்தார். செல்லம்மாள் தன்னை மறந்தாள். எவ்வளவு நாழி அப்படி இருந்தாளோ அவளுக்குத் தெரியாது. நடு இரவின் அமைதி அந்த அருணையிலும் ஆணை செலுத்திற்று. மருந்தகத்திலும் ஓய்வுதான். ஆம், அந்த ஓய்வுக் கிடையில் தன் நினைவு வரப்பெற்ற செல்லம்மாள் கண்ணைத் திறந்தாள். ஏதோ ஒரு பெருஞ்சுமையை இறக்கிவிட்டவள் போல் காணப்பட்டாள். பக்கத்தில் உள்ள பச்சிளங் குழந்தை ‘ குவா குவா ’ என்று அழும் ஒலி அவள் காதில் விழுந்தது. ‘பையன் ’ என்று பக்கத்தில் உள்ளவர்கள்

பேசிக்கொள்வதைச் சிறிதே கேட்டாள்; மகிழ்ந்தாள்; அப்படியே மறுபடியும் தன்னை மறந்தாள்.

மறுநாள் பொழுது விடிந்தது. தனக்கு மகன் பிறந்து விட்டான் என்ற மகிழ்ச்சியில் திளைத்தாள் செல்லம்மாள். மருத்துவர் அவளுக்குச் செய்யவேண்டிய எல்லா வைத்திய முறைகளையும் செய்துவிட்டார்கள். குழந்தை 'குவா' என அழுதது. கட்டியணைத்தாள் செல்லம்மாள். நல்லபடியே பிரசவம் ஆயிற்றே என்று பேசிக்கொண்டார்கள் பலர். குழந்தை மிக அழகாக இருக்கிறான் என்றார்கள். முகத்தில் சந்தனப் பொட்டுப்போல எவ்வளவு அழகான அகலமான மச்சக்குறி என்றார்கள். அவற்றையெல்லாம் கண்மூடிய படியே கேட்டுக் கொண்டிருந்தாள் செல்லம்மாள். மெது வாகக் கண் திறந்து இளங்குழந்தையைக் கண்டாள். மகிழ்ந்தாள். ஆனால் அவள் முகம் கவலையால் மாறுபட்டது. இன்னும் சில நாட்களில் மருந்தகத்திலிருந்து விடுவிக்கப் பட்டால், பிறகு எங்குச் செல்வது, யாருடன் வாழ்வது, என்ற பெரும் சிந்தனை அவள் உள்ளத்தை உருக்கியது. ஏதோ தந்தையின் உயில் மூலம் சிறிது பொருள் வாழ்வுக்கு இருப்பினும் பொருள் ஒன்றுமட்டும் வாழ்வின் தேவை யைப் பூர்த்தி செய்யாது என்பதை அவள் உணர்வாள். அந்த உணர்வே அவள் உயிருக்கு இயமனாகவந்து சேர்ந் தது. நாள் ஒன்று இரண்டு மூன்று என்று உருண்டோ டிற்று. அவள் உடல் நிலை கவலைக்கிடமாக அமைந்து கிடந் தது. மருத்துவர்கள் அவள் மனநோயைமாற்ற எவ்வளவோ முயன்றார்கள். அவர்கள் தம் கிறித்தவ விடுதியிலேயே தங்கி, காலம் கழிக்கலாம் என்று சொல்லித் தேற்றிய போதிலும், அவள் மனம் மாறவில்லை. அப்படியே மகனைப் பெற்ற ஐந்தாம் நாள் அவனை விட்டுப் பிரியவும் நினைத்து விட்டாள்.

அவளது பெற்றோர்கள் கொடுத்த பெட்டியை அந்த மருந்தகத்தின் தலைமைப் பெண்மருத்துவரிடம் வைத்திருந் தாள். இறக்குமுன் அப்பெட்டியைப் பற்றிக் கூறினாள். அத்துடன் தன் மகன் நெற்றியில் உள்ள அடையாளத்தையும்

குறித்து அப்பெட்டியுள் இட்டாள். நன்கு பூட்டி முத்திரை இடச்செய்தாள். அதை அந்த மருத்துவ அம்மையிடமே கொடுத்து, பையன் பெரியவனான பின் வந்து கேட்டால் கொடுக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டாள். அந்த மருத்துவ அம்மை நல்லவர்கள் : கிறித்தவ சமயத்தவர். செல்லம்மாள் நிலைகண்டு இரங்கினார். அவள் மைந்தனுக்கு ஒரு குறையும் வாராது என்பதைப் பலவகையில் எடுத்துக் காட்டினார். 'இயேசு அவள் குழந்தையைக் கைவிடமாட்டான்' என்றார். 'அவளுக்கும் பரமண்டலத்தில் இடம் உண்டு' என்றார். அவள் சொன்னதைக் கேட்டாளோ இல்லையோ; செல்லம்மாள் உயிர் அந்த மருந்தகத்திலேயே ஐந்துநாள் குழந்தையின் பக்கத்திலேயே உடலைவிட்டு நீங்கிற்று. சிறக்க வாழப் பிறந்த செல்லம்மாள் நம்பிக்கைத் துரோகத்தின் காரணத்தால் உயிரிழந்தாள் என்றாலும் அந்தக் குழந்தையைவிட்டுச் செல்வது ஒன்றிலேதான் அவள் முகம் அமைதியுற்றதாகக் காணப்பட்டது.

நம் நாட்டில் கிறித்து சமயத்தார் செய்யும் தொண்டு போற்றற்குரியது. உலகம் வாழச் சிலுவை ஏறிய செம்மலின் அருட்பணியை மேற்கொண்ட பல்லோர் நாடெங்கணும் பணியாற்றுகின்றனர். அவர்தம் மெய்ம்மைப்பணி நாட்டில் இல்லையானால் இன்று நாம் காணும் இத்துணைக் கல்வி நிலையங்களும், மருத்துவ விடுதிகளும் இல்லை. பொதுவாக எண்ணின் நம்நாட்டின் கல்வியும் பிறநலன்களும் அச்சமயத்தாரின் அறப்பணியாலேயே வளர்ந்தன என்று கூறல் பொருந்தும். அத்தகைய கிறித்தவ குல ஆச்சிரமத்தைச் சேர்ந்த ஒரு மருந்தகத்தேதான் செல்லம்மாள் தனது மைந்தனை விட்டு உயிர் துறந்தாள். இறந்தவளை உரிய முறையில் அடக்கம் செய்தபின், அவளுக்கு உற்றார் உறவினர் யாரும் இல்லை என்பதை அறிந்த மருந்தகத்தார் அவள் இறந்த தகவலை ஒருவருக்கும் தெரிவிக்கவேண்டிய தேவையே இல்லாமல் போய்விட்டது. ஐந்து நாள் நிரம்பிய ஓர் அருமைக் குழந்தையை வளர்க்கும் பொறுப்பு அவர்களுக்கு ஏற்பட்டது. ஆனால் அவ்வாறு குழந்தைகளை வளர்ப்பது அவர்களுக்கு ஒன்றும் அரிய காரியமன்று.

குழந்தைகளை என் அருகில் வர விடுங்கள் ' என்று வேண்டிய இயேசுவின் பொன்மொழியைப் போற்றிய அவர்கள் இதுபோன்று பல குழந்தைகளை வளர்த்திருக்கிறார்கள். அவ்வாறு ஆதரவற்ற அனாதைக் குழந்தைகளை வளர்க்க அவர்கள் அனாதை ஆச்சிரமம் என்ற ஒன்று கட்டியிருக்கிறார்கள். ஆங்குச் சமயப் பெண் தொண்டர்கள் பெற்ற தாயிலும் மேலாகக் குழந்தைகளைப் பேணி வளர்க்கின்றார்கள். அப்படி வளர்த்தான பிறகு, அக்குழந்தைகள் பெரியவரானபின் தம் சமயத்திருந்து, அச்சமயப் பணி செய்ய முன்வருவார்கள் என்ற எண்ணத்திலேயே அவ்வாறு வளர்க்கின்றனராம். ஆனால் ஒருசிலர்தான் அவர்கள் எண்ணத்தை நிறைவேற்றுவார்கள் ; மற்றவர்கள் மனம்போன போக்கிலே வாழ்ந்து செல்வார்கள். இப்படி அந்த அனாதை இல்லத்தில் ஐந்து வயதுவரைக் குழந்தைகளை வைத்துக் காப்பாற்றுகிறார்கள். தாயுந்தந்தையுமற்ற பல குழந்தைகளுக்கு அது புகலிடம். நம் செல்லம்மாளின் குழந்தையும் அங்கேதான் வளர்ந்து வர ஏற்பாடு செய்யப்பட்டது. அவள் கொடுத்த பெட்டி மருந்தகத் தலைமைப் பெண்மருத்துவரிடம் நல்ல பாதுகாப்பில் வைக்கப்பட்டது.

அனாதை விடுதியில் ஐந்து ஆண்டுகள்வரை குழந்தைகள் குறைவொன்றுமின்றி வளரும். பிறகு அண்மையிலுள்ள ஏழை மாணவர் விடுதியில் அவர்களைக் கல்வி பயிலுமாறு அனுப்பிவிடுவர். அவ்விடுதியில் இவர்கள் இலவச உணவும் உடையும் உறையுளும் பெற்று, கல்வியும் கற்று வருவார்கள். இவர்களே யன்றி வேறுசில மாணவர்களும், அவர்தம் பெற்றோரால் அங்கு சேர்க்கப்படுவார்கள், அங்கே பயிலும் அனைவருக்கும் அனைத்தும் இலவசம்தான். அத்தகைய இல்லம் ஒரு சிலவே நாட்டில் உள்ளன. அருணையை அடுத்த அந்த இல்லத்தில்தான் நம் செல்லம்மாளின் மகன் ஐந்தாண்டுப் பருவம் கழித்துச் சேர்க்கப்பட்டான். அறியாச் சிறு பருவத்தை எப்படியோ கழித்த அந்த இளைஞன் தனது ஐந்தாம் ஆண்டில் அந்த இல்லத்தை அடைக்கலமாகக் கொண்டான்.

புதிய இடத்திலே அவனுக்கு அதிகமாகப் பிடிப்பு உண்டாகவில்லை. அவன் எல்லாவற்றிலும் புதுமை கண்டான். பெற்றோரும் உற்றாரும் யாரும் இல்லாத அந்தச் சிறுவனுக்கு அங்குள்ள சிலர் அடிக்கடி பெற்றோருடன் புகுவது கண்டு வியப்பாகவே இருந்தது. அவனுக்கு உலகம் ஒன்றும் தெரியாதே. பாவம், அவன் அந்த அனாதை விடுதியையே உலகம் என்று எண்ணியிருந்தான். தாயும் இல்லை. தந்தையும் இல்லை. அந்த விடுதிப் பணியாளர்களே அவனுக்குத் தாயும் தந்தையுமாயினர். ஆனால், அதே இடத்திில் சில மாணவர்கள் அவர் தம் உற்றாருடன் உறவு கொண்டாடுவதைக் காண அவனுக்கு வியப்பாக இருந்தது. எனினும் தம்போன்ற அனாதைப் பிள்ளைகள் சிலர் இருப்பதைக் கண்டு ஒருவாறு தேறியிருந்தான். ஆனால், இவன் அந்த அனாதைப் பிள்ளைகளிலும் வேறானவன் என்பதை உணர நீண்ட நாள் செல்லவில்லை. அந்த அனாதைப் பிள்ளைகளுக்குப் பிறந்த ஊர் உண்டு, பெற்ற தாய் உண்டு, உற்ற தந்தை உண்டு. எனினும் அவர்கள் இறந்த காரணத்தால் அப்பிள்ளைகள் அனாதைகளானார்கள். இவனுக்கு ஊர் ஏது? பிறந்தது இலவச மருந்தகத்தே. பெற்ற தாய் உண்டு; பெற்றதாய் யார் என்று அறியாமுன் இறந்தாள். தந்தையே இல்லாத தனியன் இவன். இவன் ஒரு புது முறையில் அனாதை அல்லவா! அந்த விடுதியில் உள்ள பெரிய மாணவர்கள் அவனை, குலம் குடி ஒன்றும் இல்லாதவன் என்று பேசி ஏசினர். அவன் அனாதையானாலும் அதிலும் ஒரு தனிப்பட்ட அனாதை என்று இகழ்ந்தார்கள். திருட்டுத்தனமாகப் பெற்ற பிள்ளையைவிட்டு இறந்தவள் அவன் தாய் என்று பேசிக் கொண்டார்கள். அவனது வாழ்க்கையே மற்றவர்களுடையதைக் காட்டிலும் தனியாக அமைந்திருந்ததால் அவனைத் 'தனியன்' என்றே வேடிக்கையாக அழைத்தார்கள். அது ஒரு வேடிக்கைப் பெயராக முதலில் இருந்தபோதிலும், பிறகு அந்தப் பெயரே அவனுக்கு உரிய பெயராக அமைந்துவிட்டது. யார் இருக்கிறார்கள் அவனுக்குப் பெயர் இடுவதைப்பற்றிக் கவனித்துக் கொள்ள?

பெயர் சூட்டு விழாவின் பேரால் பெரும்பணம் செலவு செய்யும் ஆரவாரம் அவனுக்கு ஏது? ஏதோ ஊரார் பெயரிட்டார்கள். உதவாப் பிள்ளைகள் தம் வரிசைக்கு வந்தபடி அவனைக் கேலி செய்வதற்காக இட்ட பெயர் பின்னாளில் அவனுக்கு உரிமைப் பெயராகி விட்டது. நாமும் அவனை அப்பெயரிட்டே தனியன் என்று அழைப்போம்.

தனியன் அந்த இல்லத்தில் நன்கு பயின்று வளர்ந்து வந்தான். அந்த விடுதி ஊருக்கு வெளியிலே மலை அடிவாரத்தில் அமைந்திருந்தது. எதிரிலே இரண்டொரு சத்திரங்களும் இருந்தன. அவ்விடுதியிலுள்ள பெரும்பாலான மாணவர்கள் தோற்றத்தில் மிக ஏழைகளாகவே காணப்பட்டனர். அந்த விடுதியை வைத்துப் போற்றும் அறக்காப்பாளர்கள் நல்லவர்கள். அனாதைப் பிள்ளைகளை ஆதரவுடன் ஏற்றுக் கல்வி கற்பித்து இயேசு சமயத்தை ஏற்கச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு பெருவாரியாகச் செலவு செய்தார்கள். நல்ல உணவும் உடையும் மாணவர்களுக்கு அளிக்கவேண்டும் என்று முயன்றார்கள். ஆனால் அங்குள்ள மேற்பார்வையாளர்கள் நடந்தவிதமோ வேறு வகையாக அமைந்தது. அங்கு வேலை பார்ப்பவர்களெல்லாம் தத்தம்மாலியன்றவரை பொருள்களை வீட்டுக்குக் கொண்டுசெல்ல வேண்டும் என்ற குறிக்கோளிலேயே வேலை செய்தார்கள். அவர்கள் சம்பளம் பெறுபவர்கள். கொடுத்தவர் தம் கொள்கை நிறைவேறினாலும், அன்றிக் கெட்டாலும் அவர்களுக்கு என்ன கவலை? விடுதிக்கு வரும் அரிசி மூட்டைகள் அப்படியே மாயமாக மறையும். பிறபொருகளும் வந்தவழி தெரியாது மாயமாகப் போகும். அதன் பயன் ஏழை மாணவர் வேளாவேளைக்கு அரைவயிற்றுக் கஞ்சிக்கும் அல்லல் உறுவதில் வந்து முடிந்தது. ஏதோ வீட்டில்தான் வாழ வகையில்லையே இங்காவது அமைதியோடு உண்டு, தங்கி, கற்பன கற்கலாம் என்று வந்த பல ஏழை மாணவர்கள் மனமுடைந்தனர். தனியனைப்போன்ற ஒரு சிலருக்குத்தான் கேட்பாரில்லை. ஆனால் பெரும்பாலான ஏழை மாணவர்கட்குத் தாய் தந்தையர் உண்டே! யார் இருந்தாலும் அங்கே அந்தப்

பணியாளர்கள் இட்டதுதான் சட்டம். பணம் கொடுக்கும் மேற்பார்வையாளர்கள் பல வேலைகளுக்கிடையே எப்படியோ வாரத்திற்கு ஒருமுறை வந்து வந்து கண்டு செல்வார்கள். அவர்கள் வரும்போது எல்லாப் பணியாளர்களும் உண்மை உழைப்பாளிகள் போன்று ஓடி ஓடி உழல்வார்கள். அவர்கள் இருக்கும் சில மணிநேரங்களில் அப்படியே எல்லா உலகங்களையும் ஒரு சேரக்கொண்டு வருபவர்களைப் போலத்தான் அரும் பாடுபடுவார்கள். வருபவர்களும் 'ஐயோ பாவம்; ஏழை மாணவர்களுக்கு இப்படி உழைக்கிறார்களே " என்று எண்ணி மகிழ்வார்கள். அந்த மேற்பார்வையாளர்கள் வருவது எப்படியோ அவர்களுக்குத் தெரிந்துவிடும். பல பணிகளிடையில் சுற்றுப் பயணம் பற்றி அறிக்கை வேறு முன்னமே வந்துவிடும், பிறகு கேட்பானேன்! எல்லா ஏற்பாடுகளும் நன்கு அமையும். அன்றைக்கு மாணவருக்கும் நல்ல உணவு தான். ஆனால் அவர்கள் போனபிறகோ அரைவயிற்றுக் கஞ்சிக்கும் அல்லல் தான் என்ன செய்வார்கள் ஏழைச் சிறுவர்கள்? தம் குறையை எடுத்துச் செல்லவோ தைரியமில்லை; சொன்னால் என்னென்ன தீமைகள் நேருமோ என்ற அச்சம். அதன் பிறகு அடியோடு விடுதியை விட்டே செல்ல வேண்டி நேர்ந்தால் என்ன செய்வது என்ற ஏக்கம். அப்படிச் சொன்னாலும், மேற்பார்வையாளர் இவர்கள் சொல்வதை நம்பவேண்டுமே. அவர்கள் எதிரில்தான் அனைத்தும் நன்றாக நடைபெறுகிறதே.

எத்தனை நாள்தான் இப்படி இன்னல் வாழ்வில் காலம் கழிப்பது? வாழவழி இருந்தும் வாடவிடும் அந்த நடுக் கொள்ளைக்காரர்கள் நாட்டில் இன்றைக்கும் அதிகம் என்பதை அந்தக் குழந்தைகளின் உள்ளம் எப்படி அறியும்? அந்த ஓர் இடத்தில்தான் அப்படி நடக்கிறது என்று அவர்கள் நினைத்தார்கள். ஆனால் உலக முழுதும் அது போன்ற கொள்ளைக்காரர்கள் நிறைந்த காரணத்தால்தான் நாட்டில் கொடுமைகள் நடைபெறுகின்றன என்று எண்ண அந்தச் சிறுவர்களுக்குத் தெரியாதே. ஏதேதோ நினைத்தார்கள்; நினைத்தும் ஒன்றும் செய்யவில்லை. நம் தனியன் அக்

கொடுமைகளுக்கு இடையில் சில ஆண்டுகளைக் கழித்துவிட்டான். வயது பத்துக்கும் மேலாயிற்று. இன்னும் இரண்டாண்டுகள் அங்கேயே இருந்து படிக்கலாம். ஆனால் அதற்குள் அவன் அவ் விடுதி வாழ்வுக்கு முற்றுப்புள்ளி ஏற்படும் என்று நினைக்கவில்லை.

வழக்கமாக நடைபெறும் அரைவயிற்று அல்லல் வாழ்வு நடைபெற்றுக் கொண்டு தான் வந்தது. மாணவர் உள்ளமோ துன்பத்தால் வெம்பியது. எப்படி இந்தத் துன்பத்தினின்றும் மீள்வது என்று ஒருநாள் திட்டமிட்டனர். அந்தத் தலைமைப் பணியாளரிடம் யாருக்கும் வாய்திறந்து பேசவும் நடுக்கம். எனவே அவர்களில் யார் இந்தக் குறையை நேரில் கேட்பது என்பதே பெருஞ் சோதனையாகிவிட்டது. நேராக மேற்பார்வையாளரிடம் சொல்லலாமென்றாலோ, அவர்களிடம் இச்சிறுவர்களை அண்டவிடுவதும் கிடையாது. எனவே எப்படியாவது தலைமைப் பணியாளனைக் கேட்டுவிடுவது என்றே முடிவு செய்தனர். கேட்பது யார் ? அதில் மறுபடியும் தயக்கம் உண்டாயிற்று. எனினும் நீண்ட அமைதிக்குப்பின் ஒரு முடிக்கு வந்தார்கள். ஒரு சீட்டுப்போட்டுப் பார்க்க வேண்டுமெனவும், அதில் யாருடைய பெயர் வருகிறதோ, அவனே கேட்கவேண்டுமெனவும் கண்ட முடிவினை அனைவரும் ஏற்றுக் கொண்டார்கள். எல்லா மாணவர் பெயர்களையும் எழுதிக் குலுக்கிப் போட்டார்கள். அதில் ஒரு சீட்டை எடுக்கவேண்டும். அதில் எவன் பெயர் இருக்கிறதோ அவனே தலைமைப் பணியாளனைக் கண்டு குறையைக் கூறவேண்டும் என்ற முடிவின்படி சீட்டு எடுக்கப்பட்டது. அது இத் தனியன் பெயர் குறிக்கப்பட்டதாக இருந்தது. அறிந்த தனியன் அலறினான். செய்வதறியாது திகைத்தான். எப்போதும் அவனைக் கேலிசெய்யும் மற்றைய மாணவர்கள் இப்போது அவனைச் சும்மா இருக்க விடுவார்களா? அவனை வற்புறுத்தினார்கள். திடமான எண்ணத்துக்குப்பின் அவனும் சென்று கேட்பதாக முடிவு செய்தான்.

எரிமலை வெடித்தது. இதுவரையும் தன்னை யாரும் எதுவும் கேட்டறியாத அந்தக் தலைமைப் பணியாளரின்

காண ஒவ்வொரு மடத்திலும் திரள் திரளாக மக்கள் தங்க ஆரம்பித்தனர். திருவண்ணாமலை முழுவதும் ஒரே மக்கட் கூட்டம். அந்தக் கூட்டத்தே ஆரவாரம் மிக்குக் காணப் பட்டது. வீடுதேடிவரும் ஏழைமக்களுக்கு உணவிடாத பெருஞ் செல்வரெல்லாம் அண்ணாமலையார் அடியிணைக்கீழ் ஆயிரம் ஆயிரமாகப் பரதேசிகளுக்குச் சோறிட வந்திருந் தனர். தம்தம் வீட்டைச் சீர்திருத்த முடியாத செல்வர் களெல்லாம் நாட்டையும் குலத்தையும் சீர்திருத்தப் போகி றோம் என்று கூட்டம்கூட வந்திருந்தார்கள். அவர்கள் ஆரவாரம் ஆண்டவன் காதில் விழுந்ததோ என்னவோ, சுற்றிப் பலகல் தொலைவு வரை கேட்டது. ஆரவாரத்துக்கு இடையிலே அந்த அமைதிப் பணி நடந்து கொண்டேதான் இருந்தது. ஏழைமாணவர் இல்லம் தன்தொண்டினைச் செய்து கொண்டேதான் இருந்தது. வருவோர் போவோர்க் கெல்லாம் நீரும், மோரும் சேர்ந்து வழங்கிக் கொண்டே இருந்தது அந்த விடுதி. அதற்கிடையில்தான் நாள்தோறும் தனியன் நூறு குடம் தண்ணீரைக் கிணற்றிலிருந்து எடுத்துக்கொண்டிருந்தான். அந்தத் தண்ணீர் ஆண்டவன் திருப்பணிக்குச் செல்லும் திருநந்தவனத்துக்குச் சென்று கொண்டிருந்தது. கிறித்தவ விடுதியானாலும் அந்த கிணற் றிலிறைக்கும் நீரெல்லாம் பக்கத்தில் உள்ள கோயில் நந்த வனத்தில் தான் போய்ச் சேரும். இப்படியே நாள்தோறும் விழா நடைபெற்று வந்தது.

விழாக் காணவந்திருந்தவர்களுள் காஞ்சிபுரம் பொன் னப்பரும் ஒருவர். அவர் ஆண்டுதோறும் திருவிழா ஆரவாரங்களை யெல்லாம் கண்டு கண்டு கண்குளிரச் செல்கின்றவர்தாம். இந்த ஆண்டு அவர் வந்திருந்த முறையே ஒருதனி. அவருடன் நான்கைந்து நண்பர்கள்; இந்த விடுதிக்கு எதிரில்தான் அவர்கள் தங்கிய அந்த வேளாளர் மடம் இருந்தது. வந்த நண்பர்களுடன் பொன் னப்பர் நாள்தோறும் மடத்துத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு பொழுது போக்குவர். இந்த ஆண்டில் அவரும் அவர் நண்பர்களும் வெள்ளித்தேரைப் பார்ப்பதற்கென்றே வந்திருந்தார்கள். அவர்கள் ஊரிலும் இந்த மாதிரி ஒரு வெள்ளித்தேர் கட்ட ஏற்பாடு செய்தார்கள். அதற்கென

வாயிலிருந்து கடுஞ்சொற்கள் வெளிவந்தன. இந்த அனுதைப் பயலுக்கா இவ்வளவு கர்வம் என்று பொங்கினுன் அவன். எத்தனையோ பெரிய பெரிய பிள்ளைகளெல்லாம் கைகட்டி வாய்பொத்தி மௌனியாகிக் காலம் கழித்துவிட்டுச் செல்ல, இவனுக்குமட்டும் என்ன இவ்வளவு திமிர் என்று ஏசினுன். ஒருவிதப் பற்றுமற்ற, உற்றவர் எவருமற்ற இந்தச் சிறிய பையனு என்னை எதிர்த்துக் கேட்பவன் என்று சீறினுன். அச்சீற்றத்தின் ஈற்றில், எதிர்த்த தனியனுக்கு ஏற்ற தண்டனை கொடுக்க வேண்டும் என்ற முடிவு செய்யப்பட்டது. வரப்போகின்ற கார்த்திகைத் திருவிழாவில் நாள்தோறும் அவன் மலை அடிவாரத்தில் ஆழமான கிணற்றிலிருந்து நூறு தோண்டி தண்ணீர் எடுத்து வெளியே கொட்டவேண்டுமென்றும், அந்தப் பத்து நாட்களிலும் அவனுக்கு ஒரு வேளை சோறுதான் அளிக்கப்படும் என்றும் அந்தத் தலைமைப் பணியாளர் தண்டனையைத் தீட்டினுர். மனம் ஒடிந்து மாழ்கினுன் தனியன். உடன் இருந்த மற்ற மாணவர்களெல்லாம் உளம் உலர்ந்து, சோம்பி, வாடி, ஓடி ஒளித்தனர். நாட்கள் சில ஓடின. அந்தத் திருவிழா நாளும் வந்தது. திருவண்ணுமலை கார்த்திகைத் திருவிழா என்ருல் சொல்லவேண்டியதில்லை. சுற்றுப்புறங்களில் உள்ள செல்வர்களுக்கெல்லாம் ஒரு பெரிய வேடிக்கைதான். வெள்ளி வாகனங்களுக்குக் குறைவில்லை. கள்ளர்களும் தான் அத் திருவிழாவில் வாழ்ந்தார்கள்.

திருவிழா தொடங்கி விட்டது பல ஆயிரக்கணக்கான மக்கள் நாட்டின் நாற்பக்கங்களிலிருந்தும் திரள் திரளாக வந்து குவியத் தொடங்கினர். அந்த ஊரில் சாதிக்கு ஒரு தங்குமிடம்; குலத்துக்கொரு கூட்டம் போட ஏற்பாடு; இந்நாட்டில் உள்ள சாதியைக் கணக்கிட விரும்பினுல் நேரே திருவண்ணுமலைக்குச் சென்று அங்குள்ள மடங்களை எண்ணிவிட்டால் போதும். அடடா! முதலியார் மடமென்ருல் அதில் தென்பாதி, வடபாதி; வன்னியர் மடமென்ருல் அதில் மேல்நாடு, கீழ்நாடு; இன்னும் இப்படியே எத்தனையோ வகைகள் அண்ணுமலையார் காட்சியைக்

அமைந்த அந்த குழுவார்தாம் பொன்னப்பருடன் கலந் துறைந்தவர். அவர்கள் அணுயைலயார் தேரினைக் கண்டு அதற்கும் ஒருபடி மேலாக எல்லாவிதத்திலும் சிறப்பாகக் கட்டவில்லையானால் தாங்கள் அந்த ஊரில் எதற்கு வாழ்வது என்று பேசிக்கொண்டது தெருவிலே போனவர்கள் காது களுக்குக் கேளாமல் இல்லை. இப்படியே நாள்தோறும் ஏதாவது பேசிக்கொண்டே இருப்பார்கள். பொன்னப்பர் மட்டும் அடிக்கடி விடுதியின் வாசலில் எதிரில் உள்ள கிணற்றில் அந்தச் சிறுவன் தண்ணீர் எடுப்பதை நாள் தோறும் கண்டுகொண்டே வந்தார். அத்தனை ஆழத் திலிருந்து அவ்வளவு தண்ணீரையும் இந்தச் சக்தியற்ற சிறுவன் ஏன் எடுக்கிறான் என்ற கேள்விக்கு அவரால் பதில் காணமுடியவில்லை. ஒருவேளை தோட்ட வேலைக் காரனது மகனாக இருக்கலாமோ என எண்ணினார். அதுவும் அவருக்குச் சரியெனத் தெரியவில்லை. ஒன்றிரண்டு நாட்கள் கவனித்தார். அது கார்த்திகைத் திங்கள் அல்லவா? ஒரு நாள் திடீரெனப் பெருமழை பெய்தது. ஆனால் அதற்கு அடுத்த நாட்காலையிலும் அச்சிறுவன் கிணற்றிலிருந்து நீர் எடுப்பதை விடவில்லை. அவருக்கு ஐயம் உண்டாயிற்று. நல்ல வேளையாக உடன் வந்திருந்தவர் யாவரும் எங்கேயோ தனித் தனி வேலையாக வெளியே சென்றிருந்தார்கள். அவர் மெள்ள அந்தக் கிணற்றண்டைச் சென்றார். அந்தப் பையனது வாடிய நிலை கண்டு வருத்தமுற்றார். அவன் தள்ளாடித் தள்ளாடி நாறுவது குடத்தை இழுத்துக் கொண்டிருந்தான். அவர் அருகில் சென்று அவன் வாடிய முகத்தைக் கண்டு "ஏன் அப்பா இப்படிச் செய்கிறாய்? இரவுதான் மழை பெய்ததே" என்றார். அவனால் பேச முடியவில்லை; ஒரு பெருமூச்சு; தொடர்ந்து கண்ணீருடன் கூடிய அழுகை; பொன்னப்பர் சுற்றுமுற்றும் பார்த்தார். தம் ஊரில் பல ஆயிரக்கணக்கான மக்கள் பட்டினியால் வாடியபோதிலும், அவர் வாட்டம் தீர்க்க நல்ல ஆலைகளோ, பிற பணிமனைகளோ அமைக்காது வெள்ளித்தேர் திருப் பணியில் உள்ளங்கொண்ட அவர் சிந்தையிலும் இரக்கம் உண்டாயிற்று. அப்பையனைக் கையைப்பிடித்து அழைத்துக் கொண்டே வந்து தம் மடத்தின் திண்ணைமீது உட்கார்ந்தார்.

பையனைத் தட்டிக்கொடுத்து அவன் தண்ணீர் இறைக்கும் காரணத்தைக் கேட்டார். அவன் கோவெனக் கதறி விட்டான். பிறகு மெள்ள மெள்ள அவனிடமிருந்தே எல்லாத் தகவல்களையும் கேட்டறிந்தார். "பையா, என்னோடு எங்கள் ஊருக்கு வந்து விடுகிறாயா!" என்றார் பொன்னப்பர். உண்மையிலேயே அவன் முகத்தைக்கண்டு அவர் உள்ளம் கசிந்தது. தமது கடைக்கும் இது போன்ற ஒரு பையன் தேவைதானே என்று எண்ணிற்று அவர் மனம். பையன் நல்லவனாகத்தான் இருப்பான் என்றது அவர் சிந்தை. அத்தனையும் கருதித்தான் அவனை உடன் வருகிறாயா என்று அழைத்தார். அவனது வாழ்வு ஒரு துன்பச் சுழல் என்பதை யார் அறிவர்? அப்பையன் —அறியாத பேதை—அந்தத் துன்புச் சுழலிலிருந்து நீங்கினால் ஏதேனும் உய்திபிறக்காதா என்று எண்ணினான். வாய் திறந்து பேசவில்லை; வருவதாகத் தலையை அசைத்தான். உடனே பொன்னப்பர் அவனையும் அழைத்துக்கொண்டு விடுதி முதற்பணியாளரிடம் சென்று அவனைத் தன்னுடன் அனுப்புமாறும், தான் அவனை வைத்துக் காப்பாற்றி முன்னுக்குக் கொண்டுவருவதாகவும் கூறினார். அவனை எப்படி ஒழித்துக் கட்டலாம் என்று எண்ணிய முதற் பணியாளர் அதுவே தக்க சமயம் என்று கருதினர். எனினும் விட்டுக் கொடுக்காமல் "அவனைப் போன்ற நல்ல பையனை" எப்படி விடமுடியும் என்றார். நல்ல பையன் என்றதும் பொன்னப்பருக்கு அவன் மேல் இன்னும் பற்று உண்டாயிற்று. பாவம், அவர் தம் கடைக்கு வேலைக்குப் பலரை வைத்து வைத்து ஏமாந்தவர். எப்படியாவது ஒரு நல்ல பையன் கிடைக்க மாட்டானா என்று பல நாட்கள் ஏங்கியவர். அப்படிப்பட்ட அவர் தனியனை விடுவாரா? எப்படியோ வேண்டி, முதற் பணியாளரிடம் இசைவு பெற்று அவனைக் காஞ்சிபுரத்திற்கு அழைத்துவர ஏற்பாடு செய்து விட்டார். முதற் பணியாளனும் "சனியன் தொலைந்தது", என்று ஆறுதல் அடைந்தான். விடுதி மேற்பார்வையாளர் கேட்டால் அவன் சொல்லாமல் ஓடிவிட்டான் என்று சொல்லவும் திட்டமிட்டு விட்டான். தனியன் பொன்னப்பருடன் காஞ்சிக்குப் பயணமானர்.

## II

# காஞ்சி வாழ்க்கை

காஞ்சிவாழ் பொன்னப்பர் மிக நல்லவர்; என்றாலும் பணம் சேர்ப்பதில் மட்டும் ஒரே குறிக்கோள் உடையவர். அவருக்கு வியாபாரங்கள் பல உண்டு. அவற்றைக் கவனித்துக் கொள்ளத்தக்க பிள்ளைகள் யாரும் இல்லை. அவருக்கு ஒரே மகள்தான் உண்டு. அவள் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தாள். பொன்னப்பருடைய மனைவியார் சற்று அவருக்கு மாறுபட்டவர்தான். ஏழை எளியவர்களைக் கண்டால் உண்மையிலேயே பொன்னப்பருடைய உள்ளம் இரங்கும். அவர் வாழ்க்கைத் துணைவியோ ஏழை எளியவரைக் கண்டால் வாட்டாது விடமாட்டார். வேலைக்காரர்களெல்லாம் அந்த அம்மையார் கையில் படும்பாட்டை அவர்கள் வாயாலேதான் கேட்கவேண்டும். ஏழை மாணவர்களை வீட்டில் வைத்துக் காப்பாற்றி உணவிட்டு உதவவேண்டும் என்பது பொன்னப்பரின் கருத்து. ஆனால் அம்மையார் அதற்குச் சற்றும் இடங்கொடுக்கமாட்டார்கள். அவர்களுக்கிருந்ததெல்லாம் தன் அண்ணன் மகன் நல்லநாயகம் நன்றாக வியாபாரத்தில் மேலோங்கி வரமாட்டானா என்ற எண்ணந்தான். நல்லநாயகம் தாய் தந்தை அற்றவன். தன் தந்தையாருடன் கூடப்பிறந்த காரணத்தால் பொன்னப்பருடைய செல்வ மனைவியாரை அடுத்து அவன் அங்கேயே வாழ்ந்து வந்தான். அந்த அம்மையாருக்கும் அவனை எப்படியாவது முன்னுக்குக் கொண்டுவந்து தன் ஒரே மகளையும் அவனுக்கு மணம் செய்துகொடுத்து எல்லாச் செல்வத்துக்கும் அவனையே உரியவனாக்கி விடவேண்டும் என்ற ஒரே எண்ணந்தான். ஆனால் மனிதன் எண்ணியப்படிதான் எதுவும் நடப்பதில்லையே. நல்லநாயகம் எங்கோ இளமையில் தாய், தந்தையருடன் நாட்டுப்புரத்தில் இருந்தவன்தான். அத்தை வீட்டுச் சீரும் செல்வமும் சேர்ந்த பிறகு அவன் அடியோடு மாறிவிட்டான். அதுவும் காஞ்சிபுரம் போன்ற நகரங்களில் வாழும் இளைஞர் மனம் மிக எளிதில் மாறக் கூடியதுதானே. அத்தை வீட்டுச் செல்வ போகம் அவனை அறிவற்றவனாகச் செய்தது. படிப்புக்கு

எப்போதோ முடிவு கட்டிவிட்டான். ஏழாம் வகுப்புவரை எட்டிப்பார்த்தான். அதற்குள் அவனைப் பல பழக்கங்கள் பற்றிக்கொண்டன. பாவம் அவன்தான் என்ன செய்வான். அத்தை வீட்டுப் பணமும் அண்டை அயலார் வீட்டு நட்பும் அவனை எங்கோ பற்றிச் சென்றன. எவ்வளவு அரும்பாடு பட்டும் பொன்னப்பரால் அவனைச் சீர்திருத்த முடியவில்லை. தம்மகளை அவனுக்குக் கொடுக்க விரும்பவில்லையானாலும், அவன் கெட்டுவிடுவதைப்பற்றி அவரால் வருந்தாதிருக்க முடியவில்லை.' அடிக்கடி பணம் கொடுத்து அவனைக் கெடுக்கும் தன் மனைவியாரைக் கண்டித்தும் பார்த்தார். வீட்டில் அவர் அதிகாரம் சற்று குறைவுதான். எனவே அதனாலும் பயனில்லை மற்றொரு வகையாலும் அவன் கெட்டு வந்தான். தனது வியாபாரக்கடையில் அவனை இரவில் காவல் இருக்கப் போட்டார். அதில் அவருக்கு விருப்ப மில்லைதான். என்றாலும் மனம் போனபடி இரவெல்லாம் எங்கேயாவது சுற்றித் திரிந்தவனை இப்படிக் காவல் ன்று கட்டுப்படுத்தினால் ஒரு வேளை அடங்குவான் என்று நினைத்தார். மாலையில் தாம் வரும்போது கதவைப் பூட்டிக் கொண்டு வந்துவிடுவார். இரவு அவன் சாவியை எடுத்துக் கொண்டுபோய் வெளிக் கதவைத் திறந்து படுத்துக்கொள்ள வேண்டும் என்ற ஏற்பாடு. சில வேளைகளில் அவன் எங் காவது சுற்றிவிட்டு அப்படியே அங்குச் சென்று படுத்துக் கொள்ளும் பழக்கமுடையவனாதலால் வீட்டுக்கு வந்து சாவி எடுத்துக்கொள்ள முடியவில்லை. தனக்கென வேறு சாவி வைத்துக்கொள்வான். அவன் விருப்பம்போல் வேடிக்கை யெல்லாம் முடித்து விட்டு, இரவில் அங்குவந்து படுத்துக் கொள்ளுவான். இவற்றையெல்லாம் அறிந்த பொன்னப்பரும் அவர் மனைவியும் மிகவும் வருந்தினார்கள். என்றாலும் மனைவியார் அவன்மீது கொண்ட அன்பின் காரணத்தால் ஒன்றும் செய்ய இயலவில்லை. தன் மகளை அவனுக்குக் கொடுப்பதுபற்றிப் பல நாட்கள் இருவரும் வாய்ச்சண்டை யிடுவார்கள். நல்லநாயகமோ ஆடாத ஆட்டமெல்லாம் ஆடி இராப்பகலற்றவிட்த்தே வாழ்ந்துவந்தான்.

இப்படிப்பட்ட நிலையில்தான் பொன்னப்பர் தனியனை அழைத்துக்கொண்டு அண்ணாமலையிலிருந்து காஞ்சி வந்து

சேர்ந்தார். வரும் வழியிலேயே அவனோடு பேசிக்கொண்டு வந்ததிலிருந்து அவருக்கு அந்தப் பையன் நன்கு பிடித் திருந்தது. வீட்டுக்கு வந்ததும் தன் மனைவியிடம் புதிதாக வந்த பையனைப்பற்றி விளக்கிக் கூறி அவனைத் தன் வீட்டி லேயே வைத்துக் கொள்ள விரும்புவதையும் சொன்னார். அம்மையாருக்கு உள்ளூர விருப்பம் இல்லைதான். என்றாலும் வேலைக்கு ஆள் இல்லை என்ற காரணத்தினாலும், சிறிய பையன்தானே என்ற எண்ணத்தாலும், ஆதரவற்ற அனாதைப் பிள்ளையாதலால் சொன்னதைக் கேட்டுக்கொண்டு கிடப்பான் என்ற துணிவாலும் 'சரி' என்று தன் இசைவைத் தெரிவித்தார் அம்மையார். பையனிடமும் சற்று அன்பாக இருப்பதாகக் காட்டிக்கொண்டார். பொன்னப்பர் அன்பில் திளைத்த தனியனும் திறந்த உள்ளத்தோடு அவர்களிடம் நன்கு பழகினான். பல வேலைகளைச் செய்தான். இதுவரையில் விடுதியன்றி வேறிடத்தில் இல்லாத அவனுக்கு இந்த மனை வாழ்க்கை சற்று மகிழ்வை அளித்தது. என்றாலும் பாவம், அந்த ஏழைப் பையன் தனது துன்பச் சூழல் இங்கும் நல்ல நாயகமாகவும் அம்மையாராகவும் உருவெடுத்து வந்திருக்கும் என எண்ண முடியுமா?

தனியனை முதல் முதல் கண்டபோதே நல்லநாயகத்துக்கு என்னவோ போன்றிருந்தது. அவனைத் தனக்கு ஒரு பகை வனாகவே, அவன் கருதினான். வயதில் இளையவனானாலும் அவனால் தனக்கு ஏதோ கொடுமை வரும் என்று எண் ணினான் அவன். ஆகவே அவனை எப்படியும் அந்த வீட்டிலிருந்து ஒழிக்கவேண்டும் என்று ஒரே முடிவு செய்து கொண்டான். தன் அத்தையோடு கலந்து எப்படியும் அவனை ஒழித்து விடுவது என்று முடிவு செய்து அதற்கென வழிகளும் ஆராயத் தொடங்கிவிட்டான். ஆனால் பொன்னப் பரின் மகள் மட்டும் வந்த தனியனிடம் ஒரு தனி அன்பு காட்டிவந்தாள். அனாதைப் பிள்ளையானாலும் அவன் முகத் தில் காணும் ஒளியும் புன்னகையும், அசைவிலா உழைப்பும் அவளை மகிழ்வித்தன. எப்போதும் அவனிடம் பேசிக் கொண்டிருப்பதில் அவளுக்குப் பெருவிருப்பம். இரண் டொரு முறை தாய் அவளைக் கடிந்து கொண்ட போதிலும்

கூட, அவள் அந்த வேலைக்காரப் பையனோடே விளையாடிக் கொண்டிருந்தாள். தந்தையார் தனக்கு வாங்கிவரும் தின் பண்டம் முதலியவற்றை அவனுக்குக் கொடுப்பாள். பொன்னப்பரும் அதுபற்றி மகிழ்ந்தாரே அன்றி அக்குழந்தையைக் கடிந்து கொள்ளவில்லை. ஆனால் நல்ல நாயகமும் அவன் அத்தையும் எப்படியும் தனியனை ஒழித்துவிட்டு மறுவேலை பார்ப்பதென்று முடிவு செய்து விட்டார்கள். இப்படி நல்லவர் இருவர் ஒருபுரம் பரிவு காட்ட, மற்றவர் இருவர் ஒருபுறம் துன்புறுத்தக் காஞ்சியிலே தனியன் சில காலம் வாழ்வைக் கடத்தி வந்தான்.

பொன்னப்பர் அடிக்கடி வெளியூர் செல்வது வழக்கம். அவர் வியாபாரம் அப்படிப்பட்டது. மற்றும் ஊரிலுள்ள மற்றவர்களுக்கு உதவவேண்டும் என்ற பெருநோக்கம் உடையவர். எனவே பொது வேலைகளுக்காகவும் அவர் அடிக்கடி வெளியூர் செல்வார். அதனால் வீட்டில் அவர் மனைவியார்தான் எல்லாம். அவர் தம் சிறு பெண் காலையில் பள்ளிக்கூடம் சென்றுவரும். நல்லநாயகமோ எங்கேயாவது சுற்றிவிட்டு உணவு வேளைக்கு விட்டுக்கு வருவான். அவன் வரும்போது தனியன் அவன் கண்களில் படலாகாது. பட்டால் சரியான அடிகொடுப்பான். தலையில் குட்டுவான். போகும்போதும் வரும்போதும் முதுகில் அடித்துவிட்டுச் செல்வான். இவற்றையெல்லாம் அத்தை கண்டாலும் ஒன்றும் கேட்டுக் கொள்ளமாட்டாள். இரண்டொருமுறை தனியன் தான் அவனிடம் பெறும் அடி உதைகளை அந்த அம்மையாரிடம் எடுத்துச் சொல்லியும், 'எங்கே குறைந்து விடுகிறது; வாங்கிக்கொள்ளேன் கிடக்கிற உடம்பலே என்று சொன்னது அவன் உள்ளத்தைச் சுட்டது. மற்றும் எப்போது பார்த்தாலும் சிடுசிடு என்றிருக்கும் அந்த அம்மையாருடைய அந்தத் தோற்றமும் அவனை வாட்டிற்று. என்றாலும் பொன்னப்பரின் கருணை தோய்ந்த முகமும், அவர் மகளின் அன்புச் சொற்களுமே அவனது துன்பச் சுழலை மறக்கச் செய்தன எப்படியோ வாழ்ந்து வந்தான்.

பொன்னப்பருக்கு, நல்லநாயகம் செய்யும் கொடுமைகளும், அவன் கடையில் தங்காமல் ஊர் திரியும் ஏமாற்றமும்

நன்கு விளங்கிவிட்டன. அவனை வீட்டை விட்டுப் போகச் சொல்லி விடலாமா என்று கூடச் சில சமயங்களில் அவர் நினைப்பதுண்டு. ஆனால் வீட்டு அம்மையார் ஆணையை மறுக்க அவருக்குத் தைரியம் கிடையாது. ஒன்றுமட்டும் உறுதி செய்துவிட்டார். தன் மகளை அவனுக்குக் கொடுப்பதில்லை என்பதே அது. மற்றும் கடையில் அவனை மட்டும் தனியாகப் படுக்கவைக்க வேண்டாமென்றும், தனியனையும் உடன் அனுப்பலாம் என்றும் திட்டமிட்டார். அத்திட்டத்தின்படியே பகலில் வீட்டு வேலைகள் ஆனதும் இரவில் தனியன் கடையில் படுத்துக்கொள்ள ஆரம்பித்தான். கடைக்கு இரவு எட்டரை மணிக்கெல்லாம் சென்றுவிடுவான். அங்கு பத்து அல்லது பத்தரை மணி வரையில் ஏதாவது படித்துக்கொண்டிருப்பான். பொன்னப்பர் அவன் படிப்பதற்காகச் சில நூல்கள் வாங்கிக் கொடுத்திருந்தார். மற்றும் அவர் மகள் வேறு தம் பாடசாலை நூல் நிலையத்திலிருந்து நல்ல கதை நூல்களைக் கொண்டுவந்து கொடுப்பாள். அவற்றையெல்லாம் அவன் படித்துக் கொண்டிருந்து பெரும்பாலும் பதினொரு மணிக்குப் படுத்துக் கொள்வான். சில நாட்களில் அதற்குள் நல்லநாயகமும் ஊரையெல்லாம் சுற்றி விட்டு வந்துவிடுவான்.

ஒருநாள் பொன்னப்பர் வெளியூருக்குச் சென்றிருந்த சமயத்தில் நல்லநாயகம் எல்லைமீறித் தனியனை அடித்து விட்டான். அவன் ஏழையானாலும்—அனாதையானாலும் உணர்வு கூட அற்ற மரக்கட்டையா என்ன? அவனுக்குக் கோபம் வந்தது. எனினும் எதிரில் நின்றிருந்த அந்த அம்மாவின் கொடிய முகத்தைக் கண்டு தலைகுனிந்து ஒன்றும் சொல்லாது உள்ளே சென்றுவிட்டான். என்றாலும் அவன் உள்ளம் கொதித்துக் கொண்டுதான் இருந்தது. எப்படியாவது நல்லநாயகத்தைப் பழிக்குப் பழிவாங்க வேண்டும் என்று உறுதிசெய்து கொண்டான். அதனால் எதுவந்தாலும் வரட்டும் என்று அஞ்சாது தன் செயலை ஆற்றத் திட்டமிட்டுக் கொண்டான். வெளியூர் சென்ற பொன்னப்பர் மாலை வீடு திரும்பினார். வீட்டு வேலைகளெல்லாம் முறைப்படியே நடந்தேறின.

அன்று இரவு வழக்கம் போலக் கடைக்குப் புறப்பட்டான் தனியன். அன்றும் ஏதோதோ சிறிது நேரம் படித்துக் கொண்டிருந்தான். மணி பதினொன்றாகியும் நல்லநாயகம் வரவில்லை. அவன் நேரம் கழித்து வந்து இவனுடன் வலுச்சண்டை போடவேண்டும் என்ற நோக்கத்தோடேயே நேரம்கழித்துவர இருந்தான். இவனும் அவனிடம் இரண்டிலொன்று பார்த்துவிடுவது என்று எண்ணினவனாய்ச் சரியாகப் பதினொரு மணிக்குக் கதவை அடைத்து உள்தாள் இட்டுப் படுத்துக்கொண்டான். நல்லநாயகம் சரியாகப் பன்னிரண்டு மணிக்கு வந்து கதவைப் பலமுறை தட்டினான். தனியன் சற்றும் அசைந்து கொடுக்கவில்லை. கதவைத் திறக்கவுமில்லை ஏனென்று கேட்கவுமில்லை. நல்லநாயகத்துக்கோ ஆத்திரம் மூண்டது. என்ன செய்வது? இடையில் கதவு குறுக்கிட்டிருந்ததே. அதிகமாக ஏதாவது பேசினாலும் அந்தநடு இரவில் அங்கென்ன அமளியென்று அடுத்த கடைகளிலுள்ளவர்களெல்லாம் விழித்துக் கொள்வார்கள் என்ற பயம் எனவே எல்லாவற்றையும் பொழுது விடிந்தால் பார்த்துக்கொள்ளலாம் என்ற எண்ணத்தோடு அப்படியே எதிரில் உள்ள கடப்பைக்கல்மீது படுத்து உறங்கி விட்டான்.

மறுநாள் பொழுது விடிந்து கிழக்கே சூரியனும் தோன்றி விட்டான். அப்போதுதான் அயர்ச்சி தெளிந்து எழுந்தான் நல்லநாயகம். உள்ளே தனியன் எழுந்து கதவிடுக்கிலே எட்டிப்பார்த்தான். வாயிற்படியில் குறுக்கே இருக்கும் கடப்பைக்கல் மீது நல்லநாயகம் படுத்து உறங்குவதைக் கண்டான். அவனிடமிருந்து தப்ப வழியில்லையா என்று எண்ணிக் கொண்டே அப்படியே உள்ளே உட்கார்ந்து விட்டான். நேரம் ஆனதுகூடத் தெரியவில்லை. அந்த நிலையிலும் நேற்று அவன் தன்னை அடித்ததற்குப் பழியாக அவனை வெளியில் படுக்க வைத்து விட்டோம் என்ற மகிழ்ச்சி. என்றாலும் எப்படி வெளியே போவது என்ற அச்சம் அவனை வாட்டத் தொடங்கிவிட்டது. அதற்குள் அவனும் எழுந்து கதவைத் தட்ட ஆரம்பித்தான். கூச்சலிட்டான். வெளியே பலர் கூடிவிட்டனர். கதவைத்

திறக்கப் பலர் வற்புறுத்தினர். தனியன் நல்லநாயகம் தீங்கிழைப்பான் என்று கூறியும் அருகிருந்தவர் தாங்கள் பார்த்துக் கொள்வதாகச் சொல்லவே கதவைத் திறந்தான். அதுவரை சற்றுத் தொலைவிலிருந்த நல்லநாயகம் தாண்டி இடித்துக்கொண்டு வந்து அவனை ஓங்கி அடிக்கப்போனான். அருகிலேயே யிருந்தவர்கள் தடுத்தார்கள். அவன் எதற்கும் கட்டுப்படவில்லை. வாயில் வந்தவாறெல்லாம் திட்டினான். ஒரு அடியும் அடித்தான். அத்தனையும் பொறுத்துக் கொண்டு அமைதியான முகத்தோடு இருந்தான் தனியன். அருகிருந்தவர்கள் நல்லநாயகத்தை எவ்வளவோ அடக்கினர். அவன் வாய் அடங்கவேயில்லை, ஏதேதோ பேசினான். 'ஊர் பேரற்ற அனாதை. எவளோ எவனுக்கோ பெற்று எங்கோ போட்டு விட்டுப்போன வேசி மகன்' என்று எல்லா ஆத்திரமும் கொட்டக் கொக்கரித்தான் அவன். அது வரையில் பொறுமையோடு இருந்த தனியன் முகம் சிவந்தது. தன்னைப் பற்றி என்னகுறை கூறினாலும் பொறுத்துக்கொண்டு தான் இருந்தான். ஆனால் தன் தாயைப்பற்றி—மறைந்த அன்னையைப்பற்றி–தானே அறியாத தன் அன்னையைப் பற்றி நல்லநாயகம் பேசிய அந்தச் சுடு சொற்கள் அவன் உள்ளத்தைத் தொட்டன. ஓவென்று கூச்சலிட்டான். அது வரையில் இல்லாத ஓர் உணர்வு அவனை ஆட்டிவைத்தது. துள்ளிக்குதித்தான்; தாண்டினான். நல்லநாயகத்துக்கு எதிரில் சென்றான்; அப்படியே அவன் கன்னத்தில் எட்டி ஓங்கி ஓர் அறைவிட்டுத் திரும்பி ஓடினான். எங்கும் நிற்கவில்லை: நேரே பொன்னப்பர் வீட்டுக்குச் சென்றான். நல்லநாயகமும் அவனைத் தொடர்ந்து ஓட ஆரம்பித்தான். என்றாலும் சண்டையை முற்றவிடலாகாது என்று அருகிலிருந்தவர் அவனைப் பிடித்துக் கொண்டார்கள்; அனைவரும் பொன்னப்பர் வீட்டுக்கு வந்தார்கள். தனியன் அவர்கள் வருவதைக் கண்டு அஞ்சி ஒரு அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டான். அனைவரும் வீடு வந்தார்கள். வீட்டு அம்மையாரும் தம் செல்வன் நல்லநாயகம் அடியுண்டதை எண்ணித் தனியனை வாயார வைதாள். அவனை வெளியே வரும்படி அழைத்தாள். அவன் எதற்கும் வெளியே தலை காட்டவில்லை. அதற்குள் வேறு வேலையாக வெளியே சென்றிருந்த பொன்

னப்பர் வீடு திரும்பினர். வீட்டில் கூட்டம் கூடியிருப்பதையும், அக்கூட்டத்தின் காரணத்தையும் அறிந்தார். தானே அந்த அறையின் அருகில் சென்று தனியனை வருக என்று அழைத்தார். பொன்னப்பர் வந்துவிட்டார், தனக்குக் கவலையில்லை என்று கருதினவனுய்த் தனியன் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். எதிரே தனியனைக் கண்டதும் நல்லநாயகத்துக்குச் சீற்றம் மிக்கது. என்ருலும் பொன்னப்பரின் முன் ஒன்றும் செய்ய இயலாமல் அப்படியே அசைவற்று இருந்தான். பொன்னப்பர் அனைவரையும் இருக்கச் சொல்லிவிட்டு, தனியனை அருகே அழைத்து நடந்ததைக் கூறச் சொன்னர். அவன் வந்த நாள் தொடங்கி நடந்தவற்றை யெல்லாம் விடாது கூறினன். அன்று தொட்டு நல்லநாயகத்தாலும், அவன் அத்தையாலும் நாள்தோறும் அவன் சிறுமை அடைவதையெல்லாம் எடுத்துச் சொன்னன். அவன் எவ்வாறு பொறுத்து அவை யெல்லாவற்றையும் ஏற்று வந்தான் என்பது பற்றியும், அன்று தன் தாயினைப் பழிக்கவே தான் அவனை அடிக்க நேர்ந்தது என்பது பற்றியும் விளக்கி உரைத்தான். எல்லாவற்றையும் கேட்ட பொன்னப்பர் தனியன்மேல் இரக்கங்கொண்டார். என்ருலும் அடித்தது தப்பு என்று மேலாகக் கண்டித்தார். நல்லநாயகத்தையும் கண்டித்து இனி ஒருவரோடொருவர் பேசவும் கூடாது என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்கள். அனைவரும் சென்றுவிட்டார்கள். அன்று முதல் தனியன் கடையில் சென்று படுக்கவேண்டும் என்ற முறையும் இல்லை.

தனிய்ன் தனிமையில் பலப்பல எண்ணினன். பிறந்த நாள் தொட்டுத் தொடர்ந்துவரும் துன்பச் சுழலை நினைத்தான். தன் தாய் தந்தையரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லையே என்று சிந்தை நொந்தான். அன்றைப் பொழுது கழிந்துகொண்டே வந்தது. பொன்னப்பர் வீட்டில் இல்லாத போதெல்லாம் அவர் மனைவியார் அவனைப் பழித்துரைக்கும் ஏச்சும் பேச்சும் அவனை மேன்மேலும் வருத்தின. இன்னும் தொடர்ந்து இருந்தால் அங்கு என்னென்ன கொடுமைகளை ஏற்க நேருமோ என்று எண்ணிற்று அவன் ஏழை யுள்ளம். மாலை வரையில் தன் வேலைகளையெல்லாம் ஒரு குறைவு

யில்லாது செய்து கொண்டேதான் வந்தான். என்றாலும் உள்ளத்தில் ஏதோ ஒரு எண்ணம் உறுத்திக்கொண்டே தான் இருந்தது. அன்றைக்குள் ஒரு முடிவுக்கு வரவேண்டும் என்று முயன்றான். இரவும் வந்தது. அவன் முடிவும் அவனுக்கு நன்கு புலனாயிற்று.

அன்றைக்கு அவன் கடைக்குச் செல்லவேண்டியதில்லை. வீட்டிலேயே படுத்துக்கொள்ள வேண்டும். எப்படியும் அன்று இரவு அவன் அவ்வீட்டைவிட்டுப் புறப்பட்டுச் செல்லவேண்டும் என்று முடிவு செய்துவிட்டான். எனவே அவன் தனது படுக்கையை வெளித் தாழ்வாரத்தில் போட்டுக் கொண்டான். பொன்னப்பர் உள்ளேபடுக்கச் சொல்லியும் அவன் கேட்கவில்லை. இரவில் புறப்பட்டுப் போகும்போது கதவைத் திறந்துவிட்டால் யாராவது உள்ளே புகுந்தால் என்ன செய்வது என்பது அவன் எண்ணம். படுத்துக் கொண்டான். ஏதாவது கடிதம் எழுதி வைத்துவிட்டுச் செல்லலாமா என நினைத்தான் அவன். ஆனால் அக்கடிதத் தில் "நல்லநாயகத்தைப் பற்றியும், அந்த அம்மையாரைப் பற்றியும் தானே குறைகள் எழுதவேண்டும். ஏன் நான் சென்ற பிறகும் அவர்கள் என்னைப்பற்றிச் சண்டையிட்டு அவர்தம் அமைதியைக் குலைக்க வழிதேடவேண்டும். ஏதோ நான் அனாதையாக வந்தேன், அப்படியே போகின்றேன்" என்று முடிவு செய்தான், ஆனால் அதுவரையில் எங்கே செல்வது என்ற எண்ணமே இல்லை. புறப்படுவதற்குச் சற்று முன்தான் அந்த எண்ணம் உண்டாயிற்று.

சென்னையைப் பற்றிப் பலமுறை கேள்விப் பட்டிருக் கிறான் அவன். எப்படிப்பட்டவர்கள் சென்றாலும் அங்கு வேலை சம்பாதித்துக்கொண்டு, ஏதோ வயிற்றுக்குத் தேடிக் காலம் கழிக்க முடியும் என்று இரண்டொருவர் பேசியது அவன் காதில் விழுந்திருக்கிறது. எனவே, சென்னையில் தனக்கும் ஏதாவது பிழைப்புக் கிடைக்கும் என்ற நம்பிக்கை அவன் உள்ளத்தில் ஏற்பட்டது. சென்னைக்குச் செல்வதன்றி வேறு எவ்விடத்துக்கும் செல்ல வழி இல்லை என்பதை உணர்ந்தான். அப்படியே நடு இரவு கழித்துப் புறப்படவும்

முடிவு செய்து விட்டான். புறப்படுமுன் பொன்னப்பரைத் தெய்வத்திலும் மேலாக எண்ணி அந்த வீட்டு வாயிற்படியில் வீழ்ந்து வணங்கினான். 'பாவம், அவரால் என்ன தவறு' என்று கூறிற்று அவன் உள்ளம். அவரை நினைத்து, தாயினும் சிறந்து போற்றிய தயவை நினைத்து, அப்படியே அழுது கொண்டே சற்று நேரம் நின்றான். எவ்வளவு நாழிதான் நிற்பது? படுக்கையைச் சுருட்டி ஒரு பக்கத்தில் வைத்து விட்டுக் கட்டிய துணியோடு அந்த நடு இரவில் காஞ்சிக்கு விடை கொடுத்துக் கால் நடையாகவே சென்னையை நோக்கிப் புறப்பட்டான்.

## III

# சென்னைக்கு வழியில்

எவ்வளவு தூரம் நடந்தான் என்பது அவனுக்குத் தெரியாது. பொழுது விடியும்போது அவன் ஒரு பேரூரில் தான் வந்திருப்பதை அறிந்தான். அங்குக் காஞ்சியில் பொழுது விடிந்ததும் பொன்னப்பர் எழுந்து தன்னைக் காணுமல் தேடுவார் என்றும், அவர் மனைவியாரும் நல்லாடகமும் 'சனியன் ஒழிந்தது' என மகிழ்வார்கள் என்றும் நினைத்தான். மேலும் அவர்களைப்பற்றி அவனுக்கு நினைக்க ஒன்றும் தெரியவில்லை. ஆம், அவர்களும் அனாதை வந்தபடியே அனாதையாகப் போயிற்று என்று எண்ணியிருப்பார்கள். ஆனல் பொன்னப்பர் உள்ளம் மட்டும் சற்று வருந்தியிருக்கும். ஆனல் அவரும் அவனைக் காணவேண்டும் என்ற முயற்சியில் ஈடுபடவில்லை. அவர் மகள் மட்டும் பல தடவை அவரைத் 'தனியன் எங்கே எங்கே' என்று கேட்டுக்கொண்டிருந்தாள். பிறகு தனியன் என்ன ஆனன் என்றோ அவன் வாழ்வு என்ன ஆயிற்று என்றோ அவர்கள் நினைக்கவில்லை. தனியனும் தன் வரண்ட வாழ்வுக்கிடையில் மறுபடியும் அவர்களை எண்ணவில்லை. அவன் வாழ்வில் அவர்கள் குறுக்கீடு ஒரு திவலை; அவ்வளவுதான்.

பொழுது விடிந்ததும் அவனுக்குச் சோர்வு உண்டாயிற்று. நடந்துவந்த இளைப்பு அவனுக்கு மேலும் சோர்வை வளர்த்தது. எங்கே போகிறோம் என்ற உணர்வு இல்லாமலேயே அவன் நடந்து கொண்டிருந்தான். பசிவேறு வாட்டத் தொடங்கிற்று. வழியில் அந்தப் பேரூரில் பல இடங்களில் சென்று சோருவது கூழாவது தர மாட்டீர்களா என்று கேட்டுப் பார்த்தான். எல்லோரும் அந்த ஊரின் கோடியிலே இருக்கின்ற ஒரு தர்ம சத்திரத்திற்குப் போகுமாறு கூறினர்கள். அவன் உண்மையிலேயே அங்கு ஒரு தர்மசத்திரம் இருக்கிறது என்றும், அங்கு போனல் நன்கு உணவு பெறலாம் என்றும் எண்ணி அந்த இடத்துக்கு

விரைந்து சென்றான். அந்த இடத்தைக் கண்டுபிடித்தும் விட்டான். ஆனால் அது ஒரு தரும சத்திரமல்ல; தன் போன்ற ஏழை மாணவர்கள் தங்கும் விடுதியென்று கண்டான். அங்குள்ள சுவர்களெல்லாம் அவனோடு ஏதேதோ பேசின. பலப்பல சொல்லோவியங்கள் அவன் முன் காட்சி அளித்தன. சிறுவனால் அவ்வளவையும் படித்து அறிந்து கொள்ள முடியவில்லை. ஏதோ சிலவற்றைப் படித்தான். சிலவற்றைப் புரிந்து கொண்டதுபோல் தலையை ஆட்டினான். அதற்குள் பசி அவனை வாட்ட ஆரம்பித்தது. விடுதயின் உள்ளே சென்றான். அப்போது விடுதிக்கு விடுமுறை யென்றும் மாணவர்களெல்லோரும் ஊருக்குப் போயிருக்கிறார்கள் என்றும் கேட்டறிந்தான். அங்கு அப்போது காவலாக இருந்த பெரியவர் அவனை யார் என்று கேட்டார். அவர் சற்று வயதானவராக இருந்தாலும் இளமை முடுக்கோடு இருந்தார். தன் எதிரில் நின்றிருந்த ஆட்களையெல்லாம் சற்றுக் கடுமையாகவே வைதுகொண்டே யிருந்தார். கழுத்தில் உருத்திராக்கம் தங்கத்தோடு பொலிந்தது. உடம்பெல்லாம் திருநீறு பூசிக்கொண்டிருந்தார். வாயில் பல் இல்லாவிட்டாலும், வாய்ச் சொற்கள் நன்கு வெளிவந்தன. அவர் பாவம் அந்தச் சிறுவன்மேல் இரக்கப்பட்டார். அவனைப் பற்றிக் கேட்டறிந்தார். அவனும் தன் வரலாற்றை யெல்லாம் கூறி, சென்னை செல்வதாகவும், உணவு வேண்டிய தன்னை ஊரார் அங்கு அனுப்பியதாகவும் விளக்கினான். அவர் உடனே உள்ளே சென்று அவனுக்கு வேண்டிய சாப்பாட்டைக் கொண்டுவந்து கொடுத்தார். அவன் வயிரார உண்டான். மேலும் ஒரு வேளைக்கு ஆகும்படி சோறுகூடக் கட்டிக் கொடுத்தார் அப்பெரியவர். அங்கு மாட்டியிருந்த பலகையிலே அந்த ஊர் வாலாஜபாத் என்றும், அந்த இடம் வள்ளலார் இல்லம் என்றும் அறிந்துகொண்டான். பிறகு அவனுக்கு எங்கும் நிற்கத் தோன்றவில்லை. எப்படியும் விரைவில் சென்னையை நோக்கிச் செல்லவேண்டும் என்ற எண்ணமே முன்னின்றது. அந்தப் பசி வேளையில் சோறிட்ட அப்பெரியவரை வாழ்த்தினான். உடனே அவர் கொடுத்த அந்தச் சிறு சோற்று மூட்டையையும் எடுத்துக்கொண்டு சென்னைக்குச் செல்லும் பாதைவழியிலே நடக்கப் புறப்

பட்டான். விடுதியிலிருந்து வந்ததும், தான் முன்னே அருணையிலிருந்து வந்ததும், அந்த விடுதியில் அவன் பட்ட அல்லலும் அவதியும் எல்லாம் மனக் கண்முன் நின்றன. எதை எதையோ எண்ணிக்கொண்டே சென்றது அவன் மனம். கால்களோ நிமிடத்துக்கு நிமிடம் அவனுக்கும் சென்னைக்கும் உள்ள தூரத்தைக் குறைத்துக்கொண்டே வந்தன. நடந்துகொண்டே இருந்தான் சிறுவன் தனியன், தனிமையாக.

சென்னையைப் பற்றிய சிந்தனைகளுக்கு இடையிலே அவன் நடந்துகொண்டிருந்தான். சிறிது தூரம் நடப்பான். கால் வலித்தால் சிறிது நேரம் உட்காருவான். பிறகு மறு படியும் நடப்பான். இப்படியே அன்றைப் பொழுதெல்லாம் அவன் நடந்தான். கையிலோ காசில்லை. கட்டிக்கொடுத்த அந்த சோற்றை வழியில் ஓரிடத்தில் வைத்துக்கொண்டு சாப்பிட்டான். மாலை நெருங்க நெருங்க அவனுக்குக் களைப்பும் சோர்வும் அதிகமாகிக் கொண்டே வந்தன. மாலை வரவர இருட்டுத் தொடங்கும் வேளையில் அவன் ஏதோ ஒரு பேரூரின் பக்கத்தில் தான் இருப்பதாக நினைத் தான். பல மக்கள் கூட்டம் கூட்டமாக அந்த ஊரை நோக் கித் தனக்கு முன்னும்பின்னும் நடந்து செல்வதைக் கண் டான். பலர் இரட்டைமாட்டு வண்டிகளில் கூட்டம் கூட்ட மாகச் செல்வதையும் கண்டான். அவர்கள் எங்குச் செல்கிறார் கள் என்பதை அறிய விரும்பினான். வரவரக் கூட்டம் அதிகரிக்க அதிகரிக்க, அவன் அண்மையில் ஒரு பெரிய நகரம் இருக்கத்தான் வேண்டும் என நினைத்தான். ஓய் வாகச் சற்று ஒரு மரத்தடியில் உட்கார்ந்தான். பசி வேறு அவனை வாட்டிற்று. அந்த மரத்தின் கீழ் வேறு சிலரும் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைக் கேட்டு அந்த ஊர் ஸ்ரீபெரும்புதூர் என்றும், அன்று அங்கு உடையவருக்குச் சாற்றுமுறைத் திருவிழா என்றும், அதற்காகவே அத்தனைக் கூட்டம் நாலா பக்கங்களிலிருந்தும் வருகிறது என்றும் அறிந்து கொண்டான். கூட்டம் வரவர அதிகமாகிக் கொண்டே வந்தது. அவன் அன்று காலையிலிருந்து பதி னறு கல் நடந்து வந்திருப்பதை அவர்கள் மூலம் அறிந்து

கொண்டான். அருகிலேயே இருந்த மைல் கல்லை உற்றுப் பார்த்தான். அதில் இருபத்தாறு என்று குறித்திருந்தது. அருகில் இருந்தவர்கள் சென்னைக்கு இன்னும் இருபத்தாறு கல் செல்லவேண்டும் என்றார்கள்.

திருவிழாவென்றால் தனக்கு ஏதாவது உணவுக்கு வகை கிடைக்குமா எனக் கேட்டான். அவர்கள் அவ்வளவு சுலபத்தில் அங்கு உணவு கிடைக்காது என்று கூறினர். என்றாலும் அங்கே பலர் ஏழைகளுக்கும், திருவிழாக் காண வருபவர்களுக்கும் உணவாக்கி இலவசமாகக் கொடுக்கின்றார்கள் என்பதை அறிந்தான். அப்படிப் பல உணவு விடுதிகள் இலவசமாக வழங்கியும் தனக்கு மட்டும் ஏன் உணவு கிடைக்காது என்று அவன் எண்ணத் தொடங்கினான். இளம் உள்ளத்துக்கு ஒன்றும் எட்டவில்லை. மேலும் அவர்களையே கேட்டான். அவர்கள் அப்போதுதான் ஏதோ ஒன்றினால் தம் நெற்றியில் வெண்மையாகவும், சிகப்பாகவும் கோடுகள் தீட்டுவதை அறிந்தான். அப்போது சற்று இருட்டிவிட்டது. ஒரு பெட்டியின்மேல் ஒரு 'லாந்தர்' எரிந்து கொண்டிருந்தது. அந்த வெளிச்சத்தில்தான் அவர்கள் நாமம் போட்டுக் கொண்டிருந்தார்கள். அருணையில் திருநீறு பூசிய பலரைக் கண்டிருக்கிறான். காஞ்சியில் இரண்டொரு நாமம் இட்டவரையும் கண்டிருக்கிறான். ஆனாலும் அவற்றைப் பற்றி அவன் ஆராயவில்லை. இன்று அவர்கள் அந்த வேளையில் அப்படி நாமம் தீட்டுவதன் காரணம் என்னவாக இருக்கும் என்று எண்ணிற்று அவன் உள்ளம். மெதுவாக அவர்களிடமிருந்தே எல்லாவற்றையும் கேட்டறிந்தான். அது ஒரு சிறந்த வைணவத் தலம் என்றும், அன்று அங்கு நடைபெறும் சாற்றுமுறைத் திருவிழாதான் அந்த ஊரிலேயே பெரிய தென்றும், அதை காணப் பல ஆயிரக்கணக்கான மக்கள் வருவார்களென்றும், அவர்களுக்கெல்லாம் உணவு வசதி செய்யப் பல விடுதிகளில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றதென்றும், அங்கே நாமம் போட்டுக்கொண்டு போனால்தான் சோறு கிடைக்குமென்றும், ஆகவேதான் அவர்களெல்லாம் நாமம் போட்டுக் கொள்ளுகிறார்களென்றும், அவர்களெல்லாம் பழுத்த சைவர்களாயிருந்தும் நாமம் போட்டுக்

கொண்டால்தான் சோறு உண்டு என்ற ஒரு காரணத்திற் காகவே அவ்வாறு செய்கின்றார்களென்றும் அறிந்தான். அறிந்தும் அவனுக்கு அதெல்லாம் ஒன்றும் நன்கு விளங்கவே இல்லை. ஏதோ மற்றவர்கள் செய்வது போன்று தானும் செய்ய வேண்டுமே என்று அவன் நாமம் போட்டுக் கொண் டானே ஒழிய அந்த நாமத்தின் தத்துவங்களை எல்லாம் அவன் உணர்மாட்டான். அவன் மட்டுமென்ன, எத்தனையோ பேர் அதன் அவசியத்தையும் காரணத்தையும் அறியாமல் தானே செய்கிறார்கள். அதிலும் அந்தப் பெரும்பூதூருக்கு வருகின்றவர்கள் வெறும் ஒரு வேளைச் சோறுக்காகத்தானே அப்படி நாமம் போடுகிறார்கள். சோறுபோடுகிறவர்களுக்கு இதெல்லாம் தெரியாமலில்லை. தெரிந்த போதிலும் அவர்கள் பிற சமயத்தவர்களெல்லாம் அந்த ஒரு நாளைக்காவது நாமம் போட்டுக் கொள்கிறார்களே என்ற மகிழ்ச்சியிலே நிற்கிறார் கள். பாவம், தனியனுக்கு இவற்றை யெல்லாம் எண்ண நேரமும் மனமும் ஏது? நடந்து வந்த அயர்ச்சி ஒருபுறம்; வயிற்றுப்பசி ஒருபுறம்; இவற்றின் இடையில் எப்படியாவது அந்த வேளைக்கு வேண்டிய உணவுபெற வேண்டும். எனவே அவனும் நாமம் போட்டுக்கொண்டான்.

நன்றாக இருட்டிவிட்டது. எங்கும் மக்கள் கூட்டம் கூட்டமாக விழுந்தடித்துச் சென்று கொண்டிருந்தனர். அவர்களிடையே தனியனும் ஒரு தனிச் சிறுவனாக அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருந்தான். கடைசியில் எப் படியோ ஒரு சத்திரத்தைக் கண்டுபிடித்து மற்றவர்க ளோடு அவனும் ஒருவனாகச் சென்று உட்கார்ந்து கொண் டான். ஆனால் அங்கு ஒருவரும் சாப்பிடவில்லை. எல் லோருக்கும் ஒவ்வொரு இலையில் தயிர்சாதத்தைக் கலந்து போட்டார்கள். அவரவர்களும் அதை வாங்கிக்கொண்டு அப்படியே குளக்கரைக்கும் கால்வாய்க் கரைக்கும் சென்றுவிட்டார்கள். அவனும் மற்றவர்களோடு குளக் கரைக்குச் சென்றுவிட்டான். சாப்பிட்டுக் கொண்டே இருவர் தன் பக்கத்தில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப் பதைக் கேட்டான். அவர்கள் இப்படிக் கடவுள் பேரால் சின்னங்கள் ஏற்படுத்தி, அதை வைத்து வயிறு பிழைக்க வழி தேடிக்கொள்ளும் இழிநிலையையும், பரந்த இறைவ

னது வேறுபாடற்ற மேன்மையையும் ஒருவருக் கொருவர் விளக்கிக் கொண்டிருந்தார்கள். அப்படியே அவர்கள் பேச்சைக் கேட்டுக்கொண்டு, சாப்பிட்டுக் குளத்துத் தண்ணீரைக் குடித்துவிட்டு வந்து உட்கார்ந்த வன் உறங்கிவிட்டான். எவ்வளவு நாழிகை உறங்கினான் என்பது அவனுக்குத் தெரியாது. பக்கத்தில் பேசிக் கொண்டிருந்தவர்கள் என்ன ஆனார்கள் என்பதும் அவ னுக்குத் தெரியாது. ஏதோ ஒரு பேரொலி கேட்டுத் திடீ ரென விழித்துக்கொண்டான். அப்போதுதான் உடைய வர் அந்தத் தெருபக்கம் உலா வந்து கொண்டிருந்தார். மக்களை ஏமாற்ற நாமமிடும் சமய வெறியாளரைக்கண்டு அவர் நகைப்பதுபோல் காணப்பட்டார். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற உணர்வு பிறந்த நாட்டிலா இந்த வேறுபாடு என்று கேட்பது போன்று அவர் நெற்றி யிலிருந்த கல்லிழைத்த நாமம் கீழே விழுந்தது. அந்தக் கொண்டாட்டத்தில் அவர்கள் யாரும் அதைக் கவனிக்க வில்லை. வேடிக்கையும், ஆரவாரமும், பொய்க்கால் குதிரை யும், அதற்கேற்ற மேளமும், வாண வேடிக்கைகளும் எங்கும் ஒரே ஒளியையும் ஒலியையும் உண்டாக்கின. இந்தப் பேரொலியினால்தான் தன்னையும் மறந்திருந்த தனயன் விழித்துக்கொண்டான். அவன் இந்த ஆரவாரத்தை யெல்லாம் கண்டான். ஆண்டவன் ஆரவாரத்தின் நடுவிலே அமைதியாக வீற்றிருந்த காட்சி அவன் கண்ணுக்கு விருந்தாக அமைந்தது. அவன் இதுபோன்று ஆரவாரங்கள் பலவற்றை அண்மையில் கண்டிருக்கிறான். அத்துணைப் பெருமக்களில் உண்மையில் ஆண்டவனைக் கண்டு, கசிந்து பாடி நிற்கக் கூடியவர் எத்தனைபேர் என்பது வயதில் சிறியவனாயினும், அவன் அறிந்த ஒன்றே. அருணை வாழ்வு அந்த அனுபவத்தை அவனுக்கு நன்கு உணர்த்திற்று. இளம் உள்ளத்தே அந்த அன்பற்ற ஆரவார வேடிக்கைகள் நன்கு படிந்துவிட்டன. சில பல வாண வேடிக்கைகளைக் காண வும், பொய்க்கால் குதிரையின் ஆடலைக் காணவும், வெள்ளி வாகனங்களைக் காணவும், கடைத் தெருவைக் காணவும் ஆண்டவனைவிட்டு அவன் அலங்காரத்தைக் காணவுமாகத் தானே பல மக்கள் வருகிறார்கள் என்று அவன் நினைத்

தான். தூரத்தே கற்பூரம் கொளுத்தி உடையவருக்குத் தீப ஆராதனை செய்தார்கள். மக்களின் 'கோவிந்தா' என்ற ஒலி மற்றெல்லாவற்றைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. ஆனால் அவர் தம் உள்ளங்கள்? ஏழைச் சிறுவன் உள்ளம் இதையெல்லாம் எண்ணிற்று. அதற்குள் உடையவர் அருகில் வந்தார். அவன் உள்ளமுருகினான். 'தாய் தந்தை அற்றவர்களுக்கு' ஆண்டவனே! தாங்களே தாய்தந்தை என் பார்களே, அது உண்மையானால் நீயே என்னை இப்படித் திண்டாட வைப்பாயா? நான் எங்கு செல்கிறேன்; எதற் காகச் செல்கிறேன் என்பதுகூடத் தெரியாதே எனக்கு. எங்குச் சென்றுதான் என்ன செய்யப்போகிறேன்' என்று மனத்தால் முறையிட்டான். ஆனால் ஆண்டவன் உலா நடந்து கொண்டே இருந்தது.

எல்லா வேடிக்கைகளையும் கண்ட தனியன் எப்படி யாவது விரைவில் சென்னையைச் சேர்ந்தால் ஏதாவது ஒரு வேலையைத் தேடிப் பிழைக்கலாம் என்று எண்ண மிட்டான். இன்னும் இருபத்தைந்து கல் என்று எண்ணும் போது அவன் மனம் துண்ணென்றது. அப்படியே தள்ளாடி நடந்து ஊர்க் கோடியில் வந்துவிட்டான். அப் போதுதான் இளம் தம்பதிகள் இருவர் அருகிலே தம் கார் ஓட்டியை எழுப்பிக் கொண்டிருந்ததைக் கண்டான். அவர்களுக்கும் உறக்கக்கண் தான். அவர் தம் பேச்சுக்களி லிருந்து அவர்கள் சென்னை செல்பவர்கள்தான் என அறிந் தான். காருக்கு உள்ளே இடம் இருந்தது. ஆனால் அவர் கள் அந்த அனாதையை ஏற்றிக் கொள்வார்களா? சுற்று முற்றும் பார்த்தான். அனைவரும் தூக்கக் கண்ணோடு இருந்தமையால் அவனைக் கவனிக்கவில்லை. காருக்குப் பின்னால் தனியாகச் சக்கரம் வைக்கும் இடத்தில் அந்தச் சக்கரம் நன்கு பதியவைக்கப்பட்டிருந்தது. அதன்மேல் மூட்டை ஒன்றும் இல்லை. அதில் ஏறிச் சக்கரத்தைக் கெட்டி யாகப் பிடித்துக் கொண்டால் எப்படியும் சிறிது நேரத்தில் சென்னையை அடைந்து விடலாம் என்று சிந்தித்தான். அந்தக் கார் அவன் சிந்தனையை நீள விடவில்லை. உடனே புறப்பட ஆரம்பித்தது. தாவினான்; அருகே சென்றான்.

மெள்ள அடியெடுத்து வைத்தான். மெதுவாக அந்த சக்கரத்தின்மேல் உட்கார்ந்து அதையே அழுத்திப் பிடித்துக் கொண்டான். ஆண்டவன் வரம்பெற வந்த அந்த இளம் தம்பதிகள் உறங்கிவிட்டனர். ஓட்டுபவனும் பாதி உறக்கத் தோடு ஓட்டிக்கொண்டே இருந்தான். தனியனும் எண்ணுத தெல்லாம் எண்ணிக்கொண்டு சென்னையைப்பற்றிக் கனவெலாம் கண்டுகொண்டு, விரைந்து சென்னையை நோக்கி ஒருவருக்கும் தெரியாமல் வந்து கொண்டிருந்தான்.

IV

## கள்வர் கொண்டனர்

சென்னை நகரம் பலவற்றிற்குப் பேர்போனது. சென்னைச் சிங்காரம் பார்க்கப் பார்க்க இன்பம் பயக்க வல்லது என்று சிங்காரப் பாட்டுகள் கூடப் பலர் பாடுவதுண்டு. சென்னை அழகிய நகரம்தான். நம் நாட்டிலே உள்ள எத்தனையோ ஊர்களைக் காட்டிலும் சென்னை நகரம் மேலானதுதான். என்றாலும் சென்னையில் சேரிகளும் சாக்கடைகளும் குப்பைமேடுகளும் இல்லாமல் இல்லை. சென்னையைக் காணவருகின்ற பல வெளிநாட்டு மக்களெல்லாம் கூட அப்படியே காரில் உட்கார்ந்துகொண்டே சைனுபஜார், தியாகராயநகர், மயிலை, திருவல்லிக்கேணி, பீச்சுரோடு ஆகியவற்றில் சுற்றிவந்துவிட்டு, பல உயர்ந்த கட்டிடங்களைப் பார்த்துவிட்டுச் சென்னை சிறந்த ஊர்தான் என்று சொல்லி விட்டுச் செல்வார்கள். ஊர்த் தோற்றம் மட்டுமின்றி, மக்கள் வாழ்க்கை முறையினையும் அப்படித்தான் கணக்கிடுவார்கள் பலர். என்றாலும் இருபதடி உயரத்துக்கு மூட்டைகளை யேற்றிக்கொண்டு கத்திரியின் கடும் வெய்யிலில், நடுத் தெருவில் வண்டியிழுக்கும் அந்த உழைப்பாளி மட்டும் அவர்கள் கண்ணில் பட்டு விடுவான். ரிக்ஷா இழுத்து வயிறு வளர்க்கும் அந்த ஏழையும் அங்குத் தென்படுவான். ஆகவே சென்னையின் சிங்காரத்தைச் சித்தரிக்கும் அவர்கள் இந்த வண்டிக்காரர்களைப் பற்றியும் கூறாது விடார் என்றாலும் நகரில் கண்டு கேட்டு அறியவேண்டியன பல உள.

சென்னை நகரம் சன்மார்க்கர் நிறைந்த ஒரு பேரூர் என்று பேசுவார்கள். 'இந்து' முதலிய நாளிதழ்களில் அன்றாடம் நடக்கும் நிகழ்ச்சிகளில் வரும் பல சொற்பொழிவுகளையும், புராணப் பிரசங்கங்களையும் பிறவற்றையும் கண்டும், எங்கும் கோயில்கள் நிறைந்துள்ளதைக் கண்டும்

அவ்வாறு புதிதாகச் சென்னைக்கு வருகின்றவர்கள் பேசிக் கொள்வார்கள். அது ஒரு அளவில் உண்மையென்றாலும் இங்கு வளரும் துன்மார்க்க நெறியோடு சன்மார்க்கம் என்றும் போட்டியிடவே முடியாது. நாட்டுப் புறங்களில் சொந்தமாகப் பலவேலி நிலமிருந்தும் பல கோயில்கள் மண் மூடிக்கிடப்பது போன்று இங்கு இரா என்பதும், ஆங்காங்கு ஆண்டவனைப்பற்றிய அருள் விளக்கம் காட்டும் பேச்சுக்கள் நிகழும் என்பதும் உண்மைதான். ஆனால் அவற்றிற்கெல்லாம் மேலாக, நெஞ்சம் துணுக்குறும் கொலைகளும், கண்டும் காட்ட முடியாத பெரும் கொள்ளைகளும் இங்கு இல்லாமல் இல்லை. பட்டப்பகலில் பங்களாவில் புகுந்து கொள்ளையிடும் கொடுமையும், போவார் வருவார் பைகளிலிருந்து பணம் மறையும் புதுமையும் நம் சென்னை நகரில் அன்றாட நிகழ்ச்சிகள்தாம். இத்தகைய கொள்ளையும் கொலையும் ஒரு சிலரால் நடப்பன வல்ல. அவற்றிற் கெல்லாம் பயிற்சி அளிக்கச் சிறந்த பள்ளிக் கூடங்கள் உண்டு; பாடங்கள் உள. அவை யெல்லாம் இருக்குமிடம் தெரியாமல் இருப்பன. அதுதான் சென்னையில் தனிச்சிறப்பு. வண்ணாரப்பேட்டைக்கு வடக்கே திருவொற்றி யூரின் ஒரு பகுதி தற்போதுதான் சென்னையோடு சேர்ந் துள்ளது. அதில் எங்கு பார்த்தாலும் தென்னஞ் சோலைகள் அழகாக உயர்ந்து வளர்ந்து நல்ல கோடையிலும் குளிர்ந்த காற்றை அள்ளி வீசிக் கொண்டிருந்தன. ஆனால் இப்போது அந்தக் காட்சியைக் காணமுடியாது. கள்ளுக் கடைகளை எடுத்த பிறகு ஆயிரக்கணக்காகப் பொன்கொழித்த அந்த மரங்கள் பயனற்றன; நீரிறைப்பார் அற்றுப் பெரும்பாலும் உலர்ந்தே விட்டன. சொந்தக்காரர் பலவற்றை வெட்டியும் விட்டார்கள். இது போன்ற சோலைகள் சாலையின் இரு மருங்குமட்டுமின்றி உள்ளே வெகு தொலைவு வரையில் பரந் திருக்கும் ஒவ்வொரு சோலையிலும் சொந்தக்காரர்கள் தங்கு வதற்காகப் பெரிய பங்களாக்கள் இருக்கும். அவற்றில் ஒன்றி லிருந்து ஒருநாள் திடீரென்று நம் தனியன் வெளியே வந்தான்.

ஆம். ஸ்ரீபெரும்பூதூரிலிருந்து யாருடைய காரிலோ பின்னால் ஒளிந்து ஏறிக்கொண்டு சென்னை நோக்கி வந்த

தனியன் இங்கு எப்படி வந்தான்? அங்கு உள்ளவர்கள் யார்? அவன் எப்படி இவர்களை அறிமுகம் செய்துகொண்டு அவர்களோடு வந்து விட்டான் என்பதை எல்லாம் காண வேண்டுமல்லவா? யாருடைய காரிலோ எப்படியோ ஒட்டிக்கொண்டு அவன் சென்னைக்கு வந்து கொண்டிருந்தான். கார் சென்னை நகருக்கு உள்ளும் வந்துவிட்டது. எங்கும் விளக்குகள் வரிசையாகக் காட்சியளித்தன. நீல விளக்குகள் பல தெருக்களை அழகுபடுத்திக் கொண்டிருந்தன. தெருவின் இருபுறங்களிலும் வானோங்கிய உயர்ந்த மாளிகைகள் தென்பட்டன. அவற்றை யெல்லாம் முதல் முறையாகக் கண்ட தனியனுக்கு ஒன்றுமே தெரியவில்லை. அவன் இப்புது நகரைப் பற்றியெல்லாம் எண்ணிக் கொண்டே வந்தபோது, கார் ஒரு இடத்தில் திடீரென நின்றது. அவனும் அதுவரையில் உட்கார்ந்திருந்த இன்னல் நீங்கக் கீழே குதித்தான். விடியற்காலை மூன்று மணி. ஆதலால் அவனை யாரும் பார்க்கவேயில்லை. கார் புறப்பட்டுவிட்டது. அவனுக்கு இனி அதைப் பற்றி என்ன கவலை? அங்கேயே சிமிட்டி பூசப்பட்ட நடைப்பாதை மீது அவன் படுத்துக் கொண்டான். இன்னும் பலர் படுத்துக்கொண்டிருந்தனர். சென்னை நகரத்தில் தன்னைப் போன்ற அனாதைகள் படுத்து உறங்குவதற்காக அந்த மேடையை அரசாங்கத்தார் கட்டிவைத்தார்களோ என்று அவன் எண்ணினான். படுத்தவன் அப்படியே உறங்கி விட்டான். அவனுக்குத் தான் தற்போது மூர்மார்க்கெட்டுக்கு எதிரில் இருப்பதாகவும், பக்கத்தே சென்டிரல் புகை வண்டி நிலையம் இருப்பதாகவும் நினைக்க வழி ஏது? ஏதோ சென்னைக்குள் இருக்கிறோம் என்ற அந்த ஓரே உணர்ச்சியில் அப்படியே உறங்கிவிட்டான்.

காலை அவன் கண்விழிக்கும்போது நன்கு விடிந்திருந்தது. தெருவில் ஓடும் டிராம் வண்டிகளையும், பஸ்களையும் பார்த்துக்கொண்டே சிறிது நேரம் நின்றான். எங்கே செல்லவேண்டும், எங்கே இருக்கிறோம், என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி யெல்லாம் அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. இப்படி நாள்தோறும் எத்தனையோ பேர் சென்னைக்கு வந்து கொண்டும், ஏதோ கிடைத்ததைக்

கொண்டு வயிறு வளர்த்து வாழ்ந்து கொண்டும் தானே இருக்கிறார்கள். ஆம், இதுவும் சென்னை நாகரிகத்தின் ஒரு பகுதிதான். நெடுநேரம் நின்று சிந்தித்தான் தனியன். தன் ஆடையெல்லாம் புழுதி படிந்திருந்தது. அருகேயுள்ள தண்ணீர்த் தேக்கத்தில் சென்று முகத்தையெல்லாம் கழுவிக் கொண்டான். பாலத்தைத் தாண்டிச் சென்டிரல் நிலையத்தை அடைந்தான். அங்கே உள்ளே சென்று அந்தப் பெரிய கட்டிடத்தையும், பிற வேடிக்கைகளையும் அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தான். காலை வேளையானதால் அங்கே போலீஸ் பாரா அவ்வளவு அதிகமாக இல்லை. அதே மாலையாக இருந்திருக்குமானால் இந்த நேரத்துக்குள் அவன் எத்தனையோ முறை போலீசாரால் விரட்டப்பட்டிருப்பான். காலை வேளைகளில், அதுவும் எட்டு மணிக்குள் அவ்வளவு அதிகமாகப் போலீஸ் பாரா இராது என்பது அவனுக்குத் தெரியாது. அந்த நேரத்துக்குள் வெளியூர்களிலேயிருந்து வண்டிகளில் வரும் அரிசி பல வீடுகளில் தஞ்சம் புகும் என்ற இரகசியமும் அவனுக்குத் தெரியாது. அது அரிசிப் பங்கீட்டுக் காலம். அவன் அப்படியே அந்தச் சென்டிரல் நிலையத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சிறிது நேரம் கழிந்தது. மணி எட்டுக்கு மேலிருக்கும். அப்போதுதான் அவனுக்குப் பசி உண்டாயிற்று. நாமம் போட்டுக் கொண்டு முன் நாள் இரவு பெரும்பூதூரில் சாப்பிட்ட சாப்பாடு அவனுக்கு நினைவுக்கு வந்தது. சாப்பாட்டுக்கு என்ன செய்யலாம் என்று எண்ணினான். பல வண்டிகள் வந்து நின்றன. ஆயிரக்கணக்கான மக்கள் இறங்கிச் சென்று கொண்டிருந்தனர். பல சிறுவர்கள் அவர்களது மூட்டை முடிச்சுகளைச் சுமந்து கொண்டு சென்றனர். தானும் அவ்வாறு சுமந்து சென்றால் ஏதாவது கிடைக்கும் என எண்ணினான். இங்கும் அந்தத் 'துன்பச் சுழல்' அவனைச் சுற்றிக் கொள்ளும் என்பது அவனுக்குத் தெரியாது.

அவன் சிந்தனை நெடு நேரம் நிலைக்கவில்லை. ஏறக்குறைய அவன் வயதிருக்கும் ஒரு பையன் மற்றொருவனோடு

அவனிடம் வந்து 'வா அண்ணே' என்று கூப்பிட்டதும் அவனுக்கு ஒன்றுமே தெரியவில்லை. தனக்குத் தம்பி யேது எனக் கேட்டுக் கொண்டான், தனக்குள்ளே. எங்கேயப்பா? என்ருன். 'எல்லாம் சொல்லுகிறேன். நீ ஏன் இப்படி நிற்கிருய்? அங்கே வா. உடனே உணவு உண்டு. பிறகு எல்லாம் பேசிக் கொள்ளலாம்' என்ருன் புதிதாக வந்தவன். தனியனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. அவனுக்குப் பசி வேறு. ஆகவே அவனோடு சென்று எப்படியாவது உணவு கொண்டு, பிறகு அவன் மூலமாகவே பிழைக்க வழி தேட லாம் என்று எண்ணிக்கொண்டே வேறுவழியின்றி அவர் களைப் பின் தொடர்ந்தான். மூவரும் இரண்டாம் எண் ணுள்ள பஸ் ஏறி, பிறகு நடந்து மேலே கண்ட திருவொற்றி யூர்த் தென்னஞ்சோலை மாளிகைக்குள் புகுந்தார்கள்.

தென்னஞ்சோலை மாளிகைக்குள் புகுந்த தனியனுக்கு நல்ல வரவேற்பு கிடைத்தது. அங்கே மற்றவர்களோடு இவனும் குளித்தான். இவனுக்கு வேறு ஆடை கொடுக்கப் பட்டது. பிறகு உணவு கொண்டார்கள். மணி பத்துக்கு மேல் இருக்கும். அவனுக்கு என்ன செய்வதென்றே விளங்க வில்லை. 'இவர்கள் யார்? ஏன் எனக்கு இந்த மாதிரி உணவு, உடை முதலியன தருகிருர்கள்' என்று தனக்குள்ளேயே கேட்டுக் கொண்டான். மற்றவர்களைக் கேட்கவும் அஞ் சினுன். அந்த வேளையில் ஒரு பருத்த பெரிய மனிதன் அங்கே உள்ளே நுழைந்ததையும், அவன் மற்றவர்களோடு ஏதோ பேசியதையும், தன்னைப்பற்றி விசாரித்துச் சென்ற தையும் அறிந்தான். ஆனால் அது ஒரு கள்ளர் குகையென் றும், அதை முன்னின்று நடத்துபவனே அந்தப் பெரிய மனிதன் என்றும், அங்கே அவனைப் போன்ற சிறுவர் களுக்குத் திருடக் கற்றுக் கொடுக்கிருர்களென்றும், நன்கு அந்தத் திருட்டுக் கலையில் பயிற்சி பெற்றபின் வெளியே திருட அனுப்பிப் பொருள் சம்பாதிக்கிருர்களென்றும், தானும் அதற்காகத்தான் அழைத்துவரப் பட்டவன் என்றும் அவனுக்கு அப்போது தெரியாது. என்ருலும் போகப் போக எல்லாவற்றையும் அறிந்து கொண்டான்.

சென்னையில் சில தனியிடங்களில் இப்படிச் சிறுவர் களைப் பழக்குகிருர்கள். ஊர் பேரற்று ஓடிவரும் சிறுவர்

களைச் சில கைதேர்ந்த கள்வர்கள் பிடித்துவந்து நல்லபடி உணவு முதலியன கொடுத்து மெதுவாகத் திருடப் பழக்கு வார்கள். மக்கள் கூட்டம் அதிகமாக இருக்கின்ற இரவில் நிலையங்கள், கடைத்தெருக்கள் ஆகிய இடங்களுக்குச் சென்று ஏமாந்த மக்களது பையிலும், கையிலும் வைத்திருக்கும் பணம், பொருள் முதலியவற்றை எப்படிக் கொள்ளை அடிப் பது என்பதைத் தனிமையில் நன்கு பழக்குவார்கள். பழக் கப்பட்ட சிறுவர்கள் பின் தனித்தனியே சென்று தத்தம் சாமார்த்தியத்திற்கும் தைரியத்திற்கும் ஏற்றபடி பொருள் களைக் கொள்ளை அடித்து வருவார்கள். இப்படிப் பழக்கும் இடங்களில் ஒன்றுதான் அந்தத் தென்னஞ்சோலை மாளிகை. அங்கே ஐந்நாறு பிள்ளைகள் இருந்தார்கள். அந்தத் தலைவ னுக்கு வயது ஐம்பது இருக்கும். அவன் பெயர் மார்த் தாண்டன் என்பது. அவனுக்கு ஒரு மகன். அவனுக்கு வயது முப்பது இருக்கும். அவன் பெயர் முருகன். அவனுடன் இருபது வயதுடைய ஒரு பெண் இருந்தாள். அவள் அவனைக் கலியாணம் செய்து கொள்ளாவிட்டாலும், அவன் மனைவியைப் போன்றே எல்லா உரிமைகளையும் அளித்து உடன் வைத்துக் கொண்டான். அவளுக்கு பெற் றோர் உண்டோ இல்லையோ தெரியாது. அவளுககுப் பெற் றோர்கள் என்ன பெயர் வைத்தார்களோ அதுவும் தெரி யாது. என்றாலும் முருகன் அவளை அன்போடு அழைத்த அழகி என்ற பெயரால்தான் அவள் அழைக்கப்பட்டாள். முருகனும் அவன் தந்தையும் அந்தச் சிறுவர்களைத் திருட்டுத் தொழிலில் பழக்குவார்கள். முருகன் அச்சிறுவர்களுடன் கடைத்தெரு முதலிய இடங்களுக்குச் சென்று அவர்கள் திருட்டுச் சாமர்த்தியங்களைக் கண்டு, அவர்கள் கொண்டு வருவனவற்றைச் சேர்த்து வீட்டுக்கு எடுத்து வருவான். அழகியும் சில சமயங்களில் அவர்களுடன் செல்வதுண்டு. மார்த்தாண்டன் மட்டும், அத்தொழிலைக் கற்றுக் கொடுப் பானே தவிர, அவர்களுடன் செல்லமாட்டான். அவன் எப்போதும் பெரிய மனிதர்களோடேதான் பழகுவான். உயர்ந்த உடைதான் அணிந்து கொள்வான். உயர்ந்த மனிதர் களுடன் பழகும் பெரிய கழகங்களில் அவன் உறுப்பினன். அங்கெலாம் அவன் பெயர் மார்த்தாண்டன் அல்ல; வேறு

ஏதோ? அவன் ஒரு பெருஞ் செல்வனைப்போல் வாழ்ந்து வந்தான். அவனுக்குத் தங்கசாலையில் ஒரு வீடு உண்டு. அதில்தான் அவன் இருப்பான். நாள் தோறும் அந்தத் தென்னஞ் சோலை மாளிக்கைக்கு வந்து கற்றுக் கொடுக்க வேண்டியவற்றைக் கற்றுக் கொடுத்துவிட்டு, வந்தவற்றை எடுத்துக் கொண்டு போய்விடுவான். முருகன் மட்டும் அழகியுடன் அங்கேயே இருந்தான்.

தனியன் சென்ற அந்த நாளிலும் திருட்டு ஒத்திகை நடைபெற்றது. ஆனாலும் அன்றைக்கு அவனுக்கு ஒன்றும் வேலை கிடையாது. அவர்கள் செய்வதை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தான் அவன். முரடன் 'ஜிப்பா' போட்டுக் கொண்டு தாழ்வாரத்தில் அப்படியும் இப்படியும் உலாவிக் கொண்டிருந்தான். அந்தச் சிறுவர்களில் இருவர் அவன் பைகளில் உள்ள கைக்குட்டை முதலியவற்றை அவன் அறியாத வகையில் எடுக்க முயன்றார்கள். இடையிடையில் அவன் அவர்கள் எப்படிப் பதுங்க வேண்டும், எப்படி எடுக்க வேண்டும் என்பனவற்றைச் செய்து காட்டியும் சொல்லிக் காட்டியும் விளக்கினான். இவற்றையெல்லாம் கண்ட தனியனுக்கு அது என்ன என்றே விளங்கவில்லை. பள்ளிக்கூடத்தில் ஏதோ பாடம் சொல்லிக் கொடுப்பதை அவன் கண்டும் கேட்டும் இருக்கிறான். ஆனால் இந்தப் பாடம் அவனுக்குப் புதிதாக இருந்தது. அந்தப் பாடத்தையும் அதைப் பயிலும் முறையையும் நன்கு தெரிந்துகொள்ள அது அவனுக்கு நெடுநாள் பிடித்தது. அவனுக்கு திருட்டுத் தொழிலுக்கு அடிப்படை என்பது நன்கு விளங்கிற்று. அது விளங்கவே சில நாட்கள் பிடித்தன. அதை அவன் முற்றவும் வெறுத்தான். எங்கேயாவது சென்னையில் வேலை செய்து அமைதியாக வாழ வேண்டும் என்று வந்த அவனுக்கு இதுபோன்று திருட்டுத் தொழிலில் பழக விருப்பமில்லை. துன்பச் சூழல் அவன் எங்கே சென்றாலும் சுற்றிச் சுற்றிப் பற்றுகிறது என்பதைப் பாவம் அந்த இளம் உள்ளம் எப்படி அறியும்? முதலில் அவன் அதைக் கற்றுக் கொள்ள விரும்பாவிட்டாலும், மற்றப் பிள்ளைகளின் வற்புறுத்தலினாலும், தலைவனது கண்டிப்பான-

கட்டளையினாலும் ஏதோ அப்படி இப்படி இரண்டொன்று கற்றுக் கொண்டான் என்றாலும் அவன் அதில் நன்கு பழக வில்லை. இப்படியே இரண்டொரு திங்கள் கழிந்தது. இன்னும் அவன் நன்கு திருடப்பயிலாத காரணத்தால் தலைவன் அவனை வெறுத்தான். நன்கு கற்றுக்கொள்ளாவிட்டால் சோறு கிடையாது என்று கண்டிப்பாய்க் கூறி விட்டான். அது மட்டுமின்றி, விரைவிலேயே மற்றவர்களைப் போன்று வெளியே சென்று எப்படியாவது சில நாட்களில் பொருள் களைத் திருடிவரவேண்டும் என்றும் கட்டளையிட்டான். தனியனுக்கும் அவன் ஆணையை மேற்கொள்ள வேண்டு வதைத் தவிர வேறு வழியில்லை. சில சமயங்களில் தனக்கு நேர்ந்த கதியைச் சொல்லிச்சொல்லிக் கண்ணீர் விடுவான். ஏதாவது ஓர் இடத்தில் உட்கார்ந்து அழுதுத் தீர்ப்பான். அழகி அடிக்கடி அவனைத் தேற்றுவாள். மற்றவர்கள் தேற்றுவதோடு மட்டுமின்றி, அந்தத் திருட்டுத் தொழில் சிறந்தது என்றே உபதேசம் செய்வார்கள். அவனுடன் நெருங்கிப் பழகிய நண்பர் இருவர் ஒருநாள் அவனையும் தங்கள் தொழிலுக்கு உடன் அழைத்துச் செல்வதாகவும், அவன் முதல்வேலையை அன்று தொடங்க வேண்டும் என்றும் கூறினர். தலைவனும் மிக முன்னெச்சரிக்கையாக நடந்து கொள்ள வேண்டுமென்றும் அகப்படாது தப்பித்துக்கொள்ள வேண்டுமென்றும் பலவகையாக எச்சரித்து அவனை வெளி யில் அனுப்பினான். சென்டிரல் நிலையத்திலிருந்து அந்தப் பங்களாவில் உள்ளே புகுந்த தனியன் பல நாட்கள் கழிந்து அன்றுதான் வெளியே வந்தான். அழகி அவனை அழைத்து மிக்க முன்னெச்சரிக்கையாக இருந்து, எப்படியும் தப்பித்துக் கொண்டு வந்துவிட வேண்டுமென்று கூறினாள். ஏனோ அவளுக்கு அந்தச் சிறுவனிடம் அன்பும் பற்றும் உண்டாகி விட்டது.

தனியனும் மற்ற இருவரும் புறப்பட்டார்கள். பாவம், வருந்திப் பாடுபட்டு வயிற்றைக் கழுவி அமைதி வாழ்வில் வாழ வந்த தனியனுக்கு இப்புயலும் கொடுமையும் நிறைந்த திருட்டு வாழ்வு கொடுக்கப்பட்டது. தங்கசாலை வந்து பஸ் ஏறிப் பாரிஸ் கார்னர் வந்து இறங்கினார்கள். நன்கு இருட்

ஆரம்பித்தது. ஹைக்கோர்ட்டுக்கு எதிராக ஓர் அழகிய புத்தகக்கடை இருந்தது. அந்தக் கடையில் ஒரே கூட்டமிருந்தது. பல நூல்கள் வெளிநாடுகளிலிருந்து வந்திருந்தன வென்றும், அவற்றை வாங்கவே பல மக்கள் அங்குக் கூடியிருந்தார்களென்றும் சிறுவர்கள் அறிந்தார்கள். அந்தக் கடையின்முன் ஏறக்குறைய முப்பத்தைந்து வயது மதிப்பிடக்கூடிய ஒருவர் நீண்ட 'ஜிப்பா' போட்டுக்கொண்டு, மூக்குக் கண்ணுடி அணிந்துகொண்டு கடைக்காரன் பக்கத்தில் நின்றுகொண்டு ஏதேதோ நூல்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். விற்கும் பையன்கள் வந்தவர்க்கெல்லாம் வேண்டிய நூல்களைக்கொடுத்து, பட்டி தயாரித்து அனுப்பிக்கொண்டிருந்தனர். அவை எல்லாம் சரிதாஞ என்று கண்டு, பணத்தையும் வாங்கிப் போட்டுக்கொண்டே, அந்தப் பெரிய மனிதரோடு பேசிக்கொண்டிருந்தார் கடைக்காரர். கடையின் மேல் "நூல் விற்பனை" என்று ஒளி விளக்கால் பெயர் விளக்கிக் கொண்டிருந்தது. மக்கள் கூட்டம் சிறுகச் சிறுகக் குறைய ஆரம்பித்தது. தென்னஞ்சோலை மாளிகையிலிருந்து புறப்பட்டு வந்த அந்தத் திருட்டுப் பையன்கள் மெதுவாக உள்ளே புகுந்தார்கள். அப்படியும் இப்படியும் பார்த்து நின்ருர்கள். நன்ருக உடுத்திக்கொண்டிருந்ததால் அவர்கள் மேல் யாருக்கும் ஐயம் உண்டாகவில்லை. தனியன் மட்டும் பின்ஞலேயே மெதுவாகச் சென்று கொண்டிருந்தான். அவர்கள் செய்யப் போவதைக் கண்டு கொண்டிருந்தான். சென்ற சிறுவர் இருவரும் அந்த ஜிப்பா அணிந்த பெரிய மனிதர் பக்கப்பையில் கையை விட்டு, கைக்குட்டையையும் வேறு சிலவற்றையும் மெதுவாக எடுத்தார்கள். அதற்குள் யாரோ பார்த்துக் கூச்சலிடவே இருவரும் ஓட்டம் பிடித்தார்கள். எப்படியோ யார் கண்ணிலும் படாமல் அவர்கள் ஓடி மறைந்து விட்டார்கள். தனியன் அவற்றையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்தான். அவர்கள் ஓடவே தானும் ஓடவேண்டும் என்று கருதி ஓடத் தொடங்கிஞன். ஆஞலும் அவர்கள் சென்ற வழி முதலியன இவனுக்கு ஒன்றுமே தெரியவில்லை. மேலும் ஓடுகின்ற இவனைப் பார்த்து இவன்தான் திருடினவன் என்று மற்றவர்கள் பிடித்து இழுத்துக் கொண்டு வந்தார்கள். அதற்குள் கூட்

டம் கூடிவிட்டது. போலீஸ்காரர் இருவர் வந்து சேர்ந்து விட்டனர். அவர்கள் அவனுக்கு இரண்டு அடி கொடுத் தார்கள். அவனை அழைத்துக் கொண்டு பூக்கடை போலீஸ் ஸ்டேஷனுக்குள் சென்றார்கள். அந்த மாலை வேளையிலே அந்தக் கடைத் தெருவில் மக்கள் கூடி இருந்த கூட்டத் தையும், ஒவ்வொருவரும் தன்னைப் பார்த்து ஏதேதோ பேசிக் கொள்வதையும், ஒன்றுமறியாத தனக்குத் திருட்டுப் பட்டம் வந்ததையும் எண்ணி எண்ணிக் கண்ணீர் விட்டுக்கொண்டே அந்தப் போலீஸ்காரருடன் சைனாபஜாரைத் தாண்டிப் பூக்கடைப் போலீஸ் நிலையத்துக்குள் புகுந்தான். அந்த இடம் அவனுடைய பயத்தை அதிகமாக்கிற்று. சுவற்றில் கத்திகளும், துப்பாக்கிகளும் மாட்டப்பட்டிருந்தன. அவன் அவற்றை அதற்குமுன் பார்த்திராவிட்டாலும் ஏதோ அவ னுக்கு உள்ளத்தில் பயம் உண்டாயிற்று.

நிலையத்துக்குள் புகுந்ததும் அழைத்து வந்த போலீஸ் வீரரும், வேறு அங்கு உள்ளே இருந்தவர்களும் ஏதோ ஒரு பெரிய வெற்றியை கண்டவர்களைப்போல அவனைப் பலவாறு ஏசினர். அவனை எந்த ஊர் என்றும், என்ன பெயர் என் றும், பெற்றோர்கள் எங்கே இருக்கிறார்கள் என்றும் எத் தனையோ கேள்விகள் கேட்டார்கள். பாவம், அவன் என்ன சொல்வான்? பெற்றோர் யார் என்று தெரிந்தால்தானே! ஊர்தான் அவனுக்கு ஏது? ஒன்றும் சொல்லாது கண்ணீர்ப் பெருக்கி, வெம்பி வெம்பி அழுது கொண்டிருந்தான். வர வர அழுகை அதிகமாயிற்று. ஆனால் போலீஸ்காரர்க ளெல்லாம் அவன் ஏமாற்றவே அப்படிச் செய்கிறான் என் றும், அவன் கைதேர்ந்த திருடனாயிருக்க வேண்டுமென்றும் பேசிக்கொண்டே அவனைக் கையாலும் கழியாலும் அடிக்கத் தொடங்கினர். பாவம், துன்பச் சுழலில் சிக்கிய தனியன் செய்வதறியாது கதறினான்; சொல்வதறியாது சோம்பினான்: இந்த நிலையில் புத்தகக் கடையில் கைக்குட்டையையும், பணத்தையும் பறி கொடுத்த அந்தப் பெரிய மனிதர் செல்வ நாதர் சிலருடன் உள்ளே வந்தார். ஆம், செல்வநாதர் என் பது அவர் பெயர்தான். பையன் அலறுவதைக் கண்ட அவர் உள்ளத்தில் இரக்கம் பிறந்தது. பையன் முகம் களங்க

மற்றுக் காட்சியளித்தது. போலீஸ்காரரைச் சற்று விலகச் சொல்லி அவரே அந்தப் பையனை ஏதேதோ கேட்டார். அவரையும் அறியாது ஏனே அவனிடத்தில் அவருக்கு அன்பு உண்டாயிற்று. பையன் ஒரு பதிலும் சொல்லவில்லை. இருந்தால் தானே சொல்ல! பெயர் மட்டும் 'தனியன்' என்ருன்: அவருக்கு ஒன்றுமே புரியவில்லை; அந்தப் பையன் கைக்கூட்டையை எடுத்திருக்கமாட்டான் என்று திட்டமாக நம்பினர். அவனுடைய முகத்தின் களங்கமற்ற தன்மை அவர் நம்பிக்கையை உறுதிப்படுத்திற்று. பையனல் பேசவே முடியவில்லை. அவனை அங்கேயே விட்டுச் சென்றல் போலீஸ்காரர் அவனைச் சும்மா விடமாட்டார்களென்றும் எப்படியும் அவனுக்கு ஏதாவது துன்பம் இழைப்பார்களென்றும், கண்டார். அவனும் திரும்பத் திரும்ப அங்கிருக்கும் சிறு சிறைக் கதவின் கம்பிகளையும், கத்தி துப்பாக்கிகளையும் கண்டு கண்டு கதறி அழுதான். எனவே அவர் அவனைத் தன்னுடன் வீட்டுக்கு அழைத்துச் சென்று சில நாள் வைத்திருந்து பிறகு கேட்டால், அவனைப் பற்றிய தகவல் அறிய இயலும் என எண்ணினர். மற்றொரு புறத்தில் 'சீ! இது என்ன எண்ணம்? நாம் ஏதோ தனிமையில் வாழ்கின்றோம். இந்தப் பையனை நாம் ஏன் அழைத்துச் செல்லவேண்டும்? வேண்டுமானல் போலீஸ் கொடுமையிலிருந்து விடுவித்து இரண்டொரு வேளைச் சாப்பாட்டுக்கு ஏதாவது கொடுத்து விட்டால் என்ன?' என்ற எண்ணமும் எழுந்தது. பையனே மேலும் மேலும் அழுதுகொண்டே இருந்தான். அதற்குள் வெளியே சென்றிருந்த போலீஸ் இனிஸ்பெக்டரும் வந்தார். அவரும் நடந்ததையெல்லாம் நன்கு கண்டறிந்து, ஆராய்ந்து, பையனது முகப் பொலிவையும் கண்டு அவன் அந்தக் குற்றத்தைச் செய்திருக்கமாட்டான் என்று கூறினர். செல்வநாதர், தான் நினைத்தவாறே இனிஸ்பெக்டரும் எண்ணியது கண்டு மகிழ்ந்தார். மறுபடியும் அவனை வீட்டுக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்ற எண்ணம் தூண்டிற்று. ஆனல் அந்த எண்ணத்துக்கு மட்டும், எவ்வளவோ முயன்றும் அவரால் காரணம் கண்டு பிடிக்க முடியவில்லை.

இந்த நிலையில் அந்தப் புத்தகக் கடைக்காரர் கடையை மூடிக்கொண்டு பையனைப் பற்றி என்ன ஆயிற்று என்று

காண அங்கு வந்துசேர்ந்தார். அவர் வெளிப்புறம் பார்த்துக் கொண்டே செல்வநாதரோடு பேசிக்கொண்டே யிருந்ததால் அவருக்கு நடந்தனவெல்லாம் தெரியும். அந்தத் திருட்டுப் பையன்கள் இருவரும் ஓடிவிட்டதையும், இவன் எங்கேயோ பின்னல் நின்றிருந்து ஓடியதையும் கண்டார். ஆகவே இந்தப் பையனை வீணுகப் போலீசார் தொந்தரவு செய்யா திருக்க வேண்டுமே என்று எண்ணிக்கொண்ட விரைந்து வந்தார். வந்ததும் பையன் செல்வநாதர் பக்கத்தில் நின்று கொண்டு, தேம்பித் தேம்பி அழுவதைக் கண்டார். இரண் டொரு போலிஸ்காரர்கள் அவன்மேல் குறை கூறியதையும் கேட்டார். கடைசியில் தானே நடந்ததைச் சொல்லிவிட வேண்டுமென்று சொல்லியும் விட்டார்.

தன் கடையின் பக்கத்தில் அந்த இரண்டு பையன்கள வந்ததையும், அவர்கள் பையிலிருந்து எதையோ எடுத்து ஓடி யதையும் இவன் தூரத்தே நின்று பார்த்துக் கொண்டிருந்த தையும், அவர்கள் ஓடவே இவனும் ஓடினன் என்பதையும் கூறி, அந்தத் திருட்டுக்கும் அவனுக்கும் சிறிதும் சம்பந்த மில்லை என்பதை நன்கு எடுத்துக் காட்டினர் அவர். அவனை அடித்த இரண்டொரு போலிஸ்காரருக்கும் கூட 'ஐயோ பாவம்! ஏன் இவனை அடித்தோம்' என்றாகிவிட்டது. செல்வநாதர் தாம் நினைத்தது சரிதான் என்றும், அவன் திருடாதவன்தான் என்றும், நல்ல குடும்பத்துப் பையனாக இருக்க வேண்டும், ஏதோ, எப்படியோ இப்படித் திரிகிருன் என்றும் எண்ணி அவனைத் தம் வீட்டுக்கு அழைத்துச் செல்வதென்றே முடிவு செய்துவிட்டார். பிறகு அங்குள்ள வர் யாவரிடத்தும் சொல்லிவிட்டு, பையனையும் உடன் அழைத்துக் கொண்டு தன் காரிலே அவனையும் ஏற்றிக் கொண்டு தியாகராய நகரில் தமது மாளிகைக்கு வந்து சேர்ந் தார். வரும் வழியில் சென்னையின் நெடுந் தெருக்களையும், நீல விளக்குகளையும், பிற எழில்களையும் கண்டுகொண்டே தனியன் வந்தான். என்றாலும் அவன் உள்ளத்தே எங்கே போகிறோம், யாருடன் போகிறோம், ஏன் போகிறோம் என்ற சிந்தனைச் சுழல்கள் சிதறிக் கிடந்தன. அவரும் அவன் வெம்பி வெம்பி வாடியதால் ஒன்றும் கேட்கலாகாது என்று

வாயை மூடிக்கொண்டே வந்தார். மோட்டார் வேகமாக வந்து அவர் மாளிகை வாயிலில் நின்றது. காரிலிருந்து இறங்கி அவனையும்—ஆம்—தனியனையும் அன்போடு உள்ளே அழைத்துச் சென்றார் செல்வநாதர்.

அந்தப் பெரிய மாளிகையைப் பார்த்து அப்படியே நின்றான் அவன். அடுத்த கணம் காஞ்சிப் பொன்னப்பர் நினைவு வந்தது அவனுக்கு. அங்குப் பொன்னப்பருடன் அன்போடு காஞ்சி சென்றாலும், அவர் வீட்டில் அம்மையார் தன்னிடம் கடுமையாக நடந்துகொண்டதை எண்ணினான் அவன். இங்கேயும் அதே முறையில் செல்வநாதரின் மனைத்தலைவியார் இருந்து ஏதாவது இன்னல் இழைத்தால் என் செய்வது என்று எண்ணிக்கொண்டே உள்ளே புகுந்தான். செல்வநாதர் மணம் செய்துகொள்ளாது தனித்த வாழ்வு நடத்துகின்றார் என்பதும், அவர் ஏதோ சமூகத்தொண்டு செய்து கொண்டிருக்கிறார் என்பதும் அவனுக்கு எப்படித் தெரியப் போகிறது? அவர் உள்ளே அவனை அழைத்துக் கொண்டு சென்று வேலைக்காரரிடம் அவனைப் பற்றிக் கூறி, அவனை நல்லபடியே வைத்துக்கொள்ளவேண்டும் என எச்சரித்து வந்தார். புது இடமாக இருக்கிற காரணத்தால் எங்கேயாவது மறுபடியும் அந்தப் பையன் ஓடிவிட்டால் என்ன செய்கிறது என்று எண்ணியே முன் ஏற்பாட்டோடு அவனுக்கு மனதில் புது இடம் என்ற வேறுபாடு தோன்றாவகையில் நடந்து கொண்டார். அவனுக்கு இந்த உபசரிப்புகளின் பொருள் ஒன்றும் விளங்கவில்லை. அவரும் கூட அடிக்கடி எண்ணினார். யார் என்று தெரியாத ஒருவனை இப்படி நாம் அழைத்துவைத்து ஏன் பாதுக்காக முற்படுகிறோம் என்பது அவருக்கே புரியாத ஒரு புதிராக இருந்தது. எப்படியும் அவனைத் தன் வீட்டை விட்டு அனுப்பக் கூடாது என்று மட்டும் முடிவுசெய்தார். பழகப் பழக அவன் தன்னைப்பற்றிய வரலாறுகளையெல்லாம் கூறுவான் என்றும், அப்போது அவன் நிலை அறிந்து அவனுக்கு வேண்டிய வகையில் உதவி செய்யலாம் என்றும் அவர் முடிவு செய்தார். அவர் இதுபோன்று எத்தனையோ அனாதைப் பிள்ளைகளைக் கொண்டுவந்து, ஒரு ஆசிரமம் அமைத்து, அங்

கேயே அவர்களை வைத்துக் காப்பற்றி வருகிறார், என்றாலும் இவனை அங்கு அனுப்பவில்லை. தன் வீட்டிலேயே வைத்துக் கொள்ள எண்ணினார். வேலைக்காரர்களுக்கு இந்த ஏற்பாடு புதிதாக இருந்தது.

அன்று இரவு தனியனைத் தன்னுடன் கூடவே இருக்க வைத்துக்கொண்டு உணவு முதலியன கொள்ளச் செய்தார். பிறகு அவனை நடுக் கூடத்தில் (Hall) படுக்கச் சொல்லி ஏற்பாடு செய்துவிட்டு, தான் தன் அறைக்குச் சென்று செய்யவேண்டிய வேறு அலுவல்களைக் கவனிக்கத் தொடங் கினார். வேலைக்காரர்கள் தம் தம் வேலைகளை முடித்துப் படுத்துக்கொள்ளத் தம்மைத் தாயார்செய்து கொண்டிருந்தார் கள். கட்டிடத்தின் நடுக் கூடத்திற்கு வந்து தனியன் தனக் கெனப் போடப்பட்டிருந்த படுக்கையில் உட்கார்ந்தான். வீடு முழுவதும் மின்சார விளக்குகள் ஒளியுடன் அழகை யும் பெய்துகொண்டிருந்தன. அந்தப் பெருங் கூடத்தின் இடையில் இரண்டு பேரொளி விளக்குகள் நன்கு எரிந்து கொண்டிருந்தன. அக்கூடத்தை ஒரு முறை சுற்றிப் பார்த் தான். அதன் நடுவில் ஒரு அழகிய பெண்ணின் படம் மாட் டப் பட்டிருந்தது. அதைப் பார்த்தவுடன் ஏனோ அவனுக் குத் தன்னையுமறியாமல் அழுகை உண்டாயிற்று. அந்தப் படத்தைத் திரும்பத் திரும்பப் பார்த்தான். அது போன்ற படத்தையோ, பெண்ணையோ அவன் அதுவரையில் எங்கும் பார்க்கவில்லையே என்ற எண்ணம்மட்டும் அவனுக்கு இருந் தது. என்றாலும் ஏனோ அதைக் கண்டவுடன் அவனுக்கு உள்ளம் ஒருவாறு மாறுபட்டது. காரணம் யாதாயிருக்கலாம் என எண்ணிப் பார்த்தான். அவனுக்கு ஒன்றும் விளங்க வில்லை. அந்தப் பெண் யார் என்று அறியவிரும்பினான். அவர் வீட்டில் வேறு பெண்கள் யாரும் இல்லை என்பதையும் அறிந்தான். ஒருவேளை அந்தப் படம் அவருடைய மனைவி யின் படமாயிருக்குமோ என எண்ணினான். ஆனாலும் அந்தப் படத்திலுள்ள பெண்ணுக்கும் பதினாறு அல்லது பதினேழு வயதுதான் இருக்கும்போல் தோன்றிற்று. இவருக்கோ வயது முப்பத்தைந்திருக்கும். ஒருவேளை கலியாணம் ஆனவுடன் எடுத்த படமாயிருக்குமோ என எண்ணினான். அந்த அம்மையார் வீட்டில் இல்லையே; ஒரு வேளை இறந்து

விட்டார்களோ என்று ஐயப்பட்டான். இல்லாவிட்டால் வேறு எங்காவது போயிருப்பார்களோ என்றும் எண்ண மிட்டான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. அந்தப் படத்தைப் பார்த்துக்கொண்டே அப்படியே உறங்கி விட்டான். அந்தப் புது இடம் அவனுக்கு ஒருபுறத்தில் அச்சத்தை உண்டாக்கினாலும், மற்றொருபுறத்தே அமைதியையே அளித்தது.

மறுநாள் பொழுது விடிந்தது. செல்வநாதர் வழக்கம் போல எழுந்திருந்து அறைத விடுதியைக் காணப் புறப் பட்டுச் சென்று விட்டார். செல்லுமுன் வேலைக்காரர்களை அழைத்து அந்தப் பையன் உறங்கி எழுந்ததும் அவனுக்கு வேண்டிய வசதிகளை யெல்லாம் செய்துகொடுக்கக் கட்டளை யிட்டார். அவன் அதைப் புது இடம் என்று கருதாதபடி நடந்துகொள்ள வேண்டும் என்று பெரு முயற்சி செய்தார். அவர் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் தனியன் கண்விழித் தெழுந்தான். ஒரு வேலைக்காரன் வழிகாட்ட அவன் தனது காலைக் கடன்களை யெல்லாம் முடித்துக் கொண்டான். அவனுக்கென்று புத்தாடைகள் வேறு வைக்கப்பட்டிருந்தன. அவன் நன்கு மூழ்கி அந்த ஆடைகளை உடுத்துக்கொண்டு சிற்றுண்டி கொண்டான். அதற்குள் செல்வநாதரும் வீடு திரும்பினார். அவன் மகிழ்ச்சியோடு இருப்பதைக் கண்டு தாமும் மகிழ்ந்தார். அவனிடம் அதிக நேரம் பேசாது ஏதோ இரண்டொன்று மட்டும் கேட்டுவிட்டுத் தொடர்ந்து தன் வேலையைக் கவனிக்கச் சென்றுவிட்டார். எனினும் அந்தப் பையனை நன்கு பார்த்துக்கொள்ளும்படி பணியாளர் களுக்கு மறுபடியும் எச்சரிக்கை செய்தார்.

தனியன் அங்கே ஒரு செல்வர் வீட்டுப் பிள்ளையென வளர்ந்து வந்தான். அங்கே அவன் இன்ப வாழ்வில் திளைக் கப் பல நாட்கள் உருண்டோடின. அவன் படிப்பதற்கு நல்ல கதைப் புத்தகங்களும் பிறவும் அவர் அவ்வப்போது வாங்கி வருவார். இரண்டொரு முறை தனது அறைதை விடுதிக்கும் அவனை அழைத்துச் சென்றிருக்கிறார். இன்னல் இன்னதென அறியா வகையிலே அவன் வாழ்வு கழிந்து

கொண்டிருந்தது. துன்பச் சுழலிலிருந்து தான் மீண்டு விட்டதாகவே அவன் நினைத்தான். என்றாலும் அந்தப் பெண்ணின் படத்தைப் பார்க்கும்பொழுது மட்டும் அவனுக்கு ஏதோ தோன்றுவது போன்றிருந்தது. அப் பெண்ணைப் பற்றி யாரென அறியப் பணியாளர் எல்லோரை யும் கேட்டுப் பார்த்துவிட்டான். அதைப் பற்றிய தகவல் தங்களுக்கு ஒன்றும் தெரியாதென்றும், அவர் கலியாண மாகாதவர்தான் என்றும், எனவே அது அவர் மனைவியின் படமாக இருக்க முடியாதென்றும் கூறினர். என்றாலும் அவனுக்கு மேலும் அப்படத்தைப் பற்றி அறிந்துகொள்ள ஆசை உண்டாயிற்று. அவரையே நேராகக் கேட்டு விடலாமா என்று கூட எண்ணினான். என்றாலும் அஞ்சி அஞ்சி அவ்வாறு கேட்கவில்லை. நாட்கள் ஒன்றின்பின் ஒன்றாக ஓடிக்கொண்டே இருந்தன.

V

# இன்பம் ஒரு திவலை

நடுத்தெருவில் தனியனை விட்டுச் சென்ற அந்தத் திருட்டுப் பிள்ளைகள் இருவரும் எவ்வளவு தூரம் ஓடினார்கள் என்பது தெரியாது. தம்மை யாரும் பின்பற்றவில்லை என்பதை அறிந்த பிறகேதான் அவர்கள் நின்றார்கள். பிறகு கொண்டுவந்த கைக்குட்டையைப் பிரித்துப் பார்த்தார்கள். அதில் அதிகமாகப் பணமில்லாவிட்டாலும் ஓர் இருபது ரூபாய்க்குக் கிட்டத்தட்ட இருந்ததைக் கண்டு மகிழ்ந்தார்கள். என்றாலும் அந்தத் தனியனை விட்டு வந்ததைப்பற்றி எண்ணும்போது அவர்கள் அஞ்சினார்கள். திரும்பிச் சென்று தங்கள் தலைவனுக்கு என்ன சொல்வது என்று தெரியாது விழித்தார்கள். ஒருவேளை அந்தப் பையன் யாரிடமாவது அகப்பட்டுக்கொண்டு தங்களது திருட்டையெல்லாம் சொல்லி விட்டால் என்ன செய்வது என்று வேறு அச்சமுற்றார்கள். மறுபடியும் அந்தப் 'பாரிஸ் கார்னரு'க்குச் சென்று பார்ப்போமா என்று திரும்பினார்கள். பிறகு தாங்களும் அகப்பட்டுக்கொண்டால் என்ன செய்வது என்று எண்ணமிட்டார்கள். சற்று நேரம் சிந்தித்துக்கொண்டே நின்றார்கள். அவர்கள் இறுதியில் அன்று உடனே திருவொற்றியூருக்குத் திரும்பிவிட வேண்டும் என்று முடிவு கட்டினார்கள். புறப்பட்டு வந்தபோது சைனா பஜாரைப் பார்த்துக்கொண்டு அப்படியே சென்டிரல், மூர்மார்க்கட் முதலியவற்றையும் கவனித்துக்கொண்டு திரும்பவேண்டும் என்றுதான் திட்டமிட்டார்கள். ஆனால் அப்போது தனியன் காணாது போய் விடவே மனம் உடைந்து வேறு செய்வதறியாது அந்த இருபது ரூபாயுடன் ஒற்றியூர் திரும்பினார்கள். வழியெல்லாம் அவர்கள் தங்கள் தலைவன் என்ன செய்வரோ என்று அஞ்சிக்கொண்டே சென்றார்கள். எப்படியோ எட்டு மணிக்குமேல் தங்கள் தென்னஞ்

சோலை மாளிகைக்குள் புகுந்தார்கள். முருகன் மட்டும் உட்கார்ந்திருந்தான். அவன் மனைவியையும் காணோம். தாங்கள் தனியனைத் தவறவிட்டு வந்ததைப்பற்றி மெள்ள மெள்ளச் சொல்லத் தொடங்கினார்கள். அவர்கள் முழுவதும் கூறி முடிப்பதற்குள் நடந்ததை ஒருவாறு அறிந்த அவன் அவர்களை வாயில் வந்தபடியெல்லாம் ஏசினான். அவர்கள் கொண்டுவந்த அந்த இருபது ரூபாயையும் பெற்றுக்கொண்டான். அந்த இரவுக்கு அவர்களுக்குச் சோறு கிடையாது என்று கூச்சலிட்டான். அவனுடைய மனைவி அப்போதுதான் வந்தாள். அவள் இளையவள். அவனைப் போன்றும் அவனுடைய அப்பனைப் போன்றும் அப்படி ஒன்றும் கொடுமையானவள் அல்லள் அவள். எப்படியோ அவர்களோடு வந்து சேர்ந்தாள். அவள் ஒரு அனாதை. தனியாகத் திரிந்து கொண்டிருந்தபோது, முருகன் தங்கசாலையில் அவளைக்கண்டு தன்னுடன் அழைத்துக்கொண்டு வந்து வைத்துக்கொண்டான். அவளுக்கு இந்தப் பிள்ளைகள் மீது எப்போதும் கருணைதான். ஆகவே முருகனிடம் அவர்களுக்காக பரிந்து பேசினாள். அதற்குள் திருடச் சென்ற மற்றவர்களும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் ஆளுக்கு ஐம்பதுக்குக் குறையாது கொண்டு வந்தார்கள். அனைவரும் உண்டார்கள். எல்லோருக்கும் தனியனைப் பற்றிய கவலையே பெரிதாகப் போய் விட்டது. அவன் ஒருவேளை அனைவரையும் காட்டிக் கொடுத்து விட்டால் என்ன செய்வது என்று வருந்தினார்கள். என்றாலும் அவன் அவ்வளவு கெட்டிக்காரன் அல்லன் என்றும், அந்த இடத்திலிருந்து வெளியே சென்றறியாதவன் என்றும் கூறி மன அமைதி பெறலானார்கள். எனினும் மறுநாள் காலையில் மார்த்தாண்டன் வந்து அவனைப்பற்றிக் கேட்டால் என்ன சொல்வது என்பதே அவர்களுக்குப் பெருத்த துன்பத்தை விளைத்தது. முருகன் உட்பட யார் யாருக்கு என்னென்ன துன்பங்கள் வருமோ என்று அஞ்சினார்கள். பலப்பல பேசினார்கள். முடிவில் எப்படியும் மறுநாள் தனியனைக் கண்டு பிடித்தாக வேண்டும் என்ற முடிவோடு உறங்கச் சென்றார்கள்.

மறுநாள் விடிந்ததும் தென்னஞ்சோலை மாளிகைக்கு மார்த்தாண்டன் விரைந்து வந்தான். முன்னாள் கொண்டு

வந்த பொருள்கள் அனைத்தையும் அவன் முன் சேர்த்துக் குவித்தார்கள்; அவற்றை யெல்லாம் அவன் எடுத்து வைத்துக்கொண்டான். சுற்றும் முற்றும் பார்த்தான்; தனியனைக் காணவில்லை. 'அவன் எங்கே' என்று அதட்டினான். ஒருவருக்கும் சொல்ல நா எழவில்லை. எப்படியோ முயன்று அவன் காணுதலைப்பற்றிச் சொல்லி விட்டார்கள். உடனே அவன் கொண்ட கோபத்திற்கு எல்லையில்லை. அந்தப் பையனால் தனது திருட்டுத் தொழிலே போய்விடும் என்றும், எல்லாவற்றையும் காட்டிக் கொடுத்து விடுவான் என்றும் கதறினான். அனைவரையும் வாய்க்கு வந்தவாறு திட்டினான். அகப்பட்டவர் முதுகில் நல்ல சூடு கொடுத்தான். எல்லோரும் நடுங்கிக் கொண்டிருந்தார்கள். முடிவாக எப்படியும் அவனைக்கண்டு பிடித்து ஆகவேண்டு மென்றும், இல்லாவிட்டால் அனைவரையும் துரத்தி விடுவதாகவும் பயமுறுத்தினான். அந்தச் செய்தியை இரவே சொல்லி அனுப்பாததற்காகத் தன் மகனைக் கடிந்து கொண்டான். எப்படியோ ஒருவாறு இருந்த பிற வேலைகளையும் முடித்துவிட்டு வெளியேறினான் மார்த்தாண்டன். மற்றவர்களோ, தங்களுடைய அன்றாடத் திருட்டுத் தொழிலுடன, அவனைத் தேடுவதையும் தொழிலாகக் கொணடார்கள். முருகனும் அழகியும்கூடத் தேடுவதில் ஈடுபட்டனர். தனியன சிலருடைய உள்ளத்தை கவர்வதை போன்று அழகியின் உள்ளத்தையும் கவர்ந்தான். அவனது கள்ளமறியா உள்ளம் அழகியைக் கட்டிப் பிணித்தது. அந்தப் பையனை எப்படியாவது கண்டு பிடித்து வந்து தங்களோடு வைத்துக்கொள்ள வேண்டும் என முயன்றாள் அழகி. அவள் கருத்தைச் சரியென்று யேற்றுக் கொண்டான் முருகன். எனவே அனைவரும் தனியனைத் தேட ஆரம்பித்தனர்.

எங்கேயாவது வெளியே திரிந்து வந்தால்தானே தனியன் அகப்படுவதற்கு. அவன்தான் செல்வநாதர் வீட்டிலே செல்வமாக வளர்ந்து வருகிறானே. சென்னையின் நடுவில் எப்படித் தியாகராய நகரில் மாளிகைக்குள்ளிருப்பவன் அகப்படுவான். செல்வநாதரோடு காரில் சில சமயங்கள் வெளிக் கிளம்பிச் செல்லும்போது அறிவதன்றி வேறு

ஒன்றும் வெளியுலகத்தைப்பற்றி அப்போதும் அவனுக்குத் தெரியாது. எனவே இவர்கள் கண்களுக்கு அவன் அகப் படவே இல்லை. நாட்கள் திங்களாக மாறின; சில திங்களும் கழிந்தன.

செல்வநாதர் வீட்டில் தனியன் யாதொரு குறைவுமின்றி நன்கு வளர்ந்து கொண்டிருந்தான். தன்னை ஆழ்த்திய துன்பச் சுழல் நீங்கியது என்றே மனமகிழ்ந்திருந்தான். செல்வநாதரும் அவனைத் தன் மகன் எனவே போற்றி வாழ்ந்து வந்தார். அவருக்கு மனைவி மக்கள் ஒருவரும் இலர். அவர் ஏதோ பொதுத் தொண்டு செய்துகொண்டு அனாதை விடுதி அமைத்துக் காலம் கழிக்கின்றவர். தமக்கென மக்கள் இல்லாது போயினும் பல அனாதை மக்களை வைத்து காப்பாற்றுவதில் அவர் தனி மகிழ்ச்சி கொண்டார். ஆனால் ஏனோ இவனை மட்டும் அனாதை இல்லத்திற்கு அனுப்பாமல் தன் வீட்டிலேயெ வைத்துக்கொண்டிருந்தார். அவனும் வருத்தம் அறியாது வாழ்ந்து வந்தான். எனினும் அந்தக் கூடத்தில் மாட்டியிருந்த படத்தைப் பார்க்கும் பொழுது மட்டும் தன்னையறியாது கலங்கினான். முன்பின் அறியாத வர் வீட்டில் மாட்டியிருக்கும் படத்தினிடம் தான் கொண்ட ஆசைக்குக் காரணத்தையும், அதுபோன்று முன்பின் அறியா செல்வநாதர் தன்னிடம் கொண்ட அன்பின் காரணத்தையும் அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை. நாட்கள் சென்று கொண்டேயிருந்தன. அடிக்கடி செல்வநாதருடனும் தனி யாகவும் நகரத்துக்குச் சென்று பல நலங்களையெல்லாம் கண்டு வரத் தொடங்கினான்.

அவனுடைய துன்பச் சுழலின் விடிவெள்ளி இன்னும் வெகு தூரத்தில் இருப்பது அவனுக்குத் தெரியாது. அவன் வாழ்வில் பொறாமை கொண்டோ, வேறு ஏனோ ஒரு பெரியவர் அவன் மேல் குறை சொல்லத் தொடங்கினார். அப் பெரியவர் செல்வநாதருடைய நண்பர். அடிக்கடி அவர் வீட்டுக்கு வந்து சென்று கொண்டிருந்தார். அவர் தனியனை பற்றி அடிக்கடி ஐயப்பட்டுக்கொண்டிருந்தார். ஒரு வேளை இந்த அனாதைக்கு இவ்வளவு செல்வ வாழ்வு ஏன் என்று

தான் எண்ணினாரோ என்னவோ? இரண்டொரு நாள் செல்வநாதரிடம் அந்தப் பையனை நம்ப வேண்டாமென்றும் அவன் நடத்தை அவ்வளவு நம்பிக்கைக்கு உரியதாக இருக்காது எனவும் எச்சரித்தார். செல்வநாதர் எவ்வளவு மறுத்துக் கூறியும் அவர் அவனை வெறுத்தே பேசி வந்தார். ஒரு நாள் அவனை வேண்டுமானால் சோதித்துப் பாருங்கள் என்ற அளவுக்குச் சொல்லிவிட்டார் அவர். எப்படியோ தனியனுக்கு மேலும் தொடரும் துன்பத்திற்கு அவர் காரணரானார். அவனிடம் ஒரு நூறு ரூபாயை, தாம் கொடுத்தனுப்பிக் கடையில் சில நூல்கள் வாங்கிவர அனுப்புவதென்றும், பெரும்பாலும் அவன் திரும்பி வரமாட்டான் என்றும். அப்படி வந்தால் அவன் நல்லவன்தான் என்றும், இந்தச் சோதனையை அப்போதே செய்து பார்க்க வெண்டுமென்றும் அவர் கூறினார். சிறிதும் உள்ளத்து ஐயம் இல்லாவிடினும், செல்வநாதர் அவர் விழைவுக்கு இணங்கினார்.

அதற்கேற்ப அவர் திருவல்லிக்கேணியில் ஒரு புத்தகக் கடைக்கு ரூபாய் ஐம்பது கொடுக்கவேண்டியது நினைவுக்கு வந்தது. அப்போது மாலை மூன்று மணி. அவர் நண்பர் வேண்டுமானால் அவன் திரும்பிவரும் வரையில் அல்லது இரவு எட்டு மணி வரையில் அங்கேயே இருந்து பார்ப்பதாகச் சொன்னார். செல்வநாதர் அப்படியே தனியனை வரவழைத்தார். அவனிடம் நூறு ரூபாய்த் தாள் கொடுத்து, திருவல்லிக்கேணியில் ஒரு புத்தகக் கடையில் தான் ஐம்பது ரூபாய்க்கு நூல்கள் எடுத்து வைத்திருப்பதாகவும் அதற்காக ஐம்பது ரூபாய் கொடுத்துவிட்டு, மீதி ஐம்பது ருபாயையும் புத்தகங்களையும் எடுத்து வரும்படியாகவும் சொல்லி அனுப்பினார். அவன் சற்றுத் தயங்கினான். இதுவரையில் தன்னை இந்த மாதிரி வேலைக்கு அவர் அனுப்பியதில்லை. ஆதலால் இப்போது சென்றால் ஏதேனும் தவறு நேருமாயின் என் செய்வது என்ற அச்சமே அவனுக்கு உண்டாயிற்று. ஆனாலும் 'இட்ட வேலையைச் செய்வதற்கு மனமில்லாதவன் எனத் தெரியலாகாதல்லவா' என்று உடன் புறப்படத் தயாரானான். 'பஸ்'ஸில் சென்று மிக விரைவில் திரும்பி வர

வேண்டும் என்று சொன்னார் செல்வநாதர். அந்தப் பதின் மூன்றும் எண்ணுள்ள 'பஸ்' அவர் வாயிலிலேயே நிற்கும். எப்படியும் ஐந்துமணிக்கெல்லாம் திரும்பிவிடலாம் என்று திட்டமிட்டுக் கொண்டுதான் வாயிலைத் தாண்டினான். ஆனால் வந்தால்தானே!

அவன் திரும்பி வருவதற்குள் விடுதிப்பக்கம் சென்று வருவதற்காகச் செல்வநாதரும் அவர் நண்பரும் புறப்பட்டார் கள். விடுதிக்குச் சென்று அங்குச் செய்யவேண்டிய பணிகளை யெல்லாம் செய்து முடித்த பிறகு மாலை ஆறு மணிக்கு வீடு திரும்பினர். அதுவரையில் தனியன் வரவில்லை என்று அறிந்தனர். நண்பர் செல்வநாதரைக் கேலி செய்ய ஆரம் பித்தார். திருவல்லிக்கேணி புது இடம், அவனுக்குத் தெரி யாது', ஆகவே நாழியாகிறது போலும்' என்று பதில் சொன் னார் செல்வநாதர். மணி அவர்களுக்கென நிற்காது ஓடிக் கொண்டே இருந்தது. இரவு ஒன்பது மணிவரை பார்த் திருந்தனர். செல்வநாதரும் ஐயப்படத் தொடங்கினார் என்றாலும் அவர் ஐயம் நேராகச் செல்லவில்லை. யாராவது அவன் ரூபாய் வைத்திருப்பதை அறிந்து களவாடிச் சென்ற காரணத்தால் அவ்வாறு வராது அஞ்சி சென்றிருப்பானோ, என எண்ணினார் அவர். எதற்கும் மறுநாள் காலை புத்தகக் கடைக்குச் சென்றால் ஏதாவது தகவல் அறியலாம் என்று முடிவு செய்தார். மணி பத்தும் ஆகிவிட்டது. நண்பர் அவன் பணத்தை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டவன்தான் என்று முடிவு சொல்லிவிட்டுத் தன் மாளிகைக்குச் சென்று விட்டார்.

செல்வநாதருக்கு அன்று இரவு தூக்கமே வரவில்லை. யாரிடத்தும் பற்று வையாத தன்மனம் அந்தப் பையனிடத்து மட்டும் அன்பு செலுத்திய காரணம் என்ன என்று எண்ணி னார். மிக்க நல்லவன் என்று எண்ணிய அவனா அப்படிச் செய்தான் என்று எண்ணும்போது உலகில் நம்பக்கூடியவர் கள் ஒருவரும் இருக்கமாட்டார்களா எனத் தன்னைத் தானே கேட்டுக்கொண்டார். மனம் அமைதியுறவில்லை. எப்படியோ படுக்கையில் புரண்டார். இரவு கழிந்துகொண்டே இருந்தது.

மறுநாள் பொழுது விடிந்ததும் தான் முறைப்படி செய்ய வேண்டிய பணிகளையெல்லாம் செய்து முடித்துவிட்டு செல்வநாதர் காலைச் சிற்றுண்டிகொண்டார். மணி பத்து ஆகிவிடவே, நேராகத் திருவல்லிக்கேணி சென்று அந்தப் புத்தகக் கடையினுள் நுழைந்தார். கடைக்காரர் மூலம் தனியன் முன்னாள் மாலை நான்கு மணிக்கு வந்து அவர் குறிப்பின்படி நூல்களை எடுத்துக்கொண்டு நூறு ரூபாய் கொடுத்து பாக்கி ஐம்பது ரூபாயும் பெற்றுக்கொண்டு திரும்பினான் என்பதை அறிந்தார். அவன் கள்ளன் என்ற ஐயம் அவருக்குச் சற்றுக் குறைந்தது. அவன் உண்மையில் கள்ளனாக இருப்பானாயின் நூறு ரூபாயை அப்படியே அல்லவா எடுத்துச் சென்றிருக்கவேண்டும்? தான் இட்ட வேலையைச் செய்துவிட்டு, கொடுக்கவேண்டிய ரூபாயையும் கொடுத்து விட்டு, மிகுதியையா எடுத்துக்கொண்டு ஓடியிருப்பான்? திருடன் இப்படியும் செய்வானா? ஆனால் அவன் எங்கே? எண்ணி எண்ணிப் பார்த்தார். ஒன்றும் பதில் கிடைக்கவில்லை. ஒரு வேளை திரும்புங்கால் 'திருட்டு எண்ணம் வந்து அப்படி செய்திருப்பானோ என்று நினைத்தார். அவர் உள்ளம் இடம் கொடுக்கவில்லை. வேறு யாரிடமாவது சிக்கியிருப்பான் என்ற எண்ணமே அவருக்கு உறுதியாயிற்று.

ஆம், அவன் மறுபடியும் அக்கள்வர் கூட்டத்தாரிடம் சிக்கினான். மார்த்தாண்டன் ஆணையின்படி அவனது மகனும், அழகியும், பிள்ளைகளும் சென்னை முழுவதும் கடந்த சில திங்களாகத் தேடித் தேடி அலுத்து விட்டார்கள். என்றாலும் மார்த்தாண்டன் அவர்களை இலேசில் விடுவதாகக் காணவில்லை. அந்தப் பையன் வெளியிலிருந்தால் என்றாவது உண்மையில் தனது திருட்டெல்லாம் வெளியாகி விடும் என்று அவன் திட்டமாக நம்பினான். எனவே எப்படியும் அவனைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று கட்டாய ஆணையிட்டான். அனைவரும் சென்னை நகரெங்கும் தேடினர். மாளிகைக்குள்ளிருக்கும் தனியன் எங்கே அவர்கள் கண்ணுக்குத் தெரியப் போகிறான். நூல்கள் வாங்கிவரப் புறப்பட்ட அந்த மாலையிலும்கூட மார்த்தாண்டன் அனுப்பிய

சிறுவரும், முருகனும் அழகியும் மாலையில் மவுண்டுரோட்டில் சினிமா பார்ப்பதற்காகத் திருவல்லிக்கேணியிலிருந்து அப்படியே டிராம் வண்டிப் பாதை வழியே ஐந்து மணிக்கு நடந்து சென்று கொண்டிருந்தனர். எங்குச் சென்றாலும் என்ன கூட்டம் கண்டாலும் அவர்கள் நாற்புறமும் சுற்றிப் பார்த்து எங்காவது தனியன் கிடைப்பானா என்ற எண்ணத்தோடே சென்றார்கள். 'தாதி மனம் நீர்க்குடத்தேதான்' என்பது அவர்கள் நடத்தையில் மிக மெய்யாக இருந்தது. அந்த டிராம் பாதை வழியே அவர்கள் நடந்து வந்த நிலையிலே, பைகிராப்ட்ஸ் ரோட்டைக் கடக்க வேண்டிய கட்டத்தில் அவள்—ஆம்–அழகி–தனியனைக் கண்டு கொண்டு விட்டாள்.

செல்வநாதர் சொற்படியே அருகில் உள்ள புத்தகக் கடையில் வேண்டிய நூல்களை வாங்கிக்கொண்டு 'டிராம் லைனு'க்கு அடுத்த 'பஸ்' நிற்குமிடத்தில் பதின்மூன்றும் எண்ணுள்ள பஸ்ஸுக்குக் கால் மணி நேரத்துக்கு மேல் அவன் காத்துக்கிடக்க நேரிட்டது. பாவம், அவன் கெட்ட காலமோ என்னமோ, இரண்டு பஸ்கள் இடமில்லாமல் அவனை விட்டுச் சென்றன. மூன்றாவது பஸ் வருவதற்கு முன் தான் அழகி, அவன் பஸ் நிற்குமிடத்தில் புத்தகக் கட்டுடன் நிற்பதைக் கண்டாள். உடனே முருகனை அழைத்து அந்தப் பையன் நிற்பதைக் காட்டினாள்.

அந்தக் கூட்டத்தின் நடுவிலேயிருந்து எப்படி அந்தப் பையனை அழைத்துக்கொண்டு போவது என்று இரண்டொரு நொடியிலே முடிவு செய்து விட்டார்கள். முருகன் சற்றுப் பிரிந்து தனியே போய்விட்டான். அழகி ஓடிச் சென்று தனியனைக் கட்டிக்கொண்டு ஓவென்று அழ ஆரம்பித்து விட்டாள். அவளை முன்னமே தனியனும் நன்கு அறிவான். ஆதலால் ஏதோ அவளுக்கு துன்பம் வந்துவிட்டதென்று கருதி அவனும் அழ ஆரம்பித்துவிட்டான். மக்கள் கூடி விட்டனர். அழகி அவனைத் தன் தம்பி யென்றும், வீட்டை விட்டு ஓடிப் பல நாட்கள் ஆகிவிட்டன வென்றும், அவனைத் தேடித் தேடிக் காணாமல் அலைந்து வருந்தினள் என்றும் தற்

செயலாக அவனை அங்குப் பார்க்க நேர்ந்ததென்றும் கூறி அழுதாள். அவனும் உடன் அழவே வந்தவர்கள் அவள் சொல்லியதை உண்மையென்று நம்பினார்கள். அதற்கேற்ப முருகன் சற்று நேரம் கழித்து வந்து, புதியவனைப்போல் நின்று, தான் அவர்கள் இருவரையும் முன்னமே அறிந்திருப்பதாகவும் அவர்கள் உடன் பிறந்தவர்கள்தான் என்றும் கூறினான். தனியன் அவள் தம்பி அல்லன் என்று மறுக்கவுமில்லை. ஆம் என்று சொல்லவுமில்லை. பலரும் ஒருமுகமாக அவனை அழகியுடன் செல்லுமாறு கூறிவிட்டுச் சென்றார்கள். அழகியும் முருகனும் அவனை இருபுறமாகப் பற்றிக்கொண்டு 'வருக' என்றார்கள். அவனோ தான் மாம்பலத்தில் இருப்பதாகவும், அவனை ஆதரித்த செல்வநாதர் இட்ட பணியை முடித்து விட்டு, நூல்களையும் ரூபாயையும் அவரிடம் கொடுத்து விட்டு வந்து விடுவதாகவும் எவ்வளவோ மன்றாடினான். இறுதியில் அவர்கள் வழியே செல்ல வேண்டியவனானான். அவர்கள் படம் பார்ப்பதையும் விட்டுவிட்டு ஒரு வாடகை ஜட்காவை ஏற்பாடு செய்துகொண்டு, அவனை உடன் ஏற்றிக்கொண்டு தங்கசாலைக்குப் புறப்பட்டு விட்டார்கள். தனியன் தனது துன்பச் சூழல் இன்னும் தன்னை விட்டபாடில்லை என்று எண்ணிக் கொண்டே—கண்ணீர் விட்டுக்கொண்டே—செல்வநாதர் என்ன எண்ணுவாரோ என்பதைச் சிந்தித்துக்கொண்டே—அவர்களுடன் சென்று கொண்டிருந்தான். இன்பம் வாழ்வில் ஒரு திவலைதானா என்றது அவன் மனம். அழகி அவனை அடிக்கடி தேற்றினாள். எப்படியோ மறுபடியும் அவன் திருடர் கூட்டத்தில் ஒருவனானான்.

# VI

## விட்ட குறை

தென்னஞ்சோலை மாளிகையினுள் தனியன் புகுந்த போது நன்கு இருட்டிவிட்டது. அவன் முன் இருந்த இடத்தை நன்கு தெரிந்து கொண்டான். அழகி அவனைக் கண்டு பிடித்தாள் என்றாலும் உள்ளுக்குள் பாவம் ஏன் அவனை இப்படி அவதிக்குள்ளாக்கினேம் என்று எண்ணிக் கொண்டே வந்தாள். நல்ல இடத்தில் வளர்ந்து வந்தவனை இங்குக் கொண்டு சேர்த்ததற்குத் தான்தானே காரணம் என்று எண்ணும்போது உண்மையில் அவளுக்கு வருத்த மாகத்தான் இருந்தது. ஆனால் மார்த்தாண்டன் அவனை அன்று நன்கு புகழ்வான் என்ற எண்ணத்திலே அந்த வருத்தத்தை மறந்து இருந்தாள். எப்படியோ சோலை மாளி கைக்கு வந்து சேர்ந்து விட்டார்கள். முருகன் தனியனிட மிருந்த ரூபாய் ஐம்பதையும், நூல்களையும் வாங்கி வைத்துக் கொண்டான். சிறிது நேரம் கழித்து மற்றவர்களும் வந் தார்கள். அவ்விடம் தனியனைக் கண்டவுடன் மிகவும் மகிழ்ச்சி கொண்டார்கள். அன்று அவனை அனைவரும் நன்கு உபசரித்தார்கள். இழந்த மைந்தனைத் திரும்பவும் கண்ட தந்தையார் களித்ததாக இயேசு கூறும் கதைக்கு ஒப்ப அன்று அவர்கள் மகிழ்ச்சி சிறந்திருந்தது. அனைவரும் நன்கு உண்டனர். மறைந்தவன் கண்டு பிடிக்கப்பட்டான். சென்றவன் திரும்பி வந்தான்.

மறுநாள் பொழுது விடிந்ததும் மார்த்தாண்டன் வெகு வேகமாக உள்ளே வந்தான். அவன் தனியனைக் கண்டதும் ஆத்திரத்தால் ஓங்கி அடித்து விட்டான். அவன் ஓவென்று கதறினன். அனைவருக்கும் அவன்மேல் பரிவு உண்டாயிற்று. என்ன உண்டானாலும் என்? மார்த்தாண்டன் முன்னின்று பேச முடியாதே. பிறகு அவனை என்னென்னவோ கேள்வி

கள் கேட்டான். எதற்காவது அவன் வாய்திறந்து ஏதாவது பதில் சொன்னால் தானே. மனம் மட்டும் இன்னும் தன் துன்பச் சுழல் ஓயவில்லை என்று காட்டிற்று. மார்த்தாண்டன் மேலும் அவனை அடிக்கத் தொடங்கினான். அதற்குள் முருகன் வந்து அவனைத் தனியே அழைத்துக்கொண்டு போய்விட்டான். மார்த்தாண்டன் உள்ளே சென்றதும் மறைந்திருந்த அழகி வந்து தனியனைத் தனியாக அழைத்துக் கொண்டு சென்று ஆறுதல் கூறினாள். பாவம், தன்னால் தானே அவன் இத்தனைக் கொடுமைகளுக்கும் உள்ளாக நேர்ந்தது என்று எண்ணும்போது அவள் கண்களில் நீர் வழிந்தோடி வந்தது. தன் பொருட்டு அழும் அழகியைக் கண்டதும், தனியன் சற்று ஆறுதல் பெற்று அழுகையை நிறுத்தினான். முன்னாள் அப்படிக் காட்டிக் கொடுத்த அவளே அன்று அப்படி அழுகிறாள் என்பதைக் காண அவனுக்கே வியப்பாக இருந்தது. அவன் வியப்பினை முகத்தால் அறிந்தாளோ என்னவோ, அழகி வாய்விட்டே பேச ஆரம்பித்துவிட்டாள். 'தம்பி, இந்தப்பாவி யல்லவா உன் துன்பத்துக்குக் காரணமானேன். உன்னை நேற்று நான் காட்டிக் கொடுக்காவிட்டால் இந்தக் கதி உனக்கு இல்லையே. இரு. எப்படியாவது உனக்குச் சமயத்தில் உதவி செய்து என்னாலானதைச் சாதிக்கிறேன். இப்போது நீ வருந்த வேண்டாம். உனக்கு என்ன வேண்டுமானாலும் என்னைக் கேள். நான் தருகிறேன், என்று தேற்றினாள். அவள் தேற்றுதல் அவனுக்குச் சற்று ஆறுதலாக இருந்தது. என்றாலும் அக்கள்ளர் குழுவைவிட்டு எப்படிப் போவது என்பதே அவனுக்குப் பெருத்த சிந்தனையாகி விட்டது, அதற்கு மேலாகச் செல்வநாதர் ரூபாய் கொடுத்துத் திரும்பிச் சீக்கிரம் வாவென்று சொல்லி அனுப்பினாரே, அந்த அன்பு முகம்—அவன் கண் எதிரே காட்சியளித்தது. அவன் கொண்டுவந்த பணமும் நூல்களும்தாம் போயினவே இனி, தப்பிச் சென்று அங்கே அவர்முன் நின்றாலும் அவர் தன்னை நம்புவாரா என்றும் எண்ணினான். மற்றும், அவர் இருப்பது மாம்பலம் என்பது தெரியுமே ஒழிய, அந்த இடத்திற்குத் தனியே செல்ல வழி தெரியாதே எனத் தயங்கினான். இவற்றை யெல்லாம் எண்ணிக்கொண்டு, வெளியே

சென்ருல் இன்னும் ஏதாவது இன்னல் விளையின் என்ருேமோ என்று பயந்து, அங்கேயே இன்னும் சில நாள் இருப்பதென்று முடிவு செய்து விட்டான். அதற்கேற்ப அழகியின் அன்பும் அவன் எண்ணத்தை உறுதிபடுத்தியது. எப்படியும் அவள் அவனை நல்லபடி காப்பாற்றும் பொறுப் பைத் தான் ஏற்றுக்கொண்டதாக அவனிடம் கூறிஞள். அவனுக்கு ஏதாவது இன்னல் வருமேயாஞல் தன் தலையைக் கொடுத்தாகிலும் காப்பாற்றுவதாக உறுதியளித் தாள். அதற்குள் மற்றவர்களும் அங்குவந்து அவனுக்குப் பலவகையில் தேறுதல் கூறினர். எதற்கும் அஞ்சவேண்டு வதில்லை என்றும், அவனை எங்கும் வெளியில் அனுப்ப மாட்டார்களென்றும், அஞ்சாது அங்கேயே இருக்கலாம் என்றும் கூறிஞர்கள். எல்லாவற்றையும் காதில் வாங்கிக் கொண்டானே ஒழிய, தனியன் வாய்திறந்து ஒரு வார்த் தையும் சொல்லவில்லை. அதற்குள் உள்ளே இருந்த மார்த்தாண்டன் மறுபடியும் வெளியே வந்து அவனைப் பல வாறு எச்சரித்துவிட்டு, அவனை எங்கேயும் அனுப்ப வேண்டாமென்று ஆணையிட்டுவிட்டு, மற்றவர்களுக்கும் ஏதேதோ பாடங்கள் சொல்லிவிட்டுப் புறப்பட்டான். தனியஞல் தனக்குவர இருந்த ஒரு பெருந்தீங்கு ஒழிந்தது என்ற பெருமூச்சுடன் அவன் வெளியே போய் விட்டான்.

அன்று முதல் தனியன் அந்த மாளிகையை விட்டு வெளியில் வருவதே இல்லை. மற்றவர்களெல்லாம் நாள் தோறும் வெளியில் செல்வதும், வேண்டியவற்றைத் திருட்டு வழியில் சம்பாதித்து வருவதும், வாழ்வதுமாக இருப்பதைக் கண்டான். அவனும் அழகியும் மட்டும் வீட்டில் இருந்து கொண்டிருப்பார்கள். அழகி முன்னும் சரி, அப்போதும் சரி அவனைப்பற்றி அறியக் கேள்வி கேட்டுக் கொண்டிருந்தாள். பாவம், அவனுக்குத் தாய் தந்தையர் யார் என்று தெரிந்தால்தானே சொல்ல. எப்படியோ அவன் அண்ணுமலையைச் சேர்ந்த ஓர் அஞதை என்று மட்டும் சொல்லி வந்தான், அவளும் ஓர் அஞதை. ஆதலால் தன்னைப்போன்ற அவனைத் தக்க வகையில் பாதுகாத்து

வந்தாள். அவள் சொல்லுக்கு மாறு சொல்லமாட்டான் முருகன். எனவே மார்த்தாண்டன் வந்துபோகும் அந்த வேளைகளில் தவிர, மற்ற நேரங்களில் தனியன் தன் விருப்பப் படியேதான் வாழ்ந்து வந்தான். அவன் வாழ்வைக் கண்ட இரண்டொரு பிள்ளைகளும்கூடப் பொறாமை கொண்டனர். அவர்களெல்லாம் ஓடி ஆடி உயிரைப் பிடித்துக்கொண்டு சம்பாதித்துவர, அவன் மட்டும் முதலாளிகளுடன் உல் லாசமாக வாழ்வது கண்டு அவர்கள் பொறாமைப்படுவது முறைதானே.

தனியன் வெளியே செல்லவில்லையே தவிர வீட்டிலேயே திருட்டுத் தொழிலை யெல்லாம் பயின்று கொண்டிருந்தான். மார்த்தாண்டன் அவனைக் கடிந்தாலும் கூட, அவனிடம் ஒருதனி எண்ணம் வைத்திருந்தான், இவனுக்கு நன்கு பாடம் கற்றுக் கொடுத்துப் பயிற்றி விட்டால் மற்றவர்களைக் காட்டிலும் அவனே அதிகமாகக் கொண்டுவருவான் என்ற எண்ணம் எப்படியோ அவனுக்கு உண்டாகிவிட்டது. எனவே அவனுக்கு அதிகமாக அந்தக் கலையைக் கற்பித்து வந்தான். ஆம், நம் நாட்டில் உள்ள கலைகளில் திருடுவதும் ஒரு கலையாக ஆகி விட்டது. 'களவும் கற்றுமற' என்ற சொல் ஊரறிந்த சொல்லாகி விட்டது. அதற்கு வெவ்வேறு பொருள் சொல்ல முயன்றாலும். 'திருடு வதையும் கற்றுக்கொள். பிறகு வேண்டுமானால் மறந்துவிடு' என்ற பொருள் எல்லோர் உள்ளத்திலும் நன்கு பதிந்து விட்டது. அது மட்டுமின்றி நாட்டு நிலையும் களவுக் கலையை வளர்க்கும் நெறியில் தானே அமைந்து விட்டது. அதைக் கற்றுக் கொடுக்க ஒரு பள்ளிக்கூடம், ஆசிரியர் எல்லாம் தேவையா என்று தானே கேட்கத் தோன்றுகிறது. ஆம், அந்தக் கலை சொல்லாமல் வளருவது; கேளாமல் பயிலுவது. என்றாலும் திறமையும் சிறப்பும் பெற வேண்டுமானால் பள்ளிக்கூடம், தேவைதான். இன்று நாட்டில் நல்ல வேளை யாக அந்தகைய பள்ளிக்கூடங்கள் கிடையா!

'இன்று உலகத்திலே களவு எத்தனையோ வகையில் நடைபெறுவதைக் காண்கின்றோம். சிலர் பட்டப்பகலில்

யாவர் கண்களும் திறந்திருக்கும்போதே கொள்ளை அடிக்கின்றனர். ஆனால் அவர்களுக்குக் கொள்ளைக்காரர் என்ற பெயர் கிடையாது; வியாபாரி என்று பெயர். கொள்வதூஉம் மிகை கொள்ளாது, கொடுப்பதூஉம் குறைபடாது. தமிழர் அன்று மேற்கொண்ட வாணிபம் இன்று ஏட்டிலே இருக்கிறதே ஒழிய நாட்டிலே இல்லை. இந்தச் சண்டை ஏன் நின்றது என்ற அளவுக்குக்கூடச் சில கொள்ளைக்காரர்கள் பேசிக் கொள்ளுகின்றனர். கொரியா போர் உலகப் போராக மாருதா என்று எண்ணுகின்றவரும் நாட்டில் உள்ளனர். சண்டையின் காரணமாகக் கொள்ளையடித்தவர் நாட்டில் எத்தனை பேர்! கொள்ளை அடித்தவற்றையும் கள்ளக் கணக்கில் காட்டாது மறைத்து, அரசாங்கத்துக்குச் சேர வேண்டிய வரியையும் சேர்த்து மூடியவர் எத்தனை பேர்? இவர்களெல்லாம் நாட்டில் பெரிய மனிதர்களாக உலவுபவர்கள் தாம், இவர்களுக்குத் திருடர் என்ற பெயர் கிடையாது.

மலேயா, இரங்கூன் முதலிய நாடுகளில் நடக்கும் வேடிக்கையான கொள்ளையை இன்று அறிகின்றோம் நாம். ஒரு கூட்டமாக வருவது, செல்வரைத் தூக்கிச் செல்வது, மறைத்து வைப்பது, பெரும் பொருள் கேட்பது, அவர் உறவினர் மூலம் பொருளைப் பெறுவது, பிறகு கொண்டு வந்து விடுவது, இதுபோன்ற கொள்ளை அவ்விடங்களில் மிகச் சாதாரணச் செயலாகி விட்டது. ஆம், அவர்களுக்கும் கள்ளர், திருடர் என்ற பெயர்களில்லை. அவர்கள் அரசியல் காரணமாகப் போராடும் பொதுநல வாதிகள்.

நம் நாட்டிலுங்கூட, ஏன் நம் மாகாணத்திலுங் கூடக் கூட்டங் கூட்டமாகக் கிராமங்களுக்கு இரவில் மட்டுமல்லாது, பகலிலும் சென்று துப்பாக்கியைக் காட்டிப் பயமுறுத்திப் பொருளைப் பெற்றுச் செல்லும் நிகழ்ச்சி அன்றாட நிகழ்ச்சியாகிவிட்டது. அதைத்தடுக்க அரசியலார் என்ன முயற்சி செய்தும், அத்தொழில் மேன்மேல் வளர்ந்து கொண்டே போகின்றதன்றி குறைவதாகக் காணோம். ஆம், அவர்களும் திருடரல்லர். நாட்டின் நலம் விரும்பும் போது மக்களின் நண்பர்.

மற்றும் பாங்கிகளிலும், பெரிய வாணிப நிலையங்களிலும் பல ஆயிரக்கணக்கான ரூபாய்களை ஒரு சில நொடிகளில் அனைவரையும் ஏமாற்றிக் கொள்ளை கொள்ளும் கூட்டத் தாரும் இன்று நாட்டில் உள்ளனர். அவர்களெல்லாம் அகப்பட்டாற்தானே சிறைக்குப்போக, திருடர் என்ற பெயரைப் பெற.

பாவம், எவ்வளவு வருந்தி வேலை செய்தாலும் ஒரு வேளை உணவுக்கும் எட்டவில்லை என்று ஏங்கும் உழைப் பாளி, மக்களுக்கும் மனைவிக்கும் கட்டக் கந்தையில்லை என்று கலங்கும் பணியாளன், பாபத்துக்கு அஞ்சி அஞ்சிப் பட்டினி கிடந்தும் அதற்கும் ஆற்ருது எங்காவது பைகளில் கையை விட்டோ, கடைகளில் கையை விட்டோ, எண்ணக் கூடிய சில காசுகளை, சில பொருள்களை, கொண்டு சென்று வாழவிரும்பினுல் அவன் திருடன் என்ற பட்டத் தோடு சிறைக் கதவைத் திறந்து உள்ளே தள்ளப்படு கிருன். பெரும் கொள்ளைக்காரர்கள் நாட்டின் தலைவர் களாக உலவும் அதே நேரத்தில், சிறு திருடர்கள், வாழ்வின் தேவைக் கேற்றவும் வயிற்றுப் பிழைப்புக் கேற்றவுமான பொருள்களை, கிடைக்காத காரணத்தால்—உள்ளவரிடம் கேட்டும் கொடுக்காத காரணத்தால்—சிறையில் தள்ளப்படும் செயல் இந்த நாகரிக உலகத்தில் நடக்கும் காட்சியாகத் தானே உள்ளது. நாளொன்றுக்குக் கோடிக்கணக்கிலும், லட்சக்கணக்கிலும் பிறர் பொருள்களையும் செல்வத்தையும் பல வகைகளில் கொள்ளைகொண்டு செல்வரென வாழும் அவர்களே தாம், திருடனுக்குத் தண்டனை என்று திட்ட மாகச் சட்டம் தீட்டுகின்றவர். ஏன் இந்தக் கொடுமை?

நாட்டில் பல கொடுமைகள் ஒழிய வேண்டுமெனத் தலை வர்கள் மேடைகளில் பேசுகிருர்கள். உரிமை நாட்டில் உலவுகிறோம் என்று கூறுகிருர்கள். யாருக்கு உரிமை யென்று எண்ண மறுக்கிருர்கள். உள்ளவனுக்கு உரிமை. அவன் அன்றும் உரிமையோடு தான் வாழ்ந்தான். இன்றும் இன்னும் உரிமையோடு வாழ்கின்ருன். ஆனுல் அந்த ஏழைக்கு—விண்ணே கூரையாய் மண்ணே பாயலாய் அன்

ருடம் உண்ணுவிரதம் இருக்கும் அந்த ஏழைக்கு—என்ன உரிமை? நாளைக்குப் பத்து மணி நேரம் மாடாக உழைத்தாலும், வயிற்றுக்கெட்டாக் கூலிகொண்டு மனைவி மக்களை வைத்துக்கொண்டு ஏங்குகிருனே—அந்த ஏழைக்கு ஏது உரிமை? அவன் தவறி நடந்தால் திருடன் என்று சிறையிடைத் தள்ளப்படுகிருன். ஏன் இந்தக் கொடுமை? பொருளாதார வேறுபாடன்ருே காரணம். நாட்டில் பொருளாதார நிபுணர்கள் ஆயிரக் கணக்கில் தங்கள் பைகளை நிரப்பிக் கொண்டு ஊர்தோறும் பவனிவருகிருர்கள். சிந்தித்தார்களா அவர்கள் இந்த ஏழைகள் நிலையை? சிந்திக்க வேண்டாமென்று அரசாங்கம் ஏதாவது ஆணையிட்டதா? இல்லை பின் என்ன வகையில் அவர்கள் பொருளாதாரத்தை அளக்கிருர்கள். வெளிநாட்டான் ஒருவன் மாலையிலோ இரவிலோ துறைமுகத்துக் கெதிரிலும், கொத்தவால் சாவடிக்குப் பக்கத்திலும், மூர்மார்க்கெட்டைச் சுற்றிலும், சட்டக் கல்லூரிக்குப் பின்னும் சுற்றிப் பார்ப்பானே ஆயின் இந்தப் பொருளாதார நிபுணர்கள் பல ஆயிரம் அடிக்குக் கீழ் தள்ளப்பட வேண்டியவர்கள் என்று தானே கூறுவரின். இதற்கென அவர்களுக்குச் செலவு செய்யும் பணத்தை இந்த ஏழைகளுக்குக் குடில் அமைப்பதில் செலவிட்டால் எவ்வளவோ நாட்டின் பொருளாதாரம் முன்னேறியிருக்குமே.

பொருளாதாரம் ஏட்டில் எழுதப் படுவதன்று; மேடையில் பேசப்படுவதன்று; ஊர் சுற்றி உல்லாசப் பவனிவருவதன்று. பொருளாதாரம் நாட்டில் விளைவது. செல்வர் வறியர் என்ற தீமை அறுப்பது. வாழ்கிற மக்களின் வாட்டம் தீர்ப்பது. எத்தனை பேர் உண்டோ அத்தனை பேருக்கும் உண்ண உணவும் உடுக்க உடையும் அளிப்பது. இவற்றை யெல்லாம் இன்றைய பொருளாதார நிபுணர்கள் எண்ணிப் பார்க்க ஏது நேரம்?

உண்மையில் நாட்டில் திருடர்களும் கொள்ளைக் கூட்டத்தாரும் உடனடியாக ஒழியவேண்டுமாளுல் பொருளாதார நிலை சீர்திருந்த வேண்டும். உழைப்பவன் அதன் பயனைப்

பெறவேண்டும், எல்லோரும் எல்லாச் செல்வமும் எய்த வேண்டும். ஆண்டுதோறும் பல வீடுகள் கட்டினாலும் தனக்கிருக்க வீடில்லாத் தச்சரும், கொல்லரும் நம் நாட்டில் இல்லாது ஒழியவேண்டும். ஆண்டு முழுதும் வயலில் வேலை செய்தாலும் அரைவயிற்றுக்கும் கஞ்சியில்லாது, முதலாளி யின் களஞ்சியம் நிறையும் கொடுமை ஒழியவேண்டும். அந்த நிலைக்கு அரசாங்கமும் பொருளாதார அறிஞர்களும் முயன்று வழிவகுத்து, சட்டத்தாலும் திட்டத்தாலும் பாடுபட வேண்டும். இன்றேல் இன்றைய சிறு திருடர்கள் நாளைக் கொள்ளைக் கூட்டத்தாரெனத் திடீர்த் தோற்றத்தாராகி, வீடு வீடாக, ஊர் ஊராகக் கொள்ளை அடிப்பது, கொலை செய்வது, எப்படி என்று எண்ண ஆரம்பித்து விடுவார்கள். ஆம், இத்தகைய எண்ணங்களுடன் மார்த்தாண்டன் தன் திருட்டுத் தொழிலைக் கொள்ளைத் தொழிலாகப் பெருக்கத் திட்டமிட்டுக் கொண்டிருந்தான்.

மார்த்தாண்டனுடைய செலவு வரவுக்குமேல் சென்று கொண்டிருந்தது. இந்தப் பிள்ளைகள் கொண்டுவரும் அந்தக் குறைந்த ஊதியம் அவனது ஆடம்பர வாழ்வுக்குப் போதியதாக அமையவில்லை. மற்றும் அவன் மகன் முருகன் வேறு தன் குடும்பச் செலவைப் பெருக்கிக் கொண்டே போனான். ஆகவே மார்த்தாண்டன் தன் தொழிலைப் பெருக்கத் திட்டமிட்டான். இரவு வேளைகளில் பெரிய பங்களாக்களில் புகுந்து கொள்ளையடிக்க வழிகள் என் னென்ன உண்டோ அத்தனையும் ஆராய்ந்தான். அதற்குத் துணையாயிருப்பதற்காக வீரப்பன் என்பவனையும் சேர்த்துக் கொண்டான். வீரப்பன் திருட்டுத் தொழிலில் கைதேர்ந்த வன். இளைஞனயினும் பல முறை சிறை சென்றவனும்கூட. அவன் துணையால் எப்படியும் பெரும் பொருள் குவிக்க லாம் என்ற எண்ணம் மார்த்தாண்டனுக்கு வந்துவிட்டது என்றாலும் அவனுக்கு ஒற்றியூர்த் தென்னஞ்சோலை மாளி கையைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. தேவையானபோது அவனைத் தங்கசாலைக்கு வரவழைத்து வேண்டிய ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தான். மேலே நடத்தப்போகும் கொள்ளைக்குக் கொலையும் கூடவே இருக்கவேண்டிய ஒன்று

என்று இருவரும் திட்டமிட்டார்கள். அதன்படி மார்த்தாண்டன் ஒரு ரிவால்வர் தனக்கென வாங்கியும் வைத்துக் கொண்டான். அவர்கள் திட்டம் நாள்தோறும் வளர்ந்து கொண்டே வந்தது. முடிவில் ஒருநாள் இரவு பிரம்பூரில் உள்ள ஒரு பெருமாளிகையில் திருட வேண்டுமெனத் திட்டமிட்டார்கள்.

பிரம்பூர் சென்னையைச் சேர்ந்து இருந்தாலும் அவ்வூர் சென்னையுடன் புதிதாகச் சேர்ந்த ஒரு பகுதி. நகராண்மைக் கழகத்தார் புதுப் பகுதியில் ஒன்றும் திருத்தமும் வளர்ச்சியும் செய்யாவிட்டாலும், பிற பகுதிகளிலுள்ள வீடுகளுக்கு வரிகள் வாங்குவது போன்று அங்கும் வாங்கிக் கொண்டு தான் இருந்தார்கள். அவர் தம் வருவாயைப் பெருக்குவதற்கு இப்படிப் பிற பகுதிகளைச் சேர்ப்பதை ஒரு வழி என்று கொண்டார்கள் போலும். குடிநீர் இல்லையானாலும் எங்கும் நீர் தேங்கினாலும், சாலை அமையாவிடினும், கட்டும் காவலும் அற்றபோதிலும் அவர்களுக்குக் கவலை ஏது? அங்கே கட்டும் காவலும் அவ்வளவு அதிகமாக இல்லை. கட்டும் காவலும் இருந்தாலுமே கலங்காத வீரப்பனுக்கு ஒன்றுமில்லாத அந்த இடத்தில் திருடுவது ஒரு பெரிதாகத் தெரியவில்லை. அங்கே ஒரு பெருஞ் செல்வர் குமரவேல் என்பவர் இரண்டொரு ஆண்டுகளுக்கு முன் இறந்து விட்டார் அவருக்கு ஒரே மகள் இருந்தாள் அவர் மனைவியும் மகளும்தாம் அவருடைய முழுச் செல்வத்துக்கும் உரியவர்கள். அவர்கள் அங்கேயே பிரம்பூரில் தங்கள் மாளிகையில் தங்கி வாழ்ந்து வந்தார்கள் குமரவேலர் இருக்கும்போதே வீட்டில் நிறைய ஆட்கள் இருந்தனர். அவர் இறந்த பிறகும்கூட ஆட்களுக்குக் குறைவில்லை. பக்கத்தூரில் உள்ள நிலங்களைப் பார்த்துக்கொள்வதற்கும், சென்னையிலுள்ள வீடுகளுக்கு வாடகை வாங்குவதற்கும் பிறவற்றிற்குமாகப் பல பணியாளர்கள் இருந்தார்கள். கமலாம்பாள் என்ற அந்த அம்மையாரும் தன் மகள் மணிமேகலையுடன் தங்கள் மாளிகையிலேயே வசித்து வந்தார்கள். மணிமேகலைக்கு வயது பத்துதான் இருக்கும். சமையற்காரன் தோட்டக்காரன் ஆகியோர் எப்போதும் அம்மாளிகையி

லேயே தங்கியிருந்தனர். அந்த அம்மையாரது நெருங்கிய உறவினர் ஒருவர் அடிக்கடி வந்து அவர்களை விசாரித்து விட்டுச் செல்வது வழக்கம். அந்தப் பெருமாளிகையைத்தான் மார்த்தாண்டனும் வீரப்பனும் குறிபார்த்தார்கள். வீட்டில் பெரும்பாலும் பெண்கள்தானே படுத்துக்கொள்வார்கள் என்ற எண்ணம் அவர்களுக்கு.

முதலில் பிரம்பூர் சென்று அந்த மாளிகையைப் பற்றிய நுணுக்கங்களையெல்லாம் அறிந்துகொண்டு வந்துவிட்டான் வீரப்பன். ஒரு தோட்ட வேலைக்காரனைப்போலச் சென்று தோட்ட வேலை கிடைக்குமா என்று கேட்டறிந்து உள்ளே சென்று தங்கிப் பலவற்றைப் பற்றிப் பேசிக் கொண் டிருந்து வந்தான். புறக்கடை வாயிலுக்குச் செல்வதற்கு உள்ளிருந்து ஒரு நீண்ட தாழ்வாரம் சென்றதையும், அந்தத் தாழ்வாரத்தின் கோடியில் அழகாகச் சிமிட்டியால் செய்யப் பட்ட ஒரு வளைவு இருந்ததையும், அந்த வளைவுக்குள் சிறியவர் புகுந்து செல்ல முடியும் என்பதையும் நன்கு கண்டுகொண்டான். எனவே நல்ல நடு இரவில், யாராவது சிறுவருடன் சென்று, அவனை உள்ளே அனுப்பிப் பின் கதவைத் திறக்கச்செய்து, பிறகு தாங்களும் உள்ளே புகலாம் என்று திட்டமிட்டுக் கொண்டே வீரப்பன் வழி கண்டுவிட்டதையும் தன்னுடன் இன்னொருவரும் ஒரு சிறு பையனும் வரவேண்டுமென்றும் கேட்டான். மார்த் தாண்டன் என்றும் இதற்கெல்லாம் வெளியே கிளம்ப மாட்டான். தப்பித் தவறி எங்கேயாவது அகப்பட்டு விட்டால் தன் பெருமை என்னுவது என்ற எண்ணத்தில் அத்தொழிலில் தான் நேரடியாகக் கலந்து கொள்வதில்லை. அதுமட்டுமன்றி அந்தத் திருட்டுப் பள்ளிக்கூடத்தையே தன் வீட்டுக்கு நெடுந்தொலைவில் வைத்ததற்கும் காரணம் அதுதான். ஆகவே தான் எக் காரணத்தாலும் வீரப்ப னுடன் வரமுடியாது என்று சொல்லிவிட்டான். தன் மகன் முருகனை உடன் அனுப்புவதாகச் சொன்னான். சிறு பையன் வேண்டுமே என்று இருவரும் நெடுநேரம் ஆழ்ந்து சிந்தித்தார்கள். சிந்தனையின் முடிவிலே தனியன் வந்து சேர்ந்தான். மார்த்தாண்டன் தன்னிடம் பதினைந்து வயது

மதிப்பிடக்கூடிய ஒரு சிறுவன் இருக்கிருன் என்றும், அவனை உடன் அனுப்பலாம் என்றும் சொன்ஞன். மறுநாள் அவனை வரவழைத்து நேரில் காட்டிஞன். எனினும் அவன் ஒரு வேளை உள்ளே சென்று வீட்டுக்காரரை எழுப்பி விட்டால் என்ன செய்வது என்ற ஐயம் இருவர் உள்ளத்தும் தோன்றி யது. ஆனல் மார்த்தாண்டன் அவனை முழுதும் நம்பி, ஒன்றும் தெரியாதவன் அவன் என்று எண்ணியிருந்ததால் திட்டமாக அவனை அழைத்துச் செல்லலாம் என்ருன். வீரப் பனும் நாள்குறித்து அனைவரையும் தயாராயிருக்கும்படிகூறி விட்டுச் சென்ருன். ஆம், குறித்த ஒருநாளில் வீரப்பன் முருகன். தனியன் ஆகியோர் புறப்பட்டனர். வீரப்பனுக் குத் துணையாக மார்த்தாண்டனது ரிவால்வர் இருந்தது. நள் இரவு. மூவரும் பிரம்பூர் நோக்கிச் சென்று கொண்டிருந் தனர்.

புறப்படுவதன் முன் அழகி அன்று முருகனும் தனிய னும் எங்கே செல்கிருர்கள் என்பதையும் அப்படிச் செல்லு தல் என்றும் துன்பம் தரத்தக்க தென்பதையும் அறிந் தாள். முருகனிடம் அவ்வாறு செல்ல வேண்டாமென மன் ருடிக் கேட்டுக் கொண்டாள். தனியன் முன் போலவே மறு படியும் எங்கேயாவது காணுது போய்விடப் போகிருன் என்று எச்சரித்தாள். என்ன சொல்லியும் அவர்கள் கேட்க வில்லை. தனியன் எங்கு வராது போய்விடுவானே என்ற காரணத்தால் அவனை முன்னமே சில நாட்கள் நன்கு உப சரித்தார்கள். உயர்ந்த பட்டாடை முதலியன வாங்கித் தந்தார்கள். அதுவரையில் அவன் அணியாத வகையில் சிறந்த ஆடைகளையும், உண்ணுத வகையில் சிறந்த பண்டங் களையும் கொண்டு வந்து கொடுத்தார்கள். அவனுக்கு ஒன் றுமே புரியவில்லை.

பலி பீடத்துக்கு முன் நிறுத்தப் போகும் ஆட்டின் நிலையில் அவன் அலங்கரிக்கப்பட்டான். கடைசியில் அவர் கள் சொற்படியே அவர்களுடன் பிரம்பூர்ச்சாலையில் சென்று கொண்டிருந்தான்.

போகும் வழியில் முருகனும் வீரப்பனும் அவன் என்னென்ன செய்ய வேண்டுமென்று சொல்லிக்கொண்டே சென்றார்கள். வீரப்பனைக் கண்டதும் ஏனோ தனியன் நடுங்கினான். அவன் தோற்றமே தனியனை அச்சுறுத்தியது. இருட்டில் இருட்டறையில் எதிர்த்து வருபவர்களை விரட்டி ஓட்டத்தக்க அத்துணை பயங்கர உருவம் வீரப்பனுடையது. அஞ்சிய தனியனை முருகன் தேற்றினான். வீரப்பனும் பல இனிய ஆசைவார்த்தைகள் சொல்லிக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டே போனான். வழியில் எப்படியோ ஒரு வண்டி ஏற்பாடு செய்துகொண்டு எங்கோ ஒரு மூலையில் இறங்கினார்கள். மணி பதினொன்று அடித்தது கேட்டது. தனியனும் முருகனும் கையில் பாட்டரி விளக்குகள் வைத்திருந்தார்கள். வீரப்பன் கையில் துப்பாக்கி யிருந்தது. அதை ஒருவருக்கும் தெரியாதபடி மறைத்து வைத்திருந்தான். தனியன் எப்படி அந்தக் குறுகலான சாளரத்தின் வழியாகச் சந்தடி செய்யாமல் குதிக்கவேண்டு மென்பதையும், நேரே குறுகிய தாழ்வாரத்தின் வழியாகச் சென்று பின்புறக் கதவைத் திறக்கவேண்டு மென்பதையும், திறந்த பின் அவர்களும் உள்ளே வந்து விடப்போவதால் அஞ்ச வேண்டுவதில்லை என்பதையும் விளக்கிக்கொண்டே சென்றார்கள். தனியனோ தன் வாழ்நாளின் கடைசி நாள் அதுதானோ என்று எண்ணிக்கொண்டே பயந்து பயந்து சென்றான்; எப்படி ஏறுவது, இறங்குவது, சந்தடி செய்யாமல் நடப்பது, தாழ்ப்பாளைக் கண்டு திறப்பது, புது இடத்தில் ஏதேனும் நேர்ந்தால் என்ன செய்வது என்பன போன்ற பல எண்ணங்கள் அவன் உள்ளத்தில் சுழன்று வட்டமிட்டன. தனது 'துன்பச் சுழல்' அவனை உள்ளே ஆழ்த்துவதாக உணர்ந்தான். வாழ்நாளிலே கண்டறியாத, செய்தறியாத ஒருசதிச் செயலைத் தான் செய்யப் போவதை எண்ணாதிருக்க அவனால் முடியவில்லை. நன்றாகத் தன்னை அறிந்த நிலையில் இன்று அவன் இருக்கிறான். ஆதலினால் அத்தொழிலுக்கு அவன் மனம் இடம் கொடுக்கவில்லை. என்றாலும் காப்பாற்றினவர் கட்டளை அதுவானால் அவன் என்ன செய்வான்? மூவரும் மாளிகைத் தோட்டத்துக்குள் நுழைந்துவிட்டனர்.

மணி பன்னிரண்டும் ஆகிவிட்டது; ஒன்றை எட்டிப் பார்க்கும் நேரம். வீரப்பன் தனியனைத் தூக்கி மெள்ள அந்தச் சாரளத்தில் விட்டான். சாளரம் மிகச் சிறியதாத லால் மிகவும் வருத்தத்தோடுதான் தனியன் உள்புகுந்தான். அப்போதும் அவனை வீரப்பன் எச்சரித்துக் கொண்டுதான் இருந்தான். அந்தச் சாளரத்திலிருந்து நேரே பின் கதவு தெரிந்தது. அப்படியே சென்று கதவைத் திறக்க வேண்டு மென்றும், அன்றி வேறு வழியாகத் திரும்பிச் சந்தடி செய்து யாரையாவது எழுப்பினால் அப்படியே சுட்டுவிடுவ தாகவும் பயமுறுத்தி அனுப்பினான். கையில் பாட்டரியுடன் தனியன் தெரியாத வீட்டுப் பின் புறத்தில் குதித்து அடிமேல் அடி எடுத்து வைத்தான். நடை மெதுவாக இருந்ததே ஒழிய அவன் எண்ணம் விரைவாக ஓடிற்று. ஏன் அப்படியே திரும்பிச் சென்று உறங்குபவர்களை எழுப்பலாகாது என்று எண்ணினான்; அல்லது அங்கிருந்தே கூச்சல் போட்டால் அனைவரும் எழுந்துவிடமாட்டார்களா என்ற எண்ணமும் வந்தது. ஆனால் எல்லாவற்றிற்கு மேலாகச் சோறிட்டவன் கட்டளையை மீறாதே என்று மனச்சான்று சொல்லிற்று.

தனியன் குதித்த சிறு ஓசையிலேயே பின்புறக் காவல் காரன் சற்று விழித்துக் கொண்டான். ஏதோ பூனையாக இருக்கும் என்று மறுபுறம் திரும்பிப் படுத்துக்கொண்டான். சற்று நேரத்துக்குள் பாட்டரி வெளிச்சம் தெரியவே அவன் சந்தேகப்பட்டுத் திரும்பிப்பார்த்தான். தனியன் அடிமேல் அடிவைத்துச் செல்வது தெரிந்தது. உடனே அலறி எழுந்து தன் பாட்டரி விளக்கைப் போட்டுக்கொண்டு அவன் பின்னா லேயே சென்றான். அதை வெளியிலேயே யிருந்து கண்ட வீரப்பன் ஆத்திரத்தோடு அவனைக் குறிபார்த்துச் சுட்டான். சாளரவழியாகக் குண்டு உள்ளே பாய்ந்தது. ஆனால் அந்த வேலைக்காரன் தப்பிவிட்டான். தனியன் காலில் குண்டு பாய்ந்து விட்டது. 'ஆ' என்று அலறி வீழ்ந்தான். துப்பாக்கிச் சத்தமும் பையன் அலறலும் சேர்ந்து மாளிகையி லுள்ள அனைவரையும் எழுப்பிவிட்டன. வீரப்பனும் முருக னும் தாம் தப்பினால் போதுமென்று அப்படியே ஓடிச்சென்று விட்டார்கள். வீட்டு மின்சார விளக்குகளெல்லாம் ஏற்றப்

பட்டன. அனைவரும் பின்பக்கம் ஓடிவந்தார்கள். மனைத் தலைவியாரும் வந்தனர். சிறுவன் தனியன் காலில் பட்ட குண்டோடு மயக்கமாக வீழ்ந்து கிடந்தான். அம் மனைத் தலைவி கமலம்பாள் அந்த இளம் முகத்தைக் கண்டு அவனை மாளிகை உள்ளே பத்திரமாகத் தூக்கிக் கொண்டுவந்து கட்டிலின்மேல் கிடத்துமாறு செய்தாள். திருடர்களைத் தேடி மாளிகைத் தோட்டத்தின் நாற்புறமும் ஆட்கள் துருவினர். அவர்கள் இருந்தால்தானே அகப்பட.

தனியனைக் கொண்டு வந்து படுக்கையில்போட்டுத் தன்னாலியன்ற முதல் உதவி வகையில் கட்டுகள் கட்டி இரத்தம் வராமல் பார்த்துக்கொள்ள ஏற்பாடு செய்தார் இல்லத்தலைவியார். திருடரது துணிகரச் செயலை நோக்கி ஒருபுறம் வருத்தம் அதிகரித்தது. உடனே போலீசுக்குத் தகவல் சொல்லி அனுப்பலாமா என்று எண்ணினாள். ஆனால் மறுபடியும் போலீஸ வந்தால் யார் இருக்கிறார்கள் பிடித்துச் செல்ல. பாவம், இந்தச் சின்னஞ் சிறு பையன்தானே இருக்கிறான் என்று எண்ணுவாள். தனியனுடைய குழந்தைத் தன்மை, மாறாத இளமை முகம், கமலாம்பாள் உள்ளத்தைப் பிணித்தது. இவள் மகள் மணிமேகலை எழுந்துவந்து தனியன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு அழத் தொடங்கி விட்டாள். வேலைக்காரர்களெல்லாம் உடனே போலீசைக் கொண்டு வரவேண்டும் என்று கூச்சலிட்டார்கள். தனியன் சற்று மயக்கம் தெளிந்தவனாய்த் தண்ணீர் வேண்டுமென்று கையைக் காட்டினான். தண்ணீரைக் கொண்டுவந்து தன் கையாலேயே சிறுகச் சிறுகக் கொடுத்தாள் கமலாம்பாள். அவள் உள்ளம் அந்தச் சிறு பையனைத் திருடனென்று எண்ணாமல் நல்லவனாகக் கொண்டது. போலீசை அழைத்து வர இருந்த வேலைக்காரர்களை நிறுத்தி உடனே ஒரு கை தேர்ந்த மருத்துவரை அழைத்துவருமாறு ஆணையிட்டாள் மனைத் தலைவியார். அம்மையின் சொல்லுக்கு மறு சொல் பேசாத பணியாளர் உடனே ஒருவனை அனுப்பி மருத்துவரை அழைத்து வரச் செய்தனர். கமலாம்பாளும், மணிமேகலையும் தனியன் படுக்கையின் இருபுறத்திலும் உட்கார்ந்துகொண்டு அவனையே நோக்கிக் கொண்டிருந்தனர்.

அவனே மயக்கமாகவே கண்மூடிக் கிடந்தான். இருவரும் வைத்த விழி வாங்காதிருந்தனர். மணிமேகலையின் கண்ணில் நீரும் கசிந்தது. இளம் பெண்ணுக்கு அவனைப் போன்ற ஒரு இளைஞன் வாடுவது பொறுக்க முடியாத ஒன்றுதானே! மருத்துவரை அழைக்கச் சென்றவன் விரைவிலே மருத்துவருடன் திரும்பி வந்தான். சென்னையில் ஒருசில மருத்துவர்களைத் தவிர மற்றவர்கள் இரவில் வெளியே தலைகாட்டமாட்டார்கள் என்பது அறிந்தே கமலாம்பாள் கவலைகொண்டிருந்தாள். எனினும் மருத்துவர்—தங்கள் வீட்டுக்குப் வழக்கமாக வருபவர்—உடனே வந்து விடவும் மகிழ்ந்தாள். வந்ததும் மருத்துவரிடம் துப்பாக்கிக் காயத்தைச் சொல்லிச் சோதனை செய்யச் சொன்னாள். ஒருமணி நேரம் ஆழ்ந்து ஆராய்ந்து, காயத்துக்கு ஏற்ற மருந்தும் இட்டுக் கட்டிப் பிறகு டாக்டர் பேசலானார்: அவன் காலில் பட்டதால் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாமென்றும், அதிர்ச்சியாலேயே அவன் மயங்கிக் கிடக்கிறான் என்றும், காலில் குண்டுத் துணுக்குகள் ஒன்றும் தங்கவில்லை என்றும் சொல்லி/அவர் புறப்படத் தயாரானார். எனினும் கமலாம்பாள் அவரைச் செல்லவிடவில்லை. அவன் மயக்கம் தெளியும் வரையில் அருகிலேயே இருந்து ஆவன செய்ய வேண்டுமென்றும், 'பீஸ்' எவ்வளவானாலும் கவலை இல்லையென்றும், பையன் எப்படியும் நலமுற வேண்டுமென்றும் மன்றாடிக் கேட்டுக் கொண்டாள். மருத்துவரும் மறுமொழி பேசாது உட்கார்ந்தார். விடியற்காலை நான்கு மணிக்குக் கண் விழித்தான் தனியன். ஏதோ ஒரு பளு காலில் அழுத்தியது போன்று இருந்தது. ஓவென்று அலறினான். கமலாம்பாள் அவன் தலையைத் தன் மடியின்மேல் எடுத்து வைத்துக்கொண்டு பாலைச் சிறிது சிறிதாக உண்பித்தாள். தாயார் கையாலே பால் உண்ணும் பேறு பெறாத அந்தச் சிறுவன் இச்செயலை மிரள மிரளக் கண்டு கொண்டே அதைக் குடித்தான். மருத்துவர் முதலியவர்களைச் சுற்றிப் பார்த்தான். பேச வாயெடுத்தான். என்றாலும் பேச முடியவில்லை. மருத்துவர் அவனைப் பேசாதிருக்குமாறு சொன்னார். அவனும் கண்ணை மூடிக்கொண்டான். மருத்துவர் இனி அவனைப் பற்றிப் பயமில்லை யென்றும், காலையில் வந்து வேறு வேண்டுவன

செய்வதாகவும் கூறிச் சென்றார். ஏதோ சில மருந்து வகைகளும், கட்டுக்கு மேல் போடவும், தேவையானால் உள்ளுக்குக் கொடுக்கவும் கொடுத்தார். கமலாம்பாள் சிந்தனை யெதுவுமின்றி உள்சென்று, ஒரு நூறு ரூபாய் கொண்டு வந்து கொடுத்தார். மருத்துவர் மகிழ்ச்சியோடு, எப்படியும் ஒரு சில நாட்களில் அவனை நடக்கவைத்துப் பழையபடியாக்கும் பொறுப்பு தன்னுடையதென்று சொல்லி மறுநாட்காலை எட்டு மணிக்குள்ளாகவே வருவதாகப் புறப்பட்டார்.

விடியற்காலை ஆகிவிட்டது. வேலையாட்கள் சிலர் உறங்கினர். மணிமேகலையும் உறங்கச் சென்று விட்டாள். கமலாம்பாள் மட்டும் தனியன் பக்கத்தில் கட்டிலிலேயே இருந்தாள். அவன் நன்கு உறங்கியதாகத் தெரியவே அப்படியே கட்டிலின் பக்கத்தில் சாய்ந்தாள். அயர்ச்சியால் நன்கு உறங்கி விட்டாள்.

மறுநாள் கமலாம்பாள் கண்விழித்துப் பார்க்கையில் நன்கு விடிந்திருந்தது. தனியன் அதுவரையில் உறங்கித் தான் இருந்தான். மணிமேகலையும் மற்றொரு புறத்தில் படுத்திருந்தாள். கமலாம்பாள் விரைந்து தன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு அவனுக்கு ரொட்டி, பால், பழம் முதலியன எடுத்துவரச் சொல்லி அவன் பக்கம் சென்றாள். மேகலையும் எழுந்து தன் காலை வேலைகளைச் செய்யச் சென்றாள். சிறிது நேரத்துக்கெல்லாம் தனியன் கண்விழித்துப் பார்த்தான். எழுந்து உட்கார முயன்றான். வேலைக்காரன் உதவியுடன் எழுந்தும் உட்கார்ந்தான். பிறகு அப்படியே கடன்களை முடித்துப் பல் துலக்கிச் சிறிது ரொட்டியும் பாலும் சாப்பிட்டான். எதிரிலே இருக்கின்ற கமலாம்பாளைப் பார்த்து ஓவென்று கதறி அழ ஆரம்பித்துவிட்டான். அவன் அழுவதைக் கண்ட மேகலையும் அழத் தொடங்கினாள். அம்மையார் தனியனைத் தேற்றி அவன் ஒன்றுக்கும் அஞ்ச வேண்டியதில்லை எனவும், விரைவில் காயமாறிக் குணமடைவான் என்றும், பிறகு அவன் எங்கும் செல்ல வேண்டியதில்லை யெனவும் கூறி மகிழ்வித்தாள். அவன் ஏதோ சொல்ல நாவெடுத்தான். என்றாலும் அழுகைதான் பீறிட்டு

வந்தது. ஆகவே அவள் அவனை ஒன்றும் பேச வேண்டா மென்று சொல்லிப் படுக்க வைத்தாள். அதற்குள் மருத்துவர் வந்து எப்படி இருக்கிறது எனக் கண்டறிந்தார். கட்டினை அவிழ்த்துக் காயத்தை நன்கு ஆராய்ந்தார். உள்ளே குண்டுகள் செல்லவில்லை என்றும், ஓரமே உராய்ந்து சென்ற தென்றும் கூறித் தக்க மருந்துவைத்துக் கட்டிப் பதினைந்து நாளில் முழுதும் குணமாகிவிடும் என்றும், வளரும் உடம்புக்கு ஒரு குறைவுமில்லை யென்றும், வேளா வேளைக்கு தக்க பால், பழம், ரொட்டி, இரசச் சோறு முதலியவைற்றுள் தேவையானதைத் தருதல் நலமென்றும், தான் நாள்தோறும் இரண்டு வேளையும் வந்து போவதாகவும் சொல்லிவிட்டுச் சென்றார். அதற்குள் அம்மையார் மாம்பலத்தில் உள்ள தன் தம்பியை அழைத்து வருமாறு ஏவின ஆள் வந்து அவர் ஊரில் இல்லை என்றும், வர ஒரு வாரம் ஆகுமென்றும் சொன்னான். தனியன் மறுபடியும் படுத்துக்கொண்டான். மற்றவர்களுடைய வேலை முறைப்படி அன்றும் நடந்து கொண்டிருந்தது. திருடவந்த விடத்திலா தனக்கு இத்தனைச் சிறப்பு என்று எண்ணிக்கொண்டே கண்ணை மூடினான் தனியன். எத்தனையோ எண்ண அலைகள் அவன் உள்ளத்தில் எழும்பித் தவழ்ந்தன. தாயின் பரிவு காணாத அவனுக்கு அன்று தாயன்பு இன்னதெனத் தெரிந்தது. அந்த அம்மை யார் யாரோ? தன் வீட்டுக்குத் திருட வந்தவனை இப்படி மகனெனப் போற்றிச் சீராட்டுகிறார்களே என்று எண்ணினான். பணியாளர்களுக்கு அந்த அம்மையாரின் சீரிய நலப் பண்புகள் தெரியுமாதலால் அவள் வாய் மொழிப்படியே நடந்து வந்தனர். மேகலையும் அடிக்கடி தனியனிடம் வந்து வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருப்பாள். நாள்தோறும் மருத்துவரும் வந்து சென்று கொண்டிருந்தார். ஒரு வாரத்துக்குள் புண் எவ்வளவோ ஆறிவிட்டது. அவனைக் கோம்பு ஊன்றி நடக்கும் நிலை பெற்றான். நாள் ஏற ஏற அவன் நலமுற்று வருவதைக் கண்ட கமலாம்பாளும் மேகலையும் மகிழ்ச்சியுற்றனர்.

# VII

## கொல்லவும் கருதினர்

பிரம்பூர் நிகழ்ச்சிக்குப் பிறகு மார்த்தாண்டன் வீரப்பனைத் தன் வீட்டுக்கு அடிக்கடி வரவிடுவதில்லை. அவன் பெருங் கள்வனுதலால், அடிக்கடி தன் வீட்டுக்கு வந்தால் யாராவது ஐயப்படுவார்கள் என்று எண்ணினுன். மற்றும் தென்னஞ்சோலை மாளிகையைப் பற்றியும் அவனிடம் சொல்லிவிட்டான். அதுமுதல் ஒருவரை ஒருவர் காண வேண்டுமானுல் தென்னஞ்சோலை மாளிகைக்கே செல்ல வேண்டும். மேலும் பிரம்பூருக்கு வீரப்பன் முருகனுடன் சென்றதால் அவன் இருப்பிடம் முதலியவற்றைக் கேட்டறிந்தான். அவனுக்குச் சொல்லக்கூடாத நிலையிலிருந்தும் வேறு வழியின்றி முருகன் சோலை மாளிகையைப் பற்றிச் சொல்லி விட்டான். எனவே அதுமுதல் அவர்கள் அனைவரும் அங்கே வந்து காணும் வழக்கம் நிலைத்துவிட்டது.

தனியன் மறுபடியும் விடுபட்டு அயலவர் கையில் அகப்பட்டதைக் குறித்து முருகனை நன்கு கண்டித்தான் மார்த்தாண்டன். அவன் தன்னைக் கண்டிக்கா விட்டாலும் அந்தச் சூடு தனக்கும் உரியதுதானே என்று எண்ணிய வீரப்பனுல் வருந்தாதிருக்க முடியவில்லை. பாவம் சிறிய பையன் அவர்களிடையில் அகப்பட்டு என்ன ஆனுனே என்று ஏங்கினர் அனைவரும் அழகி முருகனை அடிக்கடி அந்தப் பையனைப் பற்றிக் கேட்டுக்கொண்டே இருந்தாள். முருகனும் நடந்தவற்றைச் சொல்லிவிட்டான். துப்பாக்கிச் சத்தம் கேட்டதும் தனியன் அலறியதை அறிவார்களே ஒழிய, அந்தக் குண்டு உண்மையில் யார்மேல் பட்டது என்று அறியவில்லை அவர்கள். நேராக வெளியே ஓடிவர வழிகண்டுகொண்டு வெளியே வந்துவிட்டார்கள். ஆகவே குண்டு யார்மேல் பட்டது. தனியன் ஏன் அலறினுன் என்பனவற்றை அவர்

களால் அறிந்துக்கொள்ள முடியவில்லை. குண்டு தனியன் மேல்தான் பட்டிருக்க வேண்டும்; ஆகவேதான் அவன் அலறியிருப்பான் என்ற எண்ணமும் அவர்களுக்குத் தோன் ருமற்:போகவில்லை. அனைத்தினுக்கு மேலாக, அவனை அந்த வீட்டுக்காரர்கள் என்னென்ன கொடுமைப் படுத்துகிருர் களோ என்று எண்ணும்போது அவர்களது கல்நெஞ்சமும் வருந்தத்தான் செய்தது. அழகி அடிக்கடி அழுது கொண் டிருந்தாள். அவன் காலில்தான் குண்டு பட்டிருக்கும் என்பதைக் கேட்டதிலிருந்து அவளுக்கு மனம் ஒரு நிலையி லில்லை. அவனைச் சென்ருவது பார்த்து வரலாமா என்று எண்ணமிட்டாள். முருகனிடமிருந்து அந்த வீட்டு முகவரி யைப் பெற்றுக் கொண்டாள். என்ருலும், அங்குச் சென் ருல் அவனை எங்கு வைத்திருக்கிருர்கள் என்று அறிந்தால் தானே காணமுடியும் என்ற எண்ணமும் உண்டாயிற்று. ஒருவேளை கள்ளன் என்ற குற்றத்திற்காகச் சிறைச்சாலையில் அடைக்கப் பட்டானே, அன்றிக் குண்டின் புண் ஆறு வதற்காக மருந்தகத்தில் சேர்க்கப்பட்டானே என்று எண்ணி ஞள். எப்படியும் முருகனை அனுப்பி அவன் எங்கு இருக் கிருன், அவன்நிலை எப்படி இருக்கிறது ஆகியவற்றை அறிந்துவரச் செய்தாள். மார்த்தாண்டனும் வீரப்பனும் கூடத் தனியன் நிலையை அறிய விரும்பினர். எனவே, முரு கன் இரண்டுநாள் கழித்து மாற்று வேடத்தே பிரம்பூர்ப் பக்கம் சென்ருன். அந்த மாளிகையின் அருகிலும் உலவி ஞன். அங்குள்ளவர்களிடம் ஏதேதோ பேசுவதுபோல் பேசிஞன். முடிவில் தனியனை அவர்கள் தங்கள் வீட்டிலேயே வைத்துக் காப்பாற்றுகிருர்கள் என்றும், மருத்துவர் வந்து அடிக்கடி பார்த்துச் செல்கிருர் என்றும், அவன் கள்வனுக அல்லாது வீட்டுமகனைப் போலவே கமலாம்பாளால் காப் பாற்றப்படுகிருன் என்றும் அறிந்து கொண்டான். தான் அறிந்தவற்றை அப்படியே அழகிக்கும், மார்த்தாண்டனுக் கும் சொன்ஞன்; அழகி அந்த அளவிலாவது நலமுறுகிருனே என்பதை அறிந்தபோதிலும் அவளால் ஆற்றியிருக்க முடியவில்லை. தான் அன்று திருவல்லிக்கேணியில் கண்டு பிடித்திராவிட்டால் இந்தக்கொடுமை யெல்லாம் அந்தப் பையனுக்கு வந்திருக்காதே என்று எண்ணும்போது அவ

ளுக்குக் கண்ணீரும் வந்துவிட்டது. அவனை எப்படியாவது காணவேண்டு மென்று துடித்தாள். பிரம்பூர் செல்ல அவளுக்கு வழியும் தெரியும். என்றாலும் அங்கு சென்றால் அவன் ஒருவேளை தானும் கள்வர் கூட்டத்து ஒருத்தி என்பதைக்காட்டிக் கொடுத்துவிட்டால் என்னுவது என்று எண்ணினாள். முடிவாக முருகன் மூலம் இரண்டு நாளுக் கொருமுறை அவன் நிலையை அறிந்துவர ஏற்பாடு செய்தாள்.

மார்த்தாண்டனும், வீரப்பனும் மேலும் சதி செய்யத் தொடங்கினர். அந்தப் பையன் நிலையை முருகன் மூலம் நன்கறிந்து கொண்டனர். தனியன் அங்கு வீட்டில் வாழ் வாரில் ஒருவனாக இருந்து வருவதைக்காண அவர்கள் உள்ளம் கரிய ஆரம்பித்தது. அவன் தற்போது எல்லாவற்றையும் அறிந்திருக்கின்ற காரணத்தால் தங்கள் திருட்டுத்தனத்தை யெல்லாம் எங்கே வெளிக் கொணர்ந்துவிடுவானோ என்று அஞ்சினர் அவர்கள். அவன் பொதுவாகத் தடியை ஊன்றிக் கொண்டு எழுந்து நடக்கிறான் என்பதையும் அறிந்துகொண் டார்கள். இன்னும் முழுதும் நலம் பெற்றால், பிறகு எங்கா வது சென்று தங்கள் மறைவிடத்தையும், இரகசியங்களையும் சொல்லிவிடுவானோ என எண்ணினர். அவனை மறுபடியும் எப்படியாவது அந்தச் சோலை மாளிகைக்கே கொண்டுவர வேண்டுமெனத் திட்டமிட்டனர். ஆனால் மறுபடியும் வேறு எண்ணமுண்டாயிற்று. அவனைக் கொண்டு வருவதாலும் பயனில்லை என்று கண்டார்கள். அவன் எப்படியும் இனிமேல் அங்குத் தங்கமாட்டான் என்று திரும்ப எண்ணினார்கள். வந்து மேலும் உண்மைகளைத் தெரிந்துகொண்டு மறுபடியும் வெளியே ஓடிவிடுவான் என உணர்ந்தார்கள். ஆகவேதான் உண்மை வெளியாகாதிருக்க வேறு வழி உண்டா என ஆராயத் தொடங்கினர். அவர்களுக்கா வழி அகப்படாது? இருவர் மனமும் பிறகு ஒரே முடிவுக்கு வந்தது. ஆம், அதுதான் தனியனுக்கே முடிவு தேடுவது.

ஒருநாள் மார்த்தாண்டனும் வீரப்பனும் தனிமையில் சோலை மாளிகையினுள் ஓர் அறையில் உட்கார்ந்து பேசிக்

கொண்டிருந்தனர். தனியனைக் கொண்டு வருவதா அன்றிக் கொன்று விடுவதா என்பதே அவர்கள் பேச்சாக இருந்தது. அவனைக் கொண்டுவந்தாலும் அங்கே தங்கமாட்டான் என்று எண்ணினார்கள் அவர்கள் அது மட்டுமின்றி, அங்கு மறு படியும் வருவானாயின்-இன்னும் உள்ள இரகசியங்களை யெல் லாம் அறிந்து வெளியிடவும் கூடும் என்று எண்ணினர். ஆகவே எப்படியாவது அவனைக் கொன்று விடுவதென்றே முடிவு செய்தார்கள் மார்த்தாண்டன் அங்கு வராவிட்டால் என்ன, அங்கேயே எப்படியாவது இருந்து போகிறான் என விட்டுவிடலாமே என்றான். என்றாலும், என்றைக்காவது ஒரு நாளைக்கு அவன் தங்கள் திருட்டையெல்லாம் வெளிப் படுத்தக் கூடும் என்று வீரப்பன் சுட்டிக் காட்டியபோது அவனை அடியோடு தொலைப்பதைத் தவிர வேறு வழியில்லை என்பதை மார்த்தாண்டன் உணர்ந்தான். அவ்வாறு தொலைப்பதற்கு அவனை எப்படி, எங்குக் கொண்டுவந்து கொலை செய்வது என்று எண்ணமிட்டார்கள். அவன் இன் னும் நன்கு குணமடையவில்லையாதலால் மாளிகையைவிட்டு வெளியே வரமாட்டான் என்பதும் அவர்களுக்குத் தெரியும். மாளிகையினுள் சென்று அவனைத் தூக்கிக்கொண்டு வருவ தென்பதோ இயலாததொன்று என்பதும் அவர்கள் அறிந் ததுதான். எனவே அவன் நிறைந்த நலமுற்று, வெளியே எங்காவது கடைத்தெருப் பக்கமோ, வேறு வகையாகவோ வரும்போது கைப்பற்றிக் கொள்ளவேண்டும் என்று முடிவு செய்தனர்.

இருவர் செய்த கொடிய வஞ்சனையைச் சுவற்றின் மறுபக்கத்தே இருந்தே அழகி நன்றாகக் கேட்டுவிட்டாள். மேலே இருந்த பலகணி அவள் கேட்பதற்கு நன்கு உதவி செய்தது. முருகனும் அப்போது ஊரில் இல்லை. மற்றப் பிள்ளைகளும் வெளியே சென்றிருந்தார்கள். ஓவென்று கூச்சலிடலாமா என்று எண்ணினாள். ஆனால் பயன் என்ன ஆகுமோ என்று வாளா இருந்துவிட்டாள். ஆனாலும் அவள் மனம் கேட்கவில்லை. 'அந்தோ, காணாத அவனைக் கண்டு பிடித்தவள் நானல்லவா? இன்று அவனைக் கொல்லச் சதி செய்கிறார்களே? இதற்கு என்ன செய்வது? எப்படியாவது

ஓடிச் சென்று அவனுக்கும் அந்த வீட்டாருக்கும் மற்றவர் களுக்கும் இதைத் தெரிவித்துவிட வேண்டும்' என்று தனக் குள்ளேயே சொல்லிக் கொண்டாள். அவள் பலப்பல நினைத்தவண்ணம் தென்னஞ் சோலைகளுக்குள் புகுந்தாள். மார்த்தாண்டனும், வீரப்பனும் தங்கள் பேச்சை முடித்த தும் வெளியே வந்தார்கள். யாரையும் காணுததால் அழகி யைக் கூப்பிட்டார்கள். அவள் தூரத்திலிருந்து ஓடி வந் தாள். அவள் முகத்தில் கலவரக் குறிப்புத் தென்பட்டது. வீரப்பன் ஒருவேளை தாங்கள் பேசிக்கொண்டிருந்ததை அவள் கேட்டிருப்பாளோ என எண்ணிஞன். அவள் எங்கோ தோட்டத்தில் சுற்றிக் கொண்டிருந்ததால் அவ் வாறு இருக்காது என்றும் நினைத்தான். மார்த்தாண்டனே, முருகன் இல்லாத காரணத்திஞல் அழகியின் முகம் வாடி யிருக்கிறது என்று எண்ணிஞன். முருகன் வெளியூர் போயிருப்பதாகவும், வர இரண்டு நாள் ஆகுமென்றும் வீட்டைச் சாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளவேண்டு மென்றும் சொல்லிவிட்டு மார்த்தாண்டன் வீரப்பனுடன் சென்றுவிட்டான்.

அவர்கள் சென்ற உடனே, அழகிக்கு நிலை கொள்ள வில்லை எப்படியாவது தனியன் உயிரை மீட்க வேண்டும். இல்லாவிட்டால் அந்தக் கொலைக்குத் தானே காரணமாக அமையவேண்டியிருக்கும் என்று எண்ணிஞள். உடனே பிரம்பூர் ஓடிச் சென்று அவர்கள் மாளிகையைக் கண்டு இது பற்றிச் சொல்லி வரலாமா என நினைத்தாள். முருகனிடம் அந்த மாளிகை பற்றிய முழுவிவரத்தையும் நன்கு அறிந் திருந்தாள். அத்துடன் வீட்டில் யாரும் இல்லாதது அவ ளுக்கு நன்மையாயிற்று. உடனே ஏதோ சாப்பிட்டுவிட்டுப் பிரம்பூருக்குப் புறப்பட்டாள். ஓடிஞள். எப்படியோ அந்த மாளிகையைக் கண்டு பிடித்தாள். உள்ளே நுழைந்தாள். மாளிகையின் முன் வாசலின் பக்கத்தில் உள்ள அறையில் தனியன் படுத்துக்கொண்டிருந்தான். பக்கத்தில் ஒரு வேலைக்காரன் ஏதோ செய்துகொண்டிருந்தான். தனியன் கண்ணை மூடிக்கொண்டிருந்தான். அவன் அருகில் சென் ருள் அழகி. வேலைக்காரன் அவளை யார் என்று விசாரித்

தான். அதற்குள் உள்ளிருந்த கமலாம்பாள் வெளியே வந்தார்கள். அவர்கள் அழகியைப்பற்றி விசாரித்தார்கள். அவள் தன்னைப் பற்றிக் கூறுவதற்குள் தனியன் கண்ணைத் திறந்தான். அவனைக் கண்டதும் ஓவென்று அலறிவிட்டாள் அழகி. கண்ணீர் பெருக்கெடுத்து ஓடிவந்தது. அதைக் கண்ட தனியனும் அழுதான். கமலாம்பாள் ஒன்றும் தெரியாது விழித்துக்கொண்டு அழகியை யார் என்று மறுபடியும் மறுபடியும் கேட்டாள். இருவரும் உட்கார்ந்தார்கள். அழகி தன் வரலாற்றைச் சொன்னாள். தான் ஒரு அனாதையானதையும், கள்வர் கைப்பட்டு கற்பிழந்து முருகனுடன் கூடி வாழ்வதையும், அந்தக் கள்வர்கள் என்னென்ன வகையில் கொடுமை இழைக்கிறார்கள் என்பதையும். அப்போது முடிவாகத் தனியன் உயிருக்கே அவர்கள் உலை வைக்க எண்ணியிருப்பதையும் கூறினாள். தன்னால்தான் அவன் மறுமுறை பிடிபட நேர்ந்தது என்பதைச் சொல்லும்போது அவள் அழுகை அதிகமாயிற்று. மறுபடியும் அடக்கிக்கொண்டு அன்று அங்குக் கள்ளர் செய்த சதியினை அழுகையோடு கலந்தே சொல்லி முடித்தாள். தனியன் நலமுற்றதும் எக்காரணத்தாலும் அவனை வெளியே அனுப்பக் கூடாது என்று மன்றாடினாள். ஒரு திருடர் கூட்டத்தோடு சேர்ந்திருக்கும் ஒரு பெண் இவ்வளவு பரிவாகப் பேசக் காரணம் என்னவாக இருக்கும் என்ற எண்ணம் கமலாம்பாளுக்கு உண்டாயிற்று. ஒருவேளை இதுவும் ஒரு ஏமாற்றமாக இருக்குமோ என எண்ணினாள். தனியன் அவளை அன்போடு நோக்கியதையும், இரண்டொரு முறை அக்கா என்று அழைத்ததையும் கண்டு ஒருவேளை இருவரும் உடன் பிறந்தவர்களோ என்று ஐயமுற்றாள். ஒருவேளை தனியன் முழுக்க நலம்பெற்றால் மறுபடியும் அந்தத் திருட்டுத் தொழிலுக்குத்தான் சென்றுவிடுவானோ என எண்ணினாள். அவனை மறுபடி அழைத்துச் செல்வதற்காகவேதான் அழகி இப்படி வந்து பாசாங்கு செய்கிறாளோ என்றும் கருதிவிட்டாள். எனவே அழகியை இரண்டு மூன்று தடவை அவள் சொல்வது உண்மைதானா என்று கேட்டுவிட்டாள். அழகிக்கு அந்த அம்மையார் தன் தன்மேல் ஐயமுறுகிறார்கள் என்பது நன்கு விளங்கிவிட்டது. அவள் உடனே எழுந்து அந்த

அம்மையாரின் காலைப் பிடித்துக்கொண்டு, 'அம்மா, நான் கள்வர் கூட்டத்தில் இருந்தாலும் தூய்மை உடையவள். ஏதோ அனாதையாக இருந்தேனோடு, அழகாகவும் இருந்ததால் அவர்களின் ஆசை வார்த்தைகளில் மயங்கி, வாழ்வுக்கு வழி ஏற்படாதா என்று எண்ணி அவர்களோடு சேர்ந்தேன். ஆனால் சேரும்போது அவர்கள் செய்யும் தொழில் இது என்று தெரிந்திருந்தால் நான் சேர்ந்தே இருக்கமாட்டேன். நாள் ஏற ஏறத்தான் அவர்கள் கொடுந்தொழில் தெரிந்தது. என்னை ஏற்றுக்கொண்ட என் கணவர் சற்று நல்லவர்தான். அவர் இதுபோன்ற பெரும் கொள்ளைக்கும் கொலைக்கும் சென்றது கிடையாது. பாவி வீரப்பன் என்ற ஒருவன் வந்து சேர்ந்ததிலிருந்துதான் எங்களுக்கு இத்தகைய தொல்லை யெல்லாம் வந்தது. இந்தத் துணிகரக் கொள்ளைக் கும் கொலைக்கும்கூட அவனே காரணம். அம்மா! இன்று இவனைக் கொல்லத் தூண்டியவனும் அவனே. முருகனின் தந்தையார் மார்த்தாண்டனும் அவன் இசைவுக்கு இணங்கி னார். இவனை - தனியனை - இரண்டாம் முறையாக நான் அழைத்து வரவில்லையானால் இந்தக் கொடுமைகளெல்லாம் ஏற்பட்டிருக்காதே. எனவே இவன் தப்பித் தவறிக் கொல் லப்பட்டால் நான்தானே முதல் காரணமாவேன். அது குறித்தே மிக வருந்துகிறேன். அதனாலேயே அவன் உயி ரைக் காப்பதே என் முதற் கடமை என்று ஓடிவந்தேன். இதில் நான் என் உயிரை இழந்தாலும் கவலை கொள்ளப் போவதில்லை. அம்மா! எப்படியாவது தனியன் உயிரைக் காப்பாற்றுங்கள். எனக்கு நேரமாகிறது. நான் விரைந்து செல்லவேண்டும். அவ்வப்போது அங்கு நடப்பதை யெல் லாம் கண்டுவந்து உங்களுக்குத் தெரிவிக்கிறேன். மற்றும் அவர்கள் இரகசியங்களை யெல்லாம் அடுத்தமுறை உங்களுக் குச் சொல்லுகிறேன். அவர்களையெல்லாம் தக்கவரைக் கொண்டு சிறையிட வழி காணுங்கள்; என்று தன் உள்ளத் தைத் திறந்து காட்டினாள். அனைத்தையும் கேட்ட கமலாம் பாள் உண்மையிலேயே அவள்மேல் இரக்கங்கொண்டாள். அவளுக்குச் சிற்றுண்டி அளித்தாள். சிற்றுண்டி கொண்ட அழகி ஒவ்வொரு திங்கட்கிழமையும் இரவு பத்து மணிக்கு மேல் அவர்களை வண்ணாரப்பேட்டையில் ரயில்பாதை கடக்

கும் 'கேட்'டின் பக்கத்தில் வந்து சந்திக்கும்படியும், அவ்வப் போது நடப்பதைத் தான் கண்டுவந்து உரைப்பதாகவும், வேறு ஏதாவது அவசரமாக இருந்தால் தானே நேரில் ஓடி வருவதாகவும் சொல்லிவிட்டுச் சென்றாள். செல்லு முன் பாகத் தனியனுக்குத் திருட்டி கழித்து, அவன் வாழ்வானாக என்று வாழ்த்தியே சென்றாள்.

தனியனைப் பற்றிய தகவல்களையெல்லாம் அழகியின் மூலம் அறிந்த கமலாம்பாள் சற்று ஆறுதலடைந்தாள். அவன் கள்வர் கூட்டத்தில் ஒருவனாக இல்லாமல், பெருங் கொள்ளைக்காரனாக இல்லாமல், நல்ல பையன் எனக் கேள் விப்பட்டால் மகிழ்ச்சி உண்டாகத்தானே செய்யும்! அவள் மனதில் முதலில் உண்டான எண்ணமும் அதுதானே. எப் படியோ அவள் உள்ளத்தில் அவன் நல்லவன் என்று பட்டது உறுதியாயிற்று என்பதை எண்ண உளமகிழ்ந்தாள் என்றாலும், அவனுக்குக் காத்திருக்கின்ற அந்தப் பேரிடியை பற்றி எண்ணும்போது அவளால் கலங்காதிருக்க முடிய வில்லை. எப்படியாவது அந்தக் கொடுமையிலிருந்து அவனை மீட்டு, நல்லபடியே அவனை முன்னுக்குக் கொண்டுவரவேண் டும் என விழைந்தாள்.

என்ன செய்வது என்று எண்ணி ஒரு முடிவிற்கு வந் தாள். தன் உடன் பிறந்தவருக்குத் தகவல் சொல்லி அனுப்பி இருந்தாள். முன்னமே சொல்லியனுப்பியபோது அவர் ஊரிலில்லை என்று அறிந்தவளாதலால். இப்போது மறுபடி யும் சொல்லி அனுப்பினாள் மறுநாள் மாலை வருவதாகவும் வெளியூரிலிருந்து அப்போதுதான் திரும்பி வந்ததாகவும் தகவல் வந்தது. தனியன் பக்கத்திலேயே இருந்துகொண்டு மேல் நடக்க வேண்டுவதைப் பற்றிச் சிந்தை செய்யலானாள் எப்படியாவது தனியனைக் காப்பாற்றி நல்ல வழியில் அவனை வாழவைக்கவேண்டும் என்பதே அவளது அவா.

மறுநாள் மாலை ஆறு மணிக்கெல்லாம் ஒருவருடைய கார் வந்து நின்றது. உள்ளே கமலாம்பாளின் சகோதரர் வந்தார். வெளிக் கூடத்திலேயே உட்கார்ந்து பலவற்றைப்

பற்றி இருவரும் பேசிக்கொண்டிருந்தனர். செல்வி மணி மேகலைக்குத் தான் கொண்டுவந்த விளையாட்டுப் பொருள் களையும், தின்பண்டங்களையும் கொடுத்தார் வந்தவர். அவ ளும் அதைப் பெற்றுக்கொண்டு விளையாடச் சென்றுவிட் டாள். பாவம், அவளுக்குத் தெரியாது தனியனுக்கு வந் திருக்கும் தீங்கு; தெரிந்தால் உட்கார்ந்து அழுதுவிடுவாள். அவளுக்கு ஏனோ அவனிடம் அவ்வளவு பற்று.

உடன் பிறந்தவர்கள் இருவரும் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தனர். பக்கத்து அறையில் படுத்திருந்த தனிய னுக்கு அக்குரல் ஏதோ அறிமுகமானதுபோல் காணப் பட்டது. என்றாலும் யார் என்று நன்கு அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருவேளை செல்வநாதராக இருந்து விட்டால் என்ன செய்வது என்று சிந்தைநொந்தான். அவர் வந்து தன்னைப் பார்த்துவிட்டால், என்னென்ன சொல்வாரோ என்று நினைத்தான். ஒருவேளை இந்த வீட்டிலிருந்து விரட்டி விட்டாலும் விடுவார் என்று எண்ணினான். எனினும் அவரது அன்பின் அருங்குணம் அவன்முன் தோன்றியது. எல்லாவற்றையும் பொறுத்துப் பார்க்கலாம் என்று அமைதி யாக இருந்தான். சிறிது நேரம் கழித்து அவர்கள் பேச்சு கேட்கவில்லை. இருவரும் எழுந்து உள்ளே வருவதை உணர்ந்தான். அப்படியே கட்டிலில் சாய்ந்தபடி கண்ணை மூடி ஏதேதோ எண்ணிக் கொண்டிருந்தான்.

உள்ளே வந்த கமலாம்பாள் தன் தம்பிக்குத் தனியனைக் காட்டினாள். தம்பியாக வந்தவர் வேறு யாருமில்லை. தனியன் எண்ணியது போன்று செல்வநாதரே தான். அவர் உள்ளே வந்தார். சிறிதுநேரம் அப்படியே அசைவற்று நின்றுவிட் டார். அவர் முகத்தில் மாற்றம் உண்டாயிற்று. அதை யெல்லாம் கண்ட கமலாம்பாள் ஒன்றும் தெரியாது திகைத் தாள். இவனைப்பற்றி ஒருவேளை தன் தம்பிக்கு முன்னமே தெரியுமோ என்று எண்ணினாள். 'ஏன், என்ன அப்படிப் பார்க்கிறாய்?' என்றாள். செல்வநாதர் 'ஒன்றுமில்லை. இந்தப் பையனை எங்கோ பார்த்த நினைவிருக்கிறது' என்று கூறினார். உடனே தனியன் விழித்தெழுந்தவன் போல் காட்டி, அவர்

முகத்தைக் கண்டு திகைத்து முகத்தை மூடிக்கொண்டு அழத் தொடங்கிவிட்டான். இருவரும் அவனைச் சமாதானப்படுத்தினர். பிறகு அவனை ஒன்றும் கேட்காது அப்படியே படுக்க வைத்துவிட்டு, இருவரும் வெளியே வந்தனர். தனிமையில் செல்வநாதர் தம் தமக்கைக்கு அவன் தன்னிடம் அகப்பட்டதையும், தன்னோடு வாழ்ந்ததையும், பிறகு ஐயத்தின்பேரில் நூறு ரூபாய் தாளினைக் கொடுக்க, பிறகு அவன் திரும்பாததையும் எடுத்துக் கூறினர். தனியன் ஒன்றும் சொல்லாவிட்டாலும், அழகியின் மூலம் அவன் இரண்டாவது முறை எப்படிக் கள்வர் கூட்டத்தில் கலந்தான் என்பதைக் கமலாம்பாள் அறிந்திருந்த காரணத்தால், அழகி சொல்லியவற்றையெல்லாம் சொல்லி, அவன்மேல் யாதொரு பிழையும் இல்லை என்பதை விளக்கினள். முழுதும் ஐயங் கொள்ளாத செல்வநாதர் இதைக் கேட்டதும் அமைதியுற்றார். தனியன் முகத்தில் அத்திருட்டுக்கேற்ற குறியே காணப்படாததை அவர் முதலில் நம்பினர். அன்றும் நம்பினர். என்றும் அவனையே நம்பும் நிலைக்குச் சென்றுகொண்டிருந்தார். எத்தனையோ அனாதைப் பிள்ளைகளை விடுதியில் சேர்க்கும் அவருக்கு, அவனிடத்தில் மட்டும் மட்டற்ற பற்றுண்டாவதற்குக் காரணம் அவரால் அறிய முடியவில்லை.

தன் தமக்கையாரிடம் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தபின், மறுநாள் வருவதாகச் சொல்லிவிட்டுப் புறப்பட்டார். புறப்படுமுன் தன் தமக்கையாரிடமும் இரகசியமாக, எப்படியாவது தனியனது பிறப்பு, இடம், வந்த வகை முதலியவற்றைப்பற்றி விசாரித்து வைக்குமாறு சொல்லிவிட்டுப் புறப்பட்டார். புறப்படுமுன் தனியனையும் கண்டு, எல்லாம் தனக்குத் தெரியுமென்றும், அவன் ஒன்றுக்கும் வருந்த வேண்டாமென்றும் எச்சரித்து விட்டுச் சென்றார். கமலாம்பாள் அவரிடம் எப்படியும் அடுத்த திங்கள் இரவு வண்ணாரபேட்டை ரயில் பாதையின் பக்கத்துக்குக் கட்டாயம் செல்ல வேண்டுமென வற்புறுத்தினள். அவர் செல்லும் வழியெல்லாம் தனியனைப் பற்றிய சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தார். அவருக்கு ஒருபுறம் அச்சமும் ஒருபுறம் அன்பும் உண்டாயிற்று.

செல்வநாதர் சென்றபிறகு கமலாம்பாள் தனியனிடம் வந்து உட்கார்ந்தாள். தனியன் மறுபடியும் அழத் தொடங்கினான். அவரிடம் தான் நடந்துகொண்ட விதத்தைப்பற்றி எடுத்து விளக்கி உரைத்தான். தான் அவற்றையெல்லாம் அறிந்ததாகவும், செல்வநாதரும் அறிவதாகவும், அவன்மேல் தவறில்லை என்பதை அவர் உணர்ந்து விட்டதாகவும். ஆகவே அதுபற்றி வருந்தத் தேவையில்லை என்றும் கமலாம்பாள் உரைக்கவே அவன் சற்று ஆறுதலடைந்தான். அவன் இருந்த நிலையில் அவனை அப்போது ஒன்றும் கேட்க வேண்டாமென்று கருதிய அம்மையார் அவனை உறங்குமாறு விட்டுச் சென்றார். அவனுக்கும் என்னென்ன வகையில் மக்கள் தனக்கு அறிமுகமாகின்றார்கள் என்பதை எண்ண வியப்பாக இருந்தது. மற்றொருபுறம் தன் துன்பச் சூழல் இன்னும் தொடர இருக்கிறதோ என்று எண்ணும்போது கவன்றான். திருடர்கள் சதிச்செயல் நல்லவேளையாக அவனுக்குத் தெரியாது. அப்படியே உறங்கிவிட்டான். அன்றைப்பொழுது அகன்றது.

# VIII

## விடி வெள்ளி

**செ**ல்வநாதர் அன்று தம் வீட்டிற்குச் சென்று, அமைதியாக அந்த நாளைச் செலவிட்டார். இரவு நெடுநேரம் வரையில் சிந்தையில் ஆழ்ந்தார். தான் அப்படி அந்தச் சிறு வனிடம் அனுதாபம் காட்ட என்ன இருக்கிறது என்று எண்ணினார். அவர் நெஞ்சம் சற்று வருந்தியது. அப் படியே இல்லற நெறியினின்று மாறி, என்றும் தான் தனிமையில் வாழ்ந்து வருவதைப்பற்றி நினைத்தார். தனக் குப் பின் வழி வழியாக வரும் குடிப்பிறப்பு இல்லையே என நைந்தார். பதினைந்து ஆண்டுகளுக்குமுன் தாம்கொண்ட காதற் செல்வியை மனைவியாக்கிக்கொள்ளா மடமையை நினைத்துப் பார்த்தார். அவளை அப்போதாவது சென்று தேடலாமா என்று பார்த்தால் அதுவும் கூடவில்லை. அவள் இருக்குமிடமே தெரியவில்லை. அவள் யாரையாவது மணந்துகொண்டாளா, இருக்கிறாளா அல்லது இறந்து விட் டாளா என்பனபோன்ற வினாக்கள் பல ஆண்டுகளாக அவர் உள்ளத்தெழுந்திருந்தன. தான் அறுதைவிடுதி அமைப்ப தற்குக் காரணமான அவள் நினைவை எண்ணத் தொடங் கினார். பழமையும் புதுமையும் மாறிமாறி அவர் மனக்கண் முன் வந்து நின்றன. உறக்கம் கொள்ளவில்லை. மேல் தொடர்ந்து என்ன செய்யவேண்டும் என்பது பற்றிச் சிந்தித் தார். தனது அமைதியான வாழ்வில் தனியன் வந்து ஏன் குறுக்கிட வேண்டும் என எண்ணினார். இனி அவனுக்காக கள்வர்களிடம் சண்டையிட வேண்டும் என்று எண்ணும் போது, ஏன் அதுபற்றி நாம் கவலை கொள்ளவேண்டும் என் பதைக் கருதிப் பார்த்தார். மற்றொரு புறம் 'ஐயோ பாவம் யாருமற்ற அவ்விளைஞன் காப்பாற்றப்படத்தான் வேண்டும்,' என்ற கருத்து எழுந்தது. மேலும் நாட்டில் இதுபோன்ற கள்ளர் கூட்டங்களைக் கருவறுக்க வேண்டும் என்ற கொள்கை உடையவர் அவர். பிறரை மடக்கிக் கொலை

செய்து, பொருள் பெருக்கிவாழும் மக்களினம் நாட்டில் உள்ளவரையில் அந்நாடு எப்படி நாகரிக நாடாக விளங்கும் என்பது அவர் எண்ணம். நாகரிகம் என்பது வெறும் மாட மாளிகைகளிலும், மின்சார விளக்கொளியிலும், வேடிக்கை விநோதங்களிலும், வானில் பறப்பதிலும், கார்வழிப் பவனி யிலும், வேளைக்கொரு உடை உடுப்பதிலும், மணமற்ற மலர் கள் சூடுவதிலும், இயற்கை அழகைச் செயற்கைச் சேற்றால் மறைப்பதிலும், இவைபோன்ற பிறவற்றிலும் இருப்பது என்ற எண்ணம் அவருக்குக் கிடையாது. நாகரிகம் வாழ் வின் அடிப்படையில் அமைவது என்பதே அவர் எண்ணம். அதாவது நல் ஒழுக்கமே நாகரிகத்தின் திறவுகோல் என எண்ணி அந்த முறையில் ஒழுக்க நெறியைத் தாம் வாழ்விடை ஓம்பிவருபவர் அவர். ஊராருக்கு உபதேசம் செய்துவிட்டு, தாம்மட்டும் மனம்போன போக்கில் திரியும் மேடைப் பேச் சாளி அல்லர் அவர். 'நான் சொல்வதுபோல் செய், செய் வதுபோல் செய்யாதே' என்று மக்களுக்கு உபதேசம் செய் யும் தாழ்ந்த மனப்பான்மை அவரிடம் இல்லை. பிறர் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று விரும்புகின்றாரோ, அதே நெறியிலே அவரது தனிப்பட்ட வாழ்வும் அமைந்து செல் லும். 'நாடெங்கும் வாழக் கேடொன்றுமில்லை' என்ற தமிழ் மொழியை வாழ்விடைக் கொண்டுவரவேண்டு மென்பதே அவரது சலியா முயற்சி. செல்வரும் வறியரும் கலந்து நின்று தமக்குள் இருக்கும் வேறுபாட்டை நீக்கி, அவனவன் பாட்டுக் கேற்ற பயனை அளித்து கூட்டு வாழ்விலே நாட்டைக் காண வேண்டுமென்பதே அவருடைய ஆசை. பிறர் குற்றம் பொறுத்து, தன் குற்றத்துக்கு நாணி, மற்றவர்களுக்கு மறந்தும் தீங்கிழைக்காத மாபெரும் நெறியே அவரது வாழ் வுப் பாதை. அந்தப் பாதையில் அமைதியோடு செல்லும் அவரது வாழ்வில் இந்தக் கள்வர் கொடுமையை நீக்கவேண்டி யது பெருமுள்ளாகி விட்டது. தன்காலில் தைக்காவிட்டா லும் மற்றவர்களை வருத்தும் அதன் கொடுமையைக் கண்டு கொண்டு அவரால் வாளாதே இருக்க முடியவில்லை. 'எனக்கு வந்தால்தானே; மற்றவர்கள் எக்கேடு கெட்டால் எனக் கென்ன' என்று எண்ணி வாழும் பெரிய மனிதக் கூட்டத்தில் அவர் என்றும் சேர்ந்ததில்லை. யாராயினும் அவர்களுக்கு

வரும் துன்பமும் வருத்தத்தைத்தானே தரும், அதுவும் நீக்கப்படத்தானே வேண்டும்' என்று எண்ணி அதற்கு வேண்டிய வழிகாணும் நெறிநின்ற நல்லவர் அவர். ஆகவே கள்வர் கூட்டம் யாருக்குத் தவறிழைத்தாலும் அதைக் கண்டுபிடித்து தக்கவாறு தண்டிப்பது தன் கடமையென உணர்ந்தார் அவர். தனியனது உயிருக்கே உலைவைக்கும் அக் கொடியவர்கள் என்னென்ன செய்வார்களோ என்று ண்ணும்போது நெஞ்சம் நடுங்கிற்று. அழகியின் மூலம் அதுவரை அறிந்த தகவல்கள் அவர்களைப் பிடிக்கப் போதி யனவாக இருந்தன. என்றாலும், அடுத்த திங்கட்கிழமை எப்படியும் அந்தப் பெண்ணைப் பார்க்கும்போது முழுத் தகவல்களையும் அறிந்து கொள்ளவேண்டும் என்று முனைந் தார் அவர். நாட்கள் ஒவ்வொன்றாகக் கழிந்துகொண்டே சென்றன.

பிரம்பூரில் தனியன் சிறிது சிறிதாக நலம் பெற்றுக் கொண்டே வந்தான். அப்போது முழு நலமும் பெறாவிட் டாலும் மற்றவர் உதவியின்றியும், கழி முதலியன தேவை யின்றியும் தானே நடக்கத் தலைப்பட்டான். எப்போதும் வெளியிலே சுற்றித் திரிந்து, வேளைக்கு வேளை வயிறார உண்டறியாத அவனுக்கு இங்குப் பெறும் அந்த நல் உணவும் உபசரிப்பும் மிக அதிகமாகக் காணப்பட்டன. மனைத் தலைவி யாகிய கமலாம்பாளும், இளஞ் செல்வி மணிமேகலையும், அவர்வழிப் பணியாற்றும் பிற பணியாளர்களும் தன்னிடம் நடந்துகொள்ளும் முறை, தன்னை ஒரு செல்வனாக ஆக்கிவிட் டதை எண்ணினான். ஆனால் அந்தச் செல்வ வாழ்க்கை ஒரு வேளை மறுபடியும் துன்பத்தில் கொண்டு சேர்க்குமோ என்று எண்ணும்போது அவனையுமறியாமல் அஞ்ச வேண்டி யவனானான் அவன். அவன் எண்ணத்திற்கு ஏற்றாற்போல, அன்றொரு நாள் அழகி வந்து சென்றதும் ஐயத்தைஉண்டாக் கியது. பாவிப் பெண், அவளாலல்லவா அவன் இரண்டாம் முறை கள்வர் கையில் சிக்க நேர்ந்தது. மறுபடியும் ஒரு வேளை தன்னைக்கொண்டு செல்வதற்காகத்தான் அங்கே தேடி வந்தாளோ என எண்ணினான் அவன். அவள் வந்த வரலாறும், அவனது உயிருக்குக் கள்ளர் இறுதித்தேட்

நினைக்கும் கருத்தும், அதற்காகக் கமலாம்பாளும், செல்வநாதரும் மேற்கொள்ள இருக்கும் நடவடிக்கைகளும் ஒன்றும் அவனுக்குத் தெரியா. தெரியாதிருக்க வேண்டுமென்பதே மனைத் தலைவியின் நோக்கம். மற்றும் அவனை எங்கும் வெளியில் அனுப்பவும் அவர்கள் மனம் இடந்தரவில்லை. காலும் நன்கு ஆறவில்லை. அப்படி ஆறிவிட்டாலும் அவனை வெளியே அனுப்பினால் கள்வர்களால் இன்னல் வரும் என எண்ணினாள் கமலாம்பாள். வீட்டின் சோலையிலும் கூட, கோடிகளில் செல்லவிடுவதில்லை. மாளிகைக்கு அண்மையிலே அவன் எப்போதும் இருப்பான். அவனுடன் மணிமேகலை, தான் பள்ளிக்கூடம் போகும் வேளை தவிர மற்ற வேளைகளில் இருப்பாள். அவனும் தான் முன் அனாதை விடுதியில் விட்ட படிப்பைத் தொடர்ந்து படிக்கத் தொடங்கினான். அவன் படிப்பு வளர வழி செய்துகொடுத்தாள் கமலாம்பாள். மணிமேகலைக்கு அவனிடம் ஒரு தனிப்பட்ட அன்பு உண்டாயிற்று; அவனுக்கு வேண்டிய உதவிகளை யெல்லாம் செய்து கொண்டு அவன் பக்கத்திலே இருப்பாள். மற்றப் பணியாளர்களோ அவர்கள் இட்ட வேலையைச் செய்யக் காத்திருந்தார்கள். இந்த நிலையில் அனாதையாகி—பின் கள்வனாகித் திருடவந்த தனியன் அன்று அந்த மாளிகைக்கே தலைவனைப் போல மதிக்கப்பட்டான். துன்பச் சுழலை நீந்திவிட்டான் தனியன்.

தனியன் தன் துன்ப நாட்களை யெல்லாம் மறந்து அன்றைய இன்ப நெறியில் தன்னையும் மறந்திருந்த நாட்களில் ஒரு நாள் கமலாம்பாள் அவனை மிக அன்போடு உபசரித்தாள். அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டே அவனுக்கு வேண்டிய பழம் முதலியன திருத்திக் கொடுத்துக் கொண்டிருந்தாள். மெதுவாக அவனைப் பற்றிக் கேட்க ஆரம்பித்தாள். 'அப்பா, நீ மிகவும் நல்லவனாக இருக்கிறாய். உன்னிடம் நீ வந்த நாள் முதல் கேட்கலாம் என்று எண்ணியதை இன்று கேட்கப் போகிறேன். உன்னைப் பார்த்தாலும் ஏதோ ஒரு உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவன் போல் தெரிகிறது. நீ எப்படி இந்தக் கள்வர் கூட்டத்தில் ஒருவனானாய்? உனக்கு உற்றார் உறவினர் ஒருவரும் இல்லையா? உனக்கு அப்பா

அம்மா ஒருவரும் இல்லையா? இருந்தால் அவர்கள் எங்கே இருக்கிறார்கள், சொல். நாங்கள் உன்னை அவர்க ளோடு சேர்க்கின்றோம். இல்லை, அவர்கள் ஒரு வேளை ஏழையாக இருந்தால் இங்கேயே அழைத்து வந்து வைத்துக் கொள்ளலாம். இதோ எனக்கு இருக்கும் இந்தச் செல்வ மெல்லாம் அனுபவிக்க மணிமேகலை ஒருத்திதான் இருக்கி றாள். நாங்கள் இருவருமே இருக்கும் இந்தப் பெருமாளி கையில் இன்னும் சிலர் வந்து தங்குவதால் ஒன்றும் கெட்டு விடாது. ஆகவே நீ உன் பெற்றோர் இருக்கும் இடத்தைக் கூறி, பிற தகவலும் சொன்னால் நான் அவர்களை இங்கே கொண்டுவந்து சேர்க்க ஏற்பாடு செய்கிறேன். நீயும் உன் துன்பத்தை எல்லாம் மறந்து இன்பமாக இங்கேயே இருக்க லாம்' என்றாள்.

இந்தக் கேள்விகளை யெல்லாம் கேட்ட தனியனின் உள்ளம் துன்பத்தால் நிறைந்தது. கண்களில் நீர் பெருக் கெடுத்தது; அழவும் ஆரம்பித்துவிட்டான். அது கண்ட கமலாம்பாள் ஏன் கேட்டோம் என்று எண்ணிவிட்டாள். 'அப்பா, நீ ஏன் அதற்காக அழவேண்டும்? அப்படிச் சொல்ல கூடாத கொடுமை உடையதாயிருந்தால் சொல்ல வேண்டாம். ஏதோ தெரிந்தால் உதவி செய்யலாமே என் பதற்காகத்தான் கேட்டேன். உன் விருப்பம்' என்றாள். தனியன் கண்களைத் துடைத்துக் கொண்டான். பேச ஆரம்பித்தான்: 'அம்மா, எனக்கு உங்களைக் காட்டிலும் வேறு உறவினர் யார் இருக்கிறார்கள்? அப்பா, அம்மா, எல் லாம் தாங்கள்தான். ஆகவே உங்களுக்குச் சொல்லாமல் நான் ஒளித்து வைக்க வேண்டியது ஒன்றும் என்னிடத்தில் இல்லை. அம்மா, நான் ஒரு அனாதை' என்று சொல்லும் போது அவன் நெஞ்சம் தழதழத்தது. கண்களில் நீர் கசிந் தது. கமலாம்பாள் கண்ணைத் துடைத்தாள். மேலும் சொன்னான்: 'அம்மா, எனக்குத் தாய் தந்தையர் யார் என்று தெரியாது. என் அன்னையார் என்னைத் திருவண்ணா மலைப் பிரசவ விடுதியில் பெற்றுவிட்டு இறந்துவிட்டாளாம். அவளுடன் யாரும் விடுதிக்கு வரவில்லையாம். அவளையும் ஒரு அனாதைப் பிணம்போல்தான் அடக்கம் செய்தார்களாம்.

அவ்வளவுதான் நான் தாயைப் பற்றி அறிந்தவை. தந்தையோ யார் என அறியேன். அம்மா இருந்தாலாவது அவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கலாம். அதுவுமில்லை. எனது தந்தையார் இருக்கிறாரா இல்லையா என்பதும் தெரியாது. அனாதை பெற்ற ஒரு அனாதையானேன் நான். ஏதோ கிறீத்துவ சமயத்தைப் பரப்ப வந்த அந்த விடுதித் தலைவர்கள் அன்பால் வளர்த்து மாணவர் விடுதியில் சேர்த்துப் படிக்க வைத்தார்கள். அதுவரையில் அவர்களே வளர்த்து வந்தார்கள். இந்தத் தகவல்களையெல்லாம் விடுதித் தலைவர் ஒரு நாள் என்னிடம் சொன்னார்' என்று கூறினான். மேலும் அவன் மாணவர் விடுதியில் பட்ட அல்லலையும், பிறகு காஞ்சியில் பொன்னப்பர் மனையில் உழன்றதையும், பின் சென்னை வழியில் கண்ட காட்சியினையும், சேர்ந்தாரை வேண்டாமென ஒதுக்காது, வருக என்று வரவேற்று, எப்படியும் வாழவைக்கும் சென்னை நகரைச் சேர்ந்து திருடர் கைப்பட்டதையும் பிறகு செல்வநாதரைக் கண்டதையும், மறுபடியும் கள்வர் கைப்பட்டு அவர் தம் மனைக்கு வந்து வாழ்வு பெற்றதையும் விளக்க உரைத்தான்.

ஒருவாறு அவன் வரலாற்றைக் கேட்டறிந்த கமலாம்பாள், சிந்தித்து, அவற்றை எல்லாம் செல்வநாதரிடம் சொல்லி ஏதேனும் வழி உண்டா என ஆராய வேண்டும் என்று முடிவு செய்தாள். எப்படியும் மறுநாள் திங்கட்கிழமை வண்ணாரப்பேட்டைப் பக்கம் போகச் செல்வநாதர் வரத்தானே போகிறார், அப்போது பார்த்துக்கொள்ளலாம் என்று இருந்து விட்டார்.

ஒற்றியூரில் திருடர்கள் ஒரே முடிவாக இன்னும் சில நாட்களில் தனியனைக் கொலைசெய்து விடவேண்டுமென்றே தீர்மானித்து விட்டார்கள். அதை இரசியமாக அறிந்து அழகி எப்படியும் திங்கட்கிழமை இரவு எல்லாவற்றையும் சொல்லி அவனை மீட்க வழி செய்ய வேண்டும் என்று உறுதி கொண்டாள். தனியன் நோய் நீங்கப்பெற்று மெதுவாக வெளியில் வந்து உலவுவதையும், மாளிகை மதிற்சுவரைத் தாண்டி, வெளியில் வரும்போது எப்படியும் கொண்டுவரலாம்

என்றும், அவ்வாறு கொண்டுவந்து தங்கள் காரியத்தை முடித்துக் கொள்ளலாமென்றும் திட்டமிட்டனர். இந்தத் திட்டம் முருகனுக்குக் கூடத் தெரியாது. மார்த்தாண்டனும், வீரப்பனும் தனியாகக் கலந்து செய்யும் சதி இது. அழகி மட்டும் எப்படியோ ஒற்றுக் கேட்டு இவற்றையெல்லாம் அறிந்து வந்தாள். அதைப்பற்றி யெல்லாம் முருகனிடம் சொல்லலாமா என்று எண்ணினள். என்ருலும், சொன்னல் அவன் இதை யெல்லாம் ஒற்றுக் கேட்டால் தவறு என்று ஏதாவது சொன்னல் என்ன செய்வது என மயங்கினள். முடிவில் ஒன்றையும் வெளியிடலாகாது என்றே திட்ட மிட்டாள். பாவம்—முருகன் அவ்வளவு கொடியவன் அல்லன். இதை அறிந்தால் ஒரு வேளை தடுத்திருப்பான்.

சில நாட்களாக வீரப்பனுக்கு அழகியின்மேல் ஐயம் உண்டாயிற்று. தானும் மார்த்தாண்டனும் வரும்போ தெல்லாம் அவள் எங்கும் செல்லாமல் வீட்டில் இருப்பதும், அவள் நடந்துகொள்ளுகின்ற முறையும், பிறவும் அவனை ஐயங்கொள்ளுமாறு செய்தன. என்ருலும் ஒன்றையும் திட்டமாக அறிந்து கொள்ளுமுன் எதையும் சொல்லலாகாது என்று வாளா இருந்துவிட்டான். ஆனல் அவள் செயலை யெல்லாம் மட்டும் ஆழ்ந்து கவனிக்கத் தொடங்கினன். திங்கட்கிழமை வந்தது. அன்று ஏதோ முருகன் வேறு வேலையாக வெளியே சென்றிருந்தான். வீரப்பன் தற்செய லாக இரவு பத்து மணிக்கு ஒற்றியூர்ப்பக்கம் போனன். அங்குச் சிறு பிள்ளைகள் தவிர முருகனே, அழகியோ யாரும் காணவில்லை. முருகனை மார்த்தாண்டன் அனுப்பினன் என அறிந்தான். அழகி சென்றவிடம் தெரியவில்லை. அவன் ஐயம் உறுதியாயிற்று. எங்கோ இரவில் சென்று ஏதேதோ சூழ்ச்சி செய்கிருள் என அறிந்தான். நெடுநேரம் காத்திருந்தான். நடுநிசியில் பன்னிரண்டு மணிக்குமேல் எங்கிருந்தோ வந்து சேர்ந்தாள் அழகி. உடனே அவள் அறைக்குச் சென்று விட்டாள். அந்த நேரத்தில் அவள் அறைக் கதவைத் தட்டிக் கேட்கலாம் என்ருலும் தைரியமில்லை வீரப்பனுக்கு. தனித் திருக்கும் ஒரு பெண்ணின் அறையை நடு இரவில் தட்டினல் வீண் விபரீதம் வரும் என நினைத்தான். எனவே அப்படியே

ஒன்றும் செய்யாது உடனே அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டான். என்றாலும் அவள் செய்கைகளை யெல்லாம் ஆராயத் தலைப்பட்டான்.

குறிப்பிட்ட திங்கட்கிழமையன்று செல்வநாதர் பிரம்பூர் மாளிகைக்கு வந்து சேர்ந்தார். கமலாம்பாளிடம் அவர் நெடுநேரம் தனித்த அறையில் பேசிக்கொண்டிருந்தார். தனியனைப் பற்றிய தகவல்களை யெல்லாம் கூறினாள் கமலாம்பாள். அனைத்தையும் கேட்ட செல்வநாதருக்கு ஒன்றுமே விளங்கவில்லை. திருவண்ணாமலை என்றதும் ஏதோ கிடைக்கும் என எண்ணினார். திருவண்ணாமலை சென்று அங்குள்ள கிறித்தவப்பிரசவவிடுதியில் விசாரித்தால் ஏதாவது உண்மை தெரிய வழி இருக்கும் என நினைத்தார். அவர் மனம் அவரை உடனே புறப்பட்டுச் செல்லத் தூண்டிற்று. என்றாலும் அன்று திங்கட்கிழமை யாதலாலும், அன்று இரவு அழகியைக் கண்டு கள்வர் நிலைபற்றி அறியவேண்டி யிருந்தாலும் பிறகு செல்லலாம் என முடிவுசெய்தார். என்றாலும் திருவண்ணாமலைக்குச் சென்று தனியனைப் பற்றிய முழு வரலாறும் அறிந்துகொள்ளும் வரையில் அமைதிக்கு வழியில்லை என்று கண்டார்.

இரவு உணவுக்குப் பின் வண்ணாரப்பேட்டைக்குப் புறப்பட்டுச் சென்று அழகியைக் கண்டுவிட்டு வருவதாகச் சொன்னார். என்றாலும் அழகி தன்னை அறியமாட்டாளாதலாலும், கமலாம்பாளும் உடன் வர விழைந்ததாலும் இருவரும் காரில் பதினொரு மணிக்குமேல் புறப்பட்டனர். நல்ல நிலவாக இருந்தமையால் நகர விளக்குகளெல்லாம் கூட நிறுத்தப்பட்டன. மக்கள் நடமாட்டமே இல்லை. எங்கோ இரண்டொருவிடங்களில் தெருவில் சிலர் சென்று கொண்டிருந்தனர். இவர்கள் கார் விரைந்து சென்றது. இரகசியங்களைப் பற்றி அறியச் செல்வதால், டிரைவரை வீட்டிலே நிறுத்திவிட்டுச் செல்வநாதரே காரைச் செலுத்திக் கொண்டு சென்றார். கமலாம்பாள் பின் புறத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தாள். சரியாகப் பன்னிரண்டு மணிக்கு வண்ணாரப்பேட்டை 'கேட்'டிடம் கார் நின்றது.

ஓர் ஓரமாகக் காரை நிறுத்திவிட்டு, இருவரும் கீழே இறங்கினார்கள். தூரத்தே மறைந்திருந்த அழகி, கமலாம் பாளை அடையாளம் கண்டுகொண்டு ஓடிவந்தாள். திருடர் கள் மேன்மேலும் தனியனுக்கு இழைக்கும் தீமைகளைப் பற்றியும், மிக விரைவிலே அவர்களைப் பிடிக்க வழிசெய்ய வேண்டும் என்பது பற்றியும், மார்த்தாண்டனது தங்க சாலை விலாசம், ஒற்றியூர் விலாசம் முதலியன பற்றிய தகவல்களையும் விளக்கிச் சொன்னாள் அழகி. கள்வர்கள் அகப்பட்டால் தானுந்தானே உடன் அகப்பட்டு அவதி யுற நேரும் என்று அவள் நினைக்கவில்லை. செல்வநாதரும் எப்படியும் கள்வர்களைப் பிடித்துவிடுவதாகவும், அவர் களோடு அழகியும் சேர்ந்திருந்தாலும் எப்படியும் அழகியை மீட்டு விடுவதாயும் கூறினார். மறுபடியும் அடுத்தபடி காண்பது பற்றிப் பேசினார்கள். அடுத்த திங்கட்கிழமை வரையில் ஒத்திப்போட வேண்டாமென்றும். அதற்குள் ளேயே எவ்வளவோ காரியங்கள் நடைபெறவேண்டி உள்ளன வென்றும் அழகி கூறினாள். செல்வநாதரும் உணர்ந்தார். அடுத்த வியாழக்கிழமை இரவு அதே நேரத்தில் அங்குக் காணலாம் என்ற முடிவுடன் பிரிந்தனர். செல்வ நாதர் அழகியின் துணையைப் போற்றிப் புகழ்ந்தார். அவர் களிடம் விடைபெற்றுச்சென்று ஒற்றியூர் சேர்ந்த நேரத் திலேதான் முன் சொன்னபடி வீரப்பன் இவளது நடத்தை யில் ஐயங்கொண்டு நேருக்கு நேராகத் தானே அவள் செயலைக் காண்பதாக முடிவு செய்தான்.

இரவு திரும்பிய செல்வநாதரும், கமலாம்பாளும் பிரம்பூர் மாளிகையிற் படுத்துக் கொண்டார்கள். பொழுது விடிந்ததும் செல்வநாதர் சிற்றுண்டிகொண்ட பின் மாம்பலம் புறப்படத் தயாராக இருந்தார். அவர் கமலாம்பாளிடம் தான் உடனே திருவண்ணாமலை புறப்பட்டுச் சென்று, தனி யனைப்பற்றிய தகவல் ஏதாவது கிடைக்குமா என்று அறிந்து வரப் போவதாகச் சொன்னார். கமலாம்பாளோ அதைப் பிறகு பார்த்துக் கொள்ளலாமென்றும், கள்ளர்களால் வர இருக்கும் கொடுமையை முதலாவதாகக் களைந்துவிடவேண்டு மென்றும், அதற்கு வேண்டிய நடவடிக்கைகளைச் செய்ய

வேண்டுமென்றும் கூறினுள். அதில் ஆழ்ந்திருந்த செல்வ நாதரும் கமலாம்பாள் சொல்வது சரிதான் என்ற முடிவுக்கு வந்தார். ஒருசேரக் கள்வர் கூட்டத்தைக் கருவறுத்த பின் அமைதியாக அண்ணுமலைசென்று ஆராயவேண்டுவனவற்றை ஆராயலாம் என்ற முடிவுக்கு வந்தார். அதற்காக உடனே போலீசுக்குச் சென்று செய்யவேண்டிய ஏற்பாடுகளைச் செய்யப் புறப்பட்டார். என்ருலும் வியாழக்கிழமை இரவு அழகியைக் கண்ட பிறகே முழு நடவடிக்கையும் எடுக்க வேண்டியுள்ளதால் எச்சரிக்கை மட்டும் செய்துவைக்க விரும் பிஞர். அவர் கமலாம்பாளிடம் விடைபெற்றுக்கொண்டு, தக்கன செய்வதாகக் கூறிவிட்டுப் புறப்பட்டார். கமலாம் பாளோ நன்ருக எல்லாம் முடியவேண்டுமே என்று இறை வனை வேண்டிக் கொண்டாள். தனியஞே தன்னைப் பற்றி இரண்டுபேர் கவலைப்படுகிருர்களே என்பதையும் அறியாமல் பழைய துன்பங்களையெல்லாம் மறந்து, மணிமேகலையுடன் மரத்தடியில் உட்கார்ந்து பொழுதுபோக்கிக் கொண்டிருந் தான். அழகியோ தான் காட்டிக்கொடுத்ததற்குக் கழுவாயாக எப்படியும் அவன் உயிரைக் கள்வர் கையில் சிக்காது காப் பாற்ற வேண்டுமென்று இரகசியமாக எல்லாவற்றையும் ஆராயத் தொடங்கினுள். வீரப்பன் அவள் இரகசியங்களை அறிவதை ஒற்று இருந்து கண்டுகொண்டே வந்தான். இப்படி ஒருவரை ஒருவர் பற்றிக்கொண்டும் பார்த்துக்கொண்டும், மறைந்தும் வெளிப்பட்டும் வர நாட்கள் ஒன்று, இரண்டு, மூன்று என்று நடந்தன.

IX

# கொடுமை குலைத்தது

**சி**றுவர்களைத் திருடப் பழக்கிவந்த அந்தச் சிறு திருட்டுப் பள்ளிக்கூடம் இவ்வளவு பயங்கரக் கொலைக்கள இயக்கமாக மாறுமென்று யார் எதிர்பார்த்திருக்க முடியும்? என்றாலும் அந்தக் கொலையே அவர் தம் வாழ்வுக்கும் முடிவாக அமைந்தது என்று எண்ணும்போது ஒருவகையில் ஆறுதல் ஏற்படுகிறது, உலகில் மக்கள் குற்றம் செய்வது இயற்கையே. அக்குற்றம் செய்த பின் தனிமையில் உட்கார்ந்து சிந்தித்தால் அக் குற்றத்தின் கொடுமை, செய்தவனுக்கே தோன்றாமல் போகாது. சிலர் அறியாமலே குற்றம் செய்வதும் உண்டு. அவர்கள் தம் குற்றம் அறியின் அதற்காக வருந்திக் 'கழுவாய் உண்டா' எனக் கதறி வாடுவர். தமிழ் நாட்டில் அந்த நிலையில் வாழ்ந்த மன்னர்கள் எத்தனையோ பேர்? கோவலன் உயிரை ஆராயாது கொன்ற குற்றத்திற்காக, மற்றவர் குறை கூறுமுன் தானே தன் உயிரைக்கொடுத்து, வளைந்த கோலைச் செங்கோலாக்கினான் பாண்டியன் நெடுஞ்செழியன். குற்றம் அறிஞர் உள்ளத்தை ஆட்டிப் படைக்கும் ஒரு பேய். அறிந்தோ அறியாமலோ ஒரு குற்றம் செய்ய நேரிடின் ஆயுள் வரை அது பற்றி அறிஞர் சிந்தை அறிவுறுத்திக்கொண்டேயிருக்கும். ஆனால் அறிவற்ற மற்றவர்கள் குற்றங்களைத் தொடர்ந்து செய்துகொண்டே செல்வார்கள். அத்துடன் தாம் செய்தது சரியெனவும் வாதிடுவர். தாம் செய்த குற்றம் வெளிப்படுமாயின் அதை மறைக்கக் கொலை முதலிய எந்தக் கொடுமையும் செய்யத்துணிவர். அதுதான் அவர் தம் நிலை.

வீரப்பன் அழகியின் போக்கிலே ஏதோ வேறுபாடு கண்டான் என்று கண்டோம். அந்தத் திங்கட்கிழமை இரவு அவள் தனியே எங்கோ வெளியே சென்று வந்ததைக் கண்ட பிறகு அவனால் பொறுத்திருக்க முடியவில்லை. மேன்மேலும் அவள் செயலை ஆராயத் தொடங்கினான். ஒருவேளை தனியனைப்

பற்றித் தாங்கள் செய்யும் சதிச்செயலை அவள் அறி வாளோ என ஐயுற்றான். முருகனிடத்தில் அதுபற்றிச் சொல்லலாமா என நினைத்தான். என்றாலும் அவர்கள் இரு வரும் இருக்கும் அன்பு வாழ்வில் தன் சொல் முருகனுக்கு ஏற்காது என்பதையும் உணர்ந்தான். மார்த்தாண்டனிடம் சொல்லலாம் என்றாலோ, அவன் தன் பேரிலேயே திரும்பி னால் என் செய்வது என்று சிந்தித்தான். முடிவில் இன்னும் சில நாளைக்குப் பொறுத்துப் பார்க்கலாமென்றும், காரியம் மிஞ்சுமாயின் தானே தனியனுக்குமுன்பே அவளைத் தீர்த்துக் கட்டிவிடலாம் எனவும் முடிவு செய்தான். ஆம், தாங்கள் செய்யும் திருட்டு தெரியா வகைக்கு எத்தனை கொலை வேண்டு மானாலும் செய்ய உடன் பட்டது வீரப்பன் உள்ளம். அவனுக்கு அவை யெல்லாம் குற்றமாக தெரியவில்லை. அது அவன் தவறு இல்லை; இளமை முதல் திருட்டுத் தொழிலில் வாழ்ந்து வந்தான். அவனும் எவ்வளவோ கொள்ளையும் கொலையும் செய்திருப்பான். எனவே தனி யனையோ, அழகியையோ கொல்லுவதில் அவனுக்கு ஏன் தயக்கம் உண்டாகப்போகிறது?

எப்படியும் அடுத்த ஞாயிற்றுக்கிழமை தனியனைக் கொண்டுவந்து விடுவது என்று முடிவு செய்தார்கள் வீரப் பனும் மார்த்தாண்டனும். ஞாயிற்றுக்கிழமைதோறும் தங்க ளது அழகிய மாட்டு வண்டியில் கமலாம்பாளும் பிறரும் சென்னைக் கடற்கரைக்கோ, வேறு இடங்களுக்கோ பொழுது போக்குக்காகச் சென்று உலவி வருவது அவர்களுக்குத் தெரியும். அடுத்த ஞாயிறும் அவ்வாறு செல்வார்கள். செல் லும்போது, நன்கு குணமடைந்த தனியனையும் அழைத்துச் செல்வார்களென்றும், அப்போது வண்டியை எப்படியாவது மடக்கி அவனைக்கொண்டு வந்துவிடவேண்டுமென்றும் முடிவு செய்தார்கள். அவன் அவர்களுடன் செல்லாதிருந்தால், ஒருவேளை தனியாக வீட்டிலிருப்பானென்றும், துப்பாக்கி யோடு சென்று அங்குள்ள வேலையாட்களை மிரட்டி எப்படி யும் கொண்டுவந்து விடலாம் என்றும் முடிவு செய்தனர். கொண்டுவந்து அவனைக் கொல்வதா வேண்டாமா என்ற விவாதம் எழுந்தது.

பல கொள்ளைகளும் கொலைகளும் செய்து உரமேறிய நெஞ்சும் கையும் கொண்ட வீரப்பனுக்கு, கொலை செய்வது மிக எளிதாகத்தான் இருந்தது. அவன் நிச்சயம் அவனைக் கொன்றுதான் ஆகவேண்டும் என்று முடிவு கூறினான். வெறும் வாழ்வின் தேவைக்காகத் திருட்டுத் தொழிலை மேற் கொண்டிருந்த மார்த்தாண்டனுக்கோ ஒன்றும் புரியவில்லை. அதுவும் அந்தப் பையனது இளமை ததும்பும் வளமை பொருந்திய கள்ளங்கமற்ற முகத்தை நினைக்கும்போது அவனை யும் கொலை செய்வதா என்ற எண்ணம் அவன் உள்ளத்தில் எழுந்தது. மற்றொன்றும் அவன் நினைத்தான். தனியன் தங்க ளைக் காட்டிக்கொடுக்க வேண்டுமென்று கருதியிருந்தால் இத் தனை நாள் செய்திருக்கக்கூடாதா? முன் சென்றபொழுதுதான் அவனுக்கு இடமும் பிறவும் தெரியா. இப்போது எல்லாவற் றையும் கண்டு அறிந்தவன்தானே; பின் ஏன் அவன் ஒன்றை யும் வெளிப்படுத்தவில்லை. ஒருவேளை இதுபற்றி யெல்லாம் அவன் கவலை கொள்ளவில்லையா? அப்படியிருந்தால் நாம் மட்டும் ஏன் அவனைக் கொண்டுவந்து கொலைசெய்ய வேண் டும் என்றெல்லாம் அவன் உள்ளம் நினைத்தது. எண்ணி யதை அப்படியே வீரப்பனிடம் சொன்னான். வீரப்பனோ அவன் சொற்களுக்கெல்லாம் ஒன்றும் பதில் சொல்லவில்லை. எப்படியும் அவனைக் கொண்டுவந்து கொலை செய்தால்தான் தன் வாழ்க்கை நிலைக்குமென்று அவன் கருதினான். அதை வெளிப்படையாகவும் மார்த்தாண்டனிடம் சொன்னான். மார்த்தாண்டனோ இதுவரை கொலையறியாதவன். அவன் மனம் எந்தெந்த வகையிலோ வருந்திற்று. என்றாலும் இறுதி யில் வீரப்பன் வாய்மொழிக்கு இணங்கினான். அடுத்த ஞாயிற்றுக்கிழமை எப்படியும் அவனைக் கொண்டுவந்து கொலை செய்ய வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. தங்கள் கொடுமையெல்லாம் வெளியாகாதிருக்க வேண்டி, திருடப் பழக்கிய சிறுவர்களையெல்லாம் கூடக் கொஞ்சங் கொஞ்சமாகப் பணம் கொடுத்து அனுப்பிவிட்டார்கள். நின்றவர் வீரப்பன், மார்த்தாண்டன், முருகன், அழகி நால்வருமே.

கொலை, கொலை என்று அழகியின் உள்ளம் அலறியது. ஐயோ அடுத்த ஞாயிறு அன்று என்று எண்ணும்போது

நெஞ்சம் திடுக்கிட்டது. அதற்குத் தான்தானே காரணம் என்பதை நினைத்தவுடன் அழுகையும் வந்துவிட்டது. வீரப்பனும் மார்த்தாண்டனும் பேசி முடிவுசெய்ததை எப்படியோ ஒட்டுக்கேட்டு அறிந்துவிட்டாள் அழகி. அவள் தன் கணவனை இதற்கெல்லாம் சேர்த்துக்கொள்ளவில்லையே என மகிழ்ந்தாள். ஒருவேளை அவனுக்குத் தெரிந்தால் அவன் தனக்குச் சொல்ல, தான் மற்றவர்களுக்குச் சொல்லி விட்டால் என்னுவது என்று தனியாக அவர்கள் நினைத்திருக்கலாம் என நினைத்தாள். ஒரு வகையில் தன் கணவன் இதி லெல்லாம் சேராதிருப்பது அவளுக்கு மகிழ்ச்சிதான். வீரப்பனும் மார்த்தாண்டனும் தம் பேச்சை முடித்துவிட்டு வெளியே வந்தார்கள். அழகி தான் ஒன்றும் அறியாதவளெனக் காட்டிக்கொள்ள மாளிகையில் உட்புறத் தாழ்வாரத்தில் படுத்துக்கொண்டாள். முருகன் உள் அறையில் உறங்கிக்கொண்டிருந்தான். மார்த்தாண்டன், உடனே வீட்டிற்குப் புறப்பட்டுவிட்டான். வீரப்பன் சுற்றிவந்து ஒரு முறை பார்த்துவிட்டு, கதவைத் தாளிட்டுவிட்டு, மேலறையில் சென்று படுத்துக்கொண்டான்.

அன்று புதன்கிழமை, அடுத்த நாள் வியாழக்கிழமை இரவுதான் மறுபடியும் அழகி வண்ணாரப்பேட்டைக்குச் செல்லவேண்டிய நாள். அன்று எப்படியும் நடந்தவற்றைச் சொல்லி உடனே அவர்களைக் கைது செய்யவேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் ஆய்ந்துகொண்டிருந்தாள். எப்படியோ பொழுது விடிந்தது. வீரப்பன் வெளியே சென்றுவிட்டான். அவன் அழகியைக் கண்காணித்தே வந்தான். முருகன் ஏதோ வேறு வேலை இருக்கிறதென்று சொல்லி வெளியே சென்றுவிட்டான். அன்றைப் பொழுது கழிந்தது. இரவு பதினொரு மணியாகிவிட்டது. முருகன் உள் அறையில் உறங்கிக் கொண்டிருந்தான். மெதுவாக அடிமேல் அடி வைத்து வெளிவந்தாள் அழகி. அன்று வீரப்பன் அங்கு வரவில்லை என்று சொல்லிவிட்டது நல்லதாயிற்று என்று அவள் நினைத்தாள். ஆனால் பாவம், அவன் தன் செயலைப் பின்னிருந்து கவனித்து வந்தது எப்படித் தெரியும் அவளுக்கு? அழகி செல்லச் செல்ல அந்த உருவமும்

தூரத்தே அவள் அறிந்துகொள்ளாதபடி பின்னலேயே சென்று கொண்டிருந்தது. வண்ணுரைப்பேட்டை (ரயில்கேட்) அருகில் செல்வநாதரும், கமலாம்பாளும் முன்னமே வந்திருந்தனர். அவர்கள் மூவரும் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தனர். வெகுதூரத்தே இருந்ததால் வீரப்ப னுக்கு அவர்கள் என்ன பேசிக்கொண்டிருந்தார்கள் என்பதே கேட்கவில்லை. என்ருலும் ஏதோ ஒரு சூட்சிதான் நடக் கிறது என்பதை மட்டும் அவன் அறிந்தான். கார்ப்பொ ரேஷன் விளக்கில் அந்த அம்மாள் கமலாம்பாள் என்பது மட்டும் தெரிந்தது. ஆண் யார் என்று தெரியவில்லை. உடனே ஓடிச்சென்று அப்படியே மூவரையும் கொன்று விடலாமா என நினைத்தான். ஆனல் தனியனைக் கொல்வதாகத் தான் விரும்பும் எண்ணம் கைகூடாது என அவன் கருதினன். மற்றும் அவன் கையில் ரிவால்வரைக்கொண்டு வரவில்லை என்பதையும் உணர்ந்தான். நெடுநேரம் அவர்கள் பேச்சு முடியும்வரை அப்படியே நின்றுகொண்டிருந்து, பிறகு அழகி புறப்பட்டதும் அவனும் திரும்பினன்.

அழகி, கமலாம்பாளுக்கும், செல்வநாதருக்கும் அங்கு நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் விளக்கமாக உரைத்தாள். அந்தப் பாவி வீரப்பன் ஏனே தனியன் உயிரின்மேல் கண் வைத்திருக்கிறன்? மார்த்தாண்டன் எவ்வளவு சொல்லியும் அவன் கேட்காததைப் பற்றியும் விளக்கி உரைத்தாள். உடனே போலீஸ் வந்து அவர்களைக் கைதுசெய்யாது போனல் நிலைமை மோசமாகி விடுமென்றும் உரைத்தாள். தானும் அக்கூட்டத்தில் ஒருத்தியாக இருந்து சிறைசெல்லத் தயங்கவில்லையென்றும், தனியனைக் காட்டிக்கொடுத்த பாவத் திற்காக அந்தக் கொடுமையும் வேண்டியதுதான் என்றும் கூறினள். என்ருலும் செல்வநாதர் அவளைச் சாட்சியாக ஆக்கிக்கொண்டு பிறகு விடுதலை செய்ய வழி காண்பதாகவும் கூறினர். அவள் விடுதலை யென்ருல் தன் கணவனுகிய முருக னுக்கும் இருந்தால்தான் தான் வெளி வருவதாகவும், இன் றேல் அதுபற்றி எண்ண வேண்டாமென்றும் கூறினள். அவ ளது அன்பின் நிலையை எண்ணி எப்படியும் அவர்கள் இரு வரையும் மீட்பதாகவே கூறினர் செல்வநாதர். நேரம் அதிக

மாகிவிடவே மறுநாள் காலை எப்படியும் ஏழு மணிக்குள் போலீசுடன் அவள் குறிப்பிட்ட மாளிகைக்கு வருவதாகவும் அப்போதே எல்லோரையும் கைது செய்துவிடலாம் என்றும் கூறினார் செல்வநாதர். அழகியும் அன்று காலை ஏழு மணிக்குள் மார்த்தாண்டன், வீரப்பன் இருவரும் வீட்டில் இருப்பார்களென்றும், அவர்களை அப்போதே கைது செய்யலாம் எனவும் கூறினாள். பிறகு பிரிந்தனர்.

மறுநாள் வெள்ளிக்கிழமை, விடியுமுன் எப்படியும் வீரப்பன் அழகியைத் தீர்த்துவிடவேண்டுமென எண்ணிக் கொண்டான். அவள் இருந்தால், தான் நினைத்ததெல்லாம் கைகூடாது என்று கருதினான். பொழுது விடிந்ததும் முருகனும் அழகியும் எழுந்து காப்பி அருந்திக் கொண்டிருந்தார்கள். வேகமாக அறையினுள் புகுந்தான் வீரப்பன். கையில் ரிவால்வர் காட்சி அளித்தது. முகம் கோபத்தால் கறுகறுத்தது. பற்களை நறநறவென்று கடித்தான். முருகனுக்கு அவன் செயல் ஒன்றும் விளங்கவில்லை. அழகி ஒரு வேளை தான் செய்த சூழ்ச்சி எல்லாம் வெளியாகிவிட்டதோ என்று அஞ்சி நடுங்கினாள். முருகன் நடுங்கும் அழகியை அப்படியே அணைத்துக்கொண்டு வீரப்பனைப் பார்த்தான். வீரப்பன் கோபம் அதிகமாகிக்கொண்டே இருந்தது. 'அண்ணே, என்ன இப்படி எதிர்பாராது?' என்று கேட்டான் முருகன். வீரப்பன் தானும் மார்த்தாண்டனும் தனியனைக் கொல்லச் சதி செய்திருப்பதாகவும், அதையெல்லாம் அழகி அவனது உறவினர்களுக்கு இரவு நேரங்களில் இரகசியமாகச் சென்று சொல்லி வருவதாகவும், ஆகவே அவள் தங்கள் உயிருக்கே உலை வைப்பதாகவும் கூறி ஒரு கோபப் பார்வையை அழகியின்மேல் செலுத்தினான். 'இந்த நாய் இரவு எங்கே சென்றது' என்று கேள் எனக் கத்தினான். தன் மனைவியை மாற்றான் பழித்துரைப்பதைக் கண்டு பொறுவிட்டாலும் உண்மை அறிய அழகியை முன்னாள் இரவு எங்கு சென்றாய் எனக் கேட்டான். அவள் தான் எங்கும் செல்லவில்லை எனவும், அங்கேயே முன் தாழ்வாரத்தில்தான் படுத்துக் கொண்டிருந்ததாகவும் கூறினாள். முருகன் வீரப்பனை நோக்கினான். வீரப்பனின் கோபம் முன்னையினும் அதிக

மாயிற்று. பொய் சொல்லவும் தெரியும் போலும் என்று படபடத்தான். அவளைத் தன் வசம் ஒப்புவிக்க வேண்டு மெனவும் அதிகாரத்தோடு வீரப்பன் கேட்டான். அதைக் கேட்ட முருகனுக்குக் கோபமும் ஆத்திரமும் பொங்கி எழுந்தன. எங்கிருந்தோ தண்டச் சாப்பாட்டுக்கு வந்த அவனுக்கு அவ்வளவு அகங்காரமா என்று கொக்கரித்தான். தன் உயிர் போனாலன்றி அழகியை அவ்வளவு எளிதில் வீரப்பன் கொல்ல முடியாது என்று திட்டமாகக் கூறினான். வீரப்பனோ இருவரையும் நன்கு வைதான். அழகியைக் கொல்ல ரிவால்வரைச் சரி செய்தான். ஆனால் அதற்குள் முருகன் தாவிச் சென்று ரிவால்வரைப் பற்றினான். இரு வருக்கும் சிறிது நேரம் சண்டை நடந்தது. 'எப்படியும் ரிவால்வரைத் தள்ளிவிட்டால் அழகி எடுத்துக்கொள்வாள். பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று முயன்றான் முருகன். ஆனால் பாவம், அந்தச் சண்டைக் கிடையிலே ரிவால்வரி லிருந்து புறப்பட்ட குண்டானது முருகன் மார்பைத் துளைத் தது. ஐயோ என்று கதறி மண்மேல் சாய்ந்தான். வெற் றிக் களிப்போடு எழுந்த வீரப்பன் கொக்கரித்தான். இதோ பார் உன் பரிசு என்று மற்றொரு குண்டை அழகியின் மார்புக்கு நேராகச் செலுத்தினான். அவள் ஐயோ என்று கதறி வீழ்வதற்கும், பின்பக்கம் மார்த்தாண்டன் உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது. அவன் புகுந்ததும் தன் மகனும், மருமகளும் குண்டுபட்டு வீழ்ந்து கிடப்பதைக் கண்டான். ஒன்றும் யோசிக்காது, அப்படியே கோபக் கொழுந்து எழ, தன் துப்பாக்கியே தன் மகனுக்கும் மரு மகளுக்கும் எமனாக வந்ததா என்று எண்ணிக்கொண்டு பின்பக்கம் சென்று, எட்டி, வீரப்பன் கையிலிருந்த ரிவால் வரை பிடுங்கிக் கொண்டான். வீரப்பன் திருதிரு என விழித்தான். அவர்களைக் கொன்ற காரணத்தை வீரப்ப னிடமிருந்து கேட்க விரும்பவில்லை மார்த்தாண்டன். அவன் தான் கொன்றான் என்பதை நேரேயே கண்டுவிட்டானே. 'உண்ட வீட்டுக்கு இரண்டகம்' என்று உரக்கக் கத்தியது அவன் வாய். இன்னும் அந்த ரிவால்வரில் இருந்த குண்டு ஒன்று, 'இதோ இந்தா உன் கொலைக்குப் பரிசு! என்று கூறிக்கொண்டே அவன் அருகில் சென்றான். வீரப்பன்

ஏதோ சொல்ல வாயெடுத்தான். 'வேண்டாம் உன் பேச்சு. நான் உன் பேச்சில் மயங்கமாட்டேன். என் அருமை மகன், அவனது அன்பின் மனைவி, அவர்களைக் கொன்ற உன்னிடம் என்ன பேச்சு. பேயே, போதும் உன் உலக விளையாடல். ஒழி' என்று சொன்னான். அவன் சொல்லை ஆமோதிப்பது போன்று ரிவால்வரிலிருந்த குண்டு வீரப்பன் உடலை ஊடுருவியது.

வீரப்பன் வீழ்வதற்கும் செல்வநாதர் போலீஸ் அதிகாரிகளுடன் உள்ளே நுழைவதற்கும் சரியாக இருந்தது. அவர்களைக் கண்ட மார்த்தாண்டன் கையிலிருந்த ரிவால்வரை வீசி எறிந்துவிட்டு ஓட்டம் பிடித்தான். பின்புறமாக மாளிகையை விட்டு வெளியேறினான். அவனைத் துறத்தி வந்த போலீஸ்காரர்களும் ஒரு இன்ஸ்பெக்டரும் பின் தொடர்ந்து ஓடிக்கொண்டே யிருந்தனர். உள்ளே வேறு சில போலீஸ் உத்தியோகஸ்தர்களும், செல்வநாதரும் இருந்தனர். பெரிய கொள்ளையிடமாதலால் தக்க பாதுகாப்போடு, இரண்டு மூன்று போலீஸ் இன்ஸ்பெக்டர், ஒரு அதிகாரி, பல போலீஸ்காரர் இவர்களுடன் செல்வநாதர் வந்து சேர்ந்தார். என்றாலும் அவர் வருவதற்குள் இவ்வாறு ஆகியிருக்கும் என்று அவர்கள் நினைக்கவேயில்லை. ஒருபுறம் அழகி வீழ்ந்து கிடப்பதைக் கண்டார். அவள் மூச்சுமட்டும் ஓடிக்கொண்டிருந்தது. கொஞ்சம் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி வாயில் ஊற்றினார். பாவம், அவளால் பேச முடியவில்லை. கண் விழித்துப் பார்த்தாள். செல்வநாதரைக் கண்டாள். 'ஆ' என்ற அலறலுடன் அவள் ஆவி பிரிந்தது.

அவளைத் தாங்கிக் கொண்டிருந்தார் செல்வநாதர். போலீஸ் தலைவர்கள் முருகனைச் சோதித்தனர். அவன் உயிர் நீங்கியிருந்தது. வீரப்பன் சற்று அசைந்து கொடுத்தான். தண்ணீர் வேண்டுமென்று காட்டினான். தண்ணீர் கொடுத்தார்கள். சுற்றுமுற்றும் பார்த்தான். செல்வநாதர் இருந்த பக்கம் திரும்பினான். 'அண்ணா, அண்ணா' என்று மெல்ல அழைத்தான். தன்னை அவன் அண்ணா என அழைப்

பதற்குக் காரணம் என்ன என்று அறியாத செல்வநாதர் அவன் அருகில் சென்றார். போலீஸ் தலைவர்களும் உடன் அவன் பக்கத்தில் வந்தனர். ஏதோ பேச அவன் விரும்பினான். எல்லோரையும் அருகே அழைத்தான். தான் சொல்லப் போவதைக் குறித்து வைத்துக்கொள்ள வேண்டுமெனப் போலீஸ் அதிகாரியை வேண்டிக்கொண்டான். மரண வாக்கு மூலம் தேவை என்பதை அறிந்த அந்த போலீஸ் அதிகாரியும் அப்படியே குறிப்பு எடுக்கத் தயாரானார். செல்வநாதர் மட்டும் அவன் தன்னை அண்ணா என்று ஏன் அழைத்தான் என்பதை எண்ணி எண்ணிப் பார்த்தார். அவன் தலையைத் தூக்கித் தன் துடையின்மேல் வைத்துக்கொண்டார். வீரப்பன் வேதனைகளுக்கிடையே, விம்மலுக்கிடையே ஒவ்வொரு சொல்லாகச் சொன்னான். அவன் சொன்னவை இவைதான்:

'அண்ணா! உன்னை அண்ணா என்று அழைப்பதற்குப் பலரும் வியக்கத்தான் செய்வர். ஒரு கள்ளக் கூட்டத் தலைவன், கொலையாளி உன்போன்ற ஒரு உத்தம மனிதருக்குத் தம்பியாவதா என்று பலரும் நினைப்பார்கள். நான் யார் என்று நீயே அறியமாட்டாய். என்னைப் பார்த்தே தான் பல ஆண்டுகள் ஆயினவே. நான் உன் தம்பிதான். உனது சிறிய தந்தையார் கோடீச்வரருடைய மகன் முருகேசன்தான் நான்.' இதை சொல்லிய உடன் செல்வநாதர் முகம் விரிந்தது. அவன் மேலும் சொன்னான்: 'அண்ணா, என் தந்தையார் கையில் உள்ள பொருளையெல்லாம் செலவு செய்து, விளையாடி, இழந்துவிட்டார். அந்தத் துன்பத்திலேயே அவர் இறந்துவிட்டார். இவைகளெல்லாம் நீ அறியமாட்டாய். அன்று நீ இங்கே இல்லையே. வடநாட்டுச் சாந்திநிகேதனத்தில் தானே படிக்கச் சென்றிருந்தாய். அப்போது நான் பதினைந்து வயதுப் பையன்தான். என்றாலும் இளமையில் ஒன்றுமறியாத நிலையில்—அந்த வயதில் தந்தையைப் பறிகொடுத்த என் உள்ளம் உடைந்தது. உன் தந்தையாரிடம்—என் பெரியப்பாவிடம்—ஏதேனும் உதவி பெறலாம் என விரும்பினேன். அவர் ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லி வெறுத்துப் பேசியதோடு,

எங்கள் வீடு வாசல்களையும் அவர் பாக்கிக்காக நீதிமன்றத்தின் மூலம் தமதாக்கிக் கொண்டார். நான் வேறு வழியின்றி அன்று முதல் இத் தொழிலைத்தான் மேற்கொண்டிருக்கிறேன். பெயரையும் மாற்றி வைத்துக்கொண்டேன். அண்ணு, நீ ஏன் சாந்தினிகேதனம் அனுப்பப்பட்டாய் என்பதும் தெரியும். திருவண்ணுமலைப் பக்கத்திலிருக்கும் அத்தை வீட்டில் உள்ள பெண்ணை நீ காதலித்ததும், அவள் கருத்தரித்ததும், அதை அறிந்து நீ அவளை மணக்க விழைந்ததும், பெற்ருேர் அதை விரும்பாமல் உன்னை ஊரைவிட்டுப் போக்கவே சாந்தினிகேதனம் அனுப்பினூர்கள் என்பதையும் நான் அறிவேன்.' இதைக் கூறி முடித்ததும் அவன் ஒரு பெருமூச்சு விட்டான். அனைவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். செல்வநாதர் கண்ணில் நீர்த்துளிகள் தென்பட்டன. சிறிது நின்று பிறகு, அவன் பேசத் தொடங்கினுன்: 'அண்ணு, நீ சென்ற பின் அவள்—உன் காதலி—என் அண்ணி, திருவண்ணுமலை மருந்தகத்தில் ஒரு மகனைப் பெற்று, உயில் சாசனம் முதலியன எழுதி, அவற்றையும், உன் புகைப்படத்தையும், பெற்ற பிள்ளையையும் அந்த விடுதிப் பெண் வைத்தியரிடம் ஒப்படைத்து இறந்துவிட்டாள். இறப்பதில் அவள் மகிழ்ந்தாளாம். என்ருவது நீ வந்து அவற்றைப் பெற்ருல் யாரோ ஒழுக்கங் கெட்டவள் என்று உலகம் அவளை இகழாதல்லவா? அந்த மருந்தகத்தில் அனைத்தையும் கொடுத்து, அந்தப் புகைப்படத்துக்கு உரியவர் வந்தால் எல்லாவற்றையும் ஒப்படைக்கச்சொல்லிச் சென்ருராம். அவள் கொடுத்த பெட்டியில் என்ன இருக்கிறதென்பதை யாரும் அறியார். அண்ணு அது உன்னுடையது. அங்கு அனுதையாக்கப்பட்ட பையன் பிறகு வழக்கப்படி மாணவர் விடுதியில் சேர்க்கப்பட்டான். கடைசியில் நமது உடன் பிறந்த கமலாம்பாள் வீட்டில் இன்று உன் அன்பிற்குப் பாத்திரமாக இருக்கின்ற தனியன் உன் மகன்தான் அண்ணு' என்ருன் வீரப்பன். அவன் கண்ணில் நீர் கசிந்தது. செல்வநாதர் 'ஆ' என்று அலறிவிட்டார். அவன் மேலும் சொன்னுன்: 'அண்ணு, இன்னும் கேள். நீ சாந்தினிகேதனத்திலிருந்து திரும்பி வருவதற்குள்ளாகவே உன் பெற்ருேர் இறந்துவிட்டார்கள். நீ வந்ததும்

அந்தச் செல்வத்தை வைத்துக் கொண்டு சிறக்க வாழ்வாய் என்று நினைத்தேன். நீயோ மணமே வேண்டாமென்று மறுத்து, அனாதை விடுதி அமைத்து ஏழைகளுக்குப் பணி செய்யத் தொடங்கிவிட்டாய். இந்த உலகத்தாரும் நீ வட நாட்டுச் சாந்திநிகேதனத்தில் படித்த காரணத்தாலே இந்தத் தியாக உணர்ச்சி வந்ததென்றும் நீ உண்மையில் உயர்ந்தவன் என்றும் பேசிக்கொள்ளுகிறார்கள். ஆனால் நான் அறிவேன் நீ அனாதை விடுதி அமைத்த காரணத்தை. சாந்திநிகேதனத்திலிருந்து வந்த நீ பெற்றோர்கள் விட்டுச் சென்ற கணக்கு முதலியவற்றையும் பிறவற்றையும் கவனித்துவிட்டு நேராகத் திருவண்ணாமலைப் பக்கம் சென்றதை அறிவேன். அங்குக் கிராமத்துக்குச் சென்று விசாரிதது, பின் மருந்தகம் வந்ததும் தெரியும். நீ அங்கு செல்லுமுன் அந்த மருந்தகத்தின் தலைமைப் பெண் மருத்துவர் இறந்துவிட்டதனால் தக்க தகவலை நீ பெறவில்லை. இறந்த அந்தப் பெண் மருத்துவர், அந்தப் பெட்டியையும், புகைப்படத்தையும், அத்துடன் குழந்தையின் முகத்தில் இருக்கும் 'மரு' அடையாளத்தையும், மருத்துவப் பெருந் தலைவரிடம் கொடுத்து உரியவர் வந்தால் சேர்க்குமாறு சொல்லிவிட்டு இறந்தாள். நீ உடனே சென்றால் அந்தத் தகவல்களையெல்லாம் பெறலாம்' என்றான். செல்வநாதர் அவன் தலையை நன்கு நிமிர்த்தி உற்று நோக்கினார். மறுபடியும் தண்ணீர் அளித்தார். அவனுக்கோ குண்டு வேதனை வரவர அதிகமாயிற்று. செல்வநாதர் முகத்தில் வியப்பும் சோகமும் அதிகமாகத் தாண்டவமாடின. அதைக் கண்டு மேலும் தட்டுத்தடுமாறிப் பேசத் தொடங்கினான் வீரப்பன்.

'அண்ணா, இந்த இரகசியங்களெல்லாம் எனக்கு எப்படித் தெரியும் என்றுதானே நீ கேட்கிறாய்? ஆம். அந்தக் கேள்வியை உன் பார்வையும் முகக்குறிப்புமே கேட்கின்றன. நான் எனது பெரியப்பா உதவி செய்ய மறுத்ததும் அவரையும் அவர் மகனாகிய உன்னையும் பழிவாங்க வேண்டுமென்று முடிவு செய்தேன். அதற்கு ஏற்றாற்போல இந்த திருட்டுத் தொழிலும் அமைந்தது. அதற்குள் அவர் இறந்துவிட்டார். நீ வந்ததும் உன்னைக் கவனித்துக்கொண்டே வந்தேன்.

அதற்குமுன்பே நீ சாந்தினிகேதனம் சென்றபோது செல்லம் மாள்தான் காரணம் என்று வீட்டிலுள்ளோர் பேசிக்கொண் டதை அறிந்தேன். ஆதலால் அங்குச் சென்று தனியனைப் பற்றியும், அவர் தாயாரைப் பற்றியும் எல்லாத் தகவல் களையும் அறிந்து வந்தேன். இடையிடையே என் வயிறு வளர்க்க இந்தத் திருட்டு வேலையும் செய்துவந்தேன். இரண் டொரு முறை சிறையும் சென்றேன். நீ உன் செல்வியைப் பெருத காரணத்தால் அனுதை விடுதி அமைத்து ஆறுதல் பெற்றுய். உன் மைந்தன் நம் செல்வன் அனுதையாக இது வரை வாழ்ந்தாலும் எப்படியோ உன்னை வந்தடைந்தான். அண்ணு அதை அறிந்த பிறகுதான் என் கொடுமை உச்சநிலை அடைந்தது. தனியன் உன்னிடம் வந்தபின் இதோ இந்த அழகியால் பிடிக்கப்பட்டான். என்ருலும் நான் என்றைக் காவது ஒருநாள் அவனை நீ கண்டு பிடிப்பாய் என்றும் ஆகவே அவனைச் சிறையில் தள்ள வேண்டுமெனவும் எண்ணித்தான் பிரம்பூர்க் களவில் அவனைச் சேர்த்தேன். அது கைகூடாத பொழுது அவனைச் சுடவும் செய்தேன். அது காலில் பட்டுத் தவறியது. தற்போது அவன் அத்தையால் நன்கு போற்றப்படுவதாலும் நீயும் அவனிடம் அன்புகொண்டிருப்ப தாலும் எப்படியும் நீ அவனை மகனென்று கண்டுகொள்வாய் எனக் கருதினேன். அவனை அதற்குள் கொன்றுவிட்டால், நமது மூதாதை வழிவந்த உன் செல்வமெல்லாம் என்ருவது எனக்குத்தானே என்று எண்ணினேன். உனக்கு மனை வியோ, மக்களோ இல்லாத காரணத்தால் பங்காளி என்ற முறையில் நானே எல்லாச் செல்வத்துக்கும் உரியவனுவேன் என்றே கருதினேன். அண்ணு, சொல்லப் பயமாக இருக் கிறது. தேவையானுல் உன்னையும் கொல்ல நினைத்தேன். இதோ அதன் பலனை இன்று பெற்றுவிட்டேன். என் இரகசியங்களை யெல்லாம் உன்னிடம் சொல்லிய இதோ இந்த அழகியையும், அவள் கணவனையும் நானே கொன்றேன்.

ஆனால் மார்த்தாண்டன் எனக்கு எமனாக வந்தான். அண்ணா என்னை மன்னித்து விடு. கடைசியாக ஒரே அமைதியில் நான் இறக்கின்றேன். இதோ என் அண்ணன் அருமை மடியில் தலை வைத்துக் கொண்டிருந்தே மாய்கின்றேனே இது போதாதா நான் அமைதி பெற. அண்ணா! உடனே அண்ணாமலை சென்று அந்த விடுதியின் தலைவரான ஆங்கில மருத்துவரிடம் நின்றால் உன்னைக் கண்ட உடனே அந்தப் படத்தைக் காட்டி மற்றவற்றையும் கொடுப்பார். தனியன் முகத்திலுள்ள மரு அங்கே குறிக்கப்பட்டுள்ளதாம். பெட்டியையும் திறந்து அதில் உள்ளவற்றையும் காண்பாய். பிறகு தனியனைத் தக்க வகையில் உயர்த்து அண்ணா! மற்றொன்றும் நான் கூற ஆசைப்படுகிறேன். தனியனைக் கொண்டு வர வேண்டும் என்ற காரணத்தால் பலமுறை பிரம்பூர் மாளிகைக்கு நான் செல்வதுண்டு. அப்போதெல்லாம் தனியனும் மணிமேகலையும் பழகும் முறை என் உள்ளத்தை ஈர்த்தது. அண்ணா! அவர்கள் இருவர் வாழ்வையும் அப்படியே பிணைத்துவிடு' என்று கூறினான். அதற்குமேல் அவனால் பேச முடியவில்லை. கண் இருண்டது. கடைசியாக, 'அண்ணா என்னை மன்னிப்பாய்-மன்னிப்பாய்' என்று அலறினான். அந்த அலறலே அவன் ஆவியைக்கொண்டு சென்றது. செல்வநாதர் ஓவென்று கதறிவிட்டார். அருகில் உள்ள போலீஸ் அதிகாரிகள் தேற்றினர். பிறகு அதிகாரிகள் அனைவரும் புறப்படத் தயாரானார்கள். மார்த்தாண்டனைத் தேடிச் சென்றவர்களின் தகவல் இன்னும் வரவில்லையே என எண்ணினர். போலீஸ் வண்டி வந்து மூன்று பிணங்களையும் ஏற்றிச் சென்றது. போலீஸ் அதிகாரிகள், மார்த்தாண்டனைத் தொடர்ந்து முன்னவர் சென்ற வழியே திருவொற்றியூர் நோக்கிச் சென்றனர். சிந்தனைத் தடமாடும் நிலையில் இருந்த செல்வநாதரைத் தம் வீட்டுக்குச் செல்க என்றும், மார்த்தாண்டன் தகவல் அறிந்துகொண்டு தாம்

விரைந்து வந்து விடுவதாகவும் சொல்லித் தலைமை போலீஸ் அதிகாரி சென்றார். செல்வநாதரோ ஒன்றும் தோன்றாதவ ராய்த் தன் காரில் ஏறிக்கொண்டு கார் ஓட்டியை ஓட்டச் சொன்னார். எங்கு என்று அவன் பலமுறை கேட்ட பிறகுதான், அவர் பிரம்பூருக்கு என்று மெதுவாகப் பதில் இறுத்தார்.

மார்த்தாண்டனைத் துரத்திச் சென்ற போலீஸ்காரர்கள் அவனை விடவில்லை. தெருவுதொறும் இன்னும் பலர் அவனைத் தொடர்ந்து துரத்தினர். அவன் உடலில் பட்ட இரத்தக்கறை அவன் ஏதோ கொலை செய்துதான் ஓடி வரு கிறான் என்பதை நன்கு விளக்கிற்று. திருவொற்றியூர்த் தெருவுதோறும் ஓடினான். 'கொலையாளி கொலையாளி' என்ற குரல் அதிகமாயிற்று. போலீசும் நெருங்கி வந்து கொண் டிருந்தது. அருகிலே உள்ள கோயிலுக்குள் நுழைந்தான். ஒருவேளை ஆண்டவன் தன்னை ஆட்கொள்வான் என்ற எண்ணம் போலும்! ஆனால் உள்ளே இருந்தவர்கள் வெளி ஆரவாரம் கேட்டு மடக்க வந்தார்கள். இருபுறமும் ஆட்கள் வந்து கூடவே அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. நேரே கோபுரத்திற்கு மேலே, கோபுர உள்வாயிலில் புகுந்து ஏறத் தொடங்கினான். ஒவ்வொரு நிலையாக ஏறி உச்சிக்குச் சென்றுவிட்டான். மற்றவர்கள் யாரும் வரமாட் டார்கள் என்ற எண்ணமோ ஏதோ தெரியவில்லை. கீழே குனிந்து பார்த்தான். போலீஸ் ஏறிவருவது தெரிந்தது. எப்படித் தப்புவது என்பதே தெரியவில்லை. அவர்கள் கையில் அகப்பட்டு மானமிழந்து உயிர் வாழ்வதா, என எண்ணி னான். எத்தனையோ செல்வர்களோடு, சீமான்களோடு, அதி காரிகளோடு அமர்ந்து கைகுலுக்கிய அந்தக் கைக்கு விலங்கா என்று நினைத்தான். ஒன்றும் செய்ய வழியில்லையே என உணர்ந்தான். சுற்று முற்றும் பார்த்தான். நாற்புறமும் மக்கள் கூடிவிட்டனர். தூரத்தே வளர்ந்த ஒரு மரத்தின்

கிளை அந்தக் கோபுர உச்சிவரை நீண்டிருப்பதைக் கண்டான். அதற்குள் கீழே இருந்த போலீஸ் சேவகர்கள் தன் காலண்டை வந்து விட்டதையும் அறிந்தான். அந்தக் கிளையைத் தாவிப் பிடித்தான். பாவம்—அது உளுத்த கிளை யென்று அவன் அறியவில்லை. அறியத்தான் நேரம் ஏது? கிளையைப் பிடித் துத் தாண்டி மரத்திற்குச் செல்லலாம்; பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்பது அவன் எண்ணம். ஆனால் உளுத்த கிளை ஒடிந்தது. அந்த உயரத்திலிருந்து அப்படியே கீழே விழுந்தான். கோயில் திருப்பணிக்காக அழகிய நீண்ட கற்கள் கீழே அடுக்கப்பட்டிருந்தன. கற்கள் ஒன்றில் அவன் தலை மோதியது—சிதறுண்டது. மற்றவர் அருகே வரு வதற்கு முன் அவன் உயிர் பிரிந்தது. ஒற்றியூரான் அவன் விழைந்தபடியே அவனைத் தன்னிடம் அழைத்துக்கொண் டான் போலும். மக்கள்—அவன்மேல் சீற்றங்கொண்ட அதே மக்கள்—அப்போது பரிதாபப்பட்டனர். பிரிந்தவர்க் குப் பின் செய்வது என்? போலீசார் அந்தப் பிணத்தைப் பின் வந்த வண்டியில் போட்டுக்கொண்டு, தம் வழியே சென்னை நோக்கித் திரும்பிவிட்டனர்.

X

## உரியவன் ஆனான்

செல்வநாதர் பிரம்பூர் மாளிகையினுள் நுழையும் போது தனியனும் மணிமேகலையும் ஒரே மேசையில் சிற்றுண்டி உண்டு கொண்டிருந்தனர். மணி ஒன்பதுதான் இருக்கும். அவர் வரவைக் கண்ட கமலாம்பாள் 'என்ன, போன காரியம் என்னவாயிற்று' என்று கேட்டுக் கொண்டே முன் வாசலுக்கு வந்தாள். அவர் அவளைக் கையமர்த்தினார். தெருப் பக்கமாக உள்ள அறையில் இருவரும் உட்கார்ந்தனர். அவளுக்கு நடந்ததைக் கேட்க கேட்க ஆவல் அதிகரித்தது. கடைசியில் தனியன் செல்வநாதரின் மகனேதான் என்று கேட்டாளோ இல்லையோ 'கண்ணே'' என்று கத்திவிட்டாள். உடனே மணிமேகலையும், தனியனும் அவர் இருந்த அறைக்குள் ஓடிவந்தனர். இதற்குள் பதறி ஒன்றும் சொல்ல வேண்டாம் என்று செல்வநாதர் அடக்கவே அவளும் ஒன்று மில்லை என்று வந்தவர்களைத் திருப்பி அனுப்பிவிட்டாள். முருகேசனைப் பற்றிய தகவலைக் கேள்விப்பட்டவுடன் 'அட பாவி' என்று வாய்விட்டுக் கூவினாள். மற்றொருபுறம் தன்னுடன் பிறந்த ஒருவன் அவ்வாறு கெட்டதை எண்ணிக் கண் கலங்கினாள். தனியனும் மணிமேகலையும் தனித்து விளையாடிக் கொண்டிருப்பதைப் பார்க்கும் போதெல்லாம் இவர்கள் வாழ்வும் இப்படியே இணைந்துவிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று எண்ணுவாள். ஆனாலும் யாரோ ஒரு அனாதைக்குத் தன் பெண்ணைக் கொடுக்க மனம் இடம் தருமா? அதுபற்றி எண்ணி எண்ணி அதுவரை ஏங்குவாள். ஆனால் தற்போது, உண்மையை ஒருவாறு உணர்ந்து

விட்ட பிறகு, அத்தை மகளும் மாமன் மகனும் வாழ்விடைக் கலப்பதில் இடையூறு ஒன்றும் இல்லை என்பதை மனதில் எண்ணிக்கொண்டாள். ஒரு பெரும் பளுவை இறக்கி வைத்தவள் போலானாள்.

செல்வநாதர் தகவல்கள் அறிந்தபின்பும், முழுவிவரமும் நன்கு தெரியாததன் முன் ஒன்றையும் ஒருவருக்கும் சொல்ல வேண்டாமெனக் கட்டளையிட்டார். என்றாலும் இருவரும் தனித்தனி, தனியனைக் காணும்போது தங்கள் உள்ளங்கள் அளவுமீறி அவனிடம் பற்றுக்கொண்ட காரணத்தை ஒருவாறு அறிந்துகொண்டார்கள். செல்வநாதர் உணவு கொண்ட பிறகு போலீஸ் அலுவலகம் சென்று நடந்ததைப் பற்றிய தகவல் அறிய வேண்டியவரானார். உள்ளுக்குள் அன்பார்ந்த உணர்ச்சி பொங்க, அப்படியே தனியனைக் கட்டித் தழுவினார். அவன் ஒன்றும் புரியாது விழித்தான். பின் வந்த கமலாம்பாள் சிரித்தாள். ஏனம்மா சிரிக்கிறாய் என்று மணிமேகலை தனது தாயாரைக் கேட்டுக்கொண்டு இருக்கும்போதே, செல்வநாதர் வெளியே சென்று விட்டார்.

போலீஸ் தகவலெல்லாம் முடிந்தபின் நேராகத் திருவண்ணாமலை சென்று அந்த மருந்தகத் தலைவரைக் கண்டு தகவல் அறிய வேண்டுமென விரும்பினார் செல்வநாதர். போலீஸ் அலுவலகம் சென்றதும், மார்த்தாண்டன் இறந்ததும் பிறதகவல்களும் அறிந்தபின், தான் கொடுக்க வேண்டிய வாக்குமூலத்தையும் கொடுத்துவிட்டு வீடு திரும்பினார். அனாதை விடுதியைச் சென்று பார்வையிட்டார். அனாதை விடுதி அமைத்த புண்ணியமே தன் மகனைத் தன்னிடம் சேர்த்து வைத்தது என எண்ணி மகிழ்ந்தார். போய் எல்லாத் தகவலும் அறிந்து வந்தபின் அங்குள்ள அனாதைப் பிள்ளைகளுக்கு விருந்து வைக்க வேண்டும் எனத் தீர்மானித்

தார். அவர் அன்று மகிழ்வில் திளைத்திருப்பதைக் குழந்தை கள் எவ்வாறு உணர முடியும்?

இரவு உணவுக்குப் பின் அண்ணாமலைக்குப் புறப்பட் டார். ஒரு பதினைந்து பதினாறு ஆண்டுகளுக்கு முன் அந்த இரயிலில் செல்லும்போது செல்லம்மாளைக் காணப் போகி றோம் என்ற உணர்வோடு சென்றுகொண்டிருந்தார். அன் றைய நிகழ்ச்சிகளெல்லாம் அவர் மனக் கண்முன் வந்து நின்றன. அவர் நினைவு இரயிலின் வேகத்தைக் காட்டிலும் அதிகமாக இருந்தது. எப்படியோ மறுநாள் காலை ஆறு மணிக்கு அண்ணாமலை வந்து சேர்ந்தார். அன்று அவர் செல்லம்மாளைக் காணச் செல்லவில்லை. என்றோ அவள் விட்டுச் சென்ற சாசனத்தைக் காணத் துடித்தார். தனியன் தன் மகன்தானா என்று முடிவு செய்யவேண்டிய சாசனமல் லவா அது! சரியாக ஒன்பது மணிக்கு மருந்தகம் சென்றார். அந்தப் பெரிய மருத்துவர் புதிதாக வந்தவரை வரவேற்று நன்கு உபசரித்து, வந்ததைப் பற்றி வினவினார். செல்வ நாதர் சுற்றிவளைத்துச் சொல்லாமல் தான் வந்ததைச் சொன் னார். இத்தனை ஆண்டுகள் கழித்து இப்படி அதற்கு உரிய வர் வருவார் என்று அம்மருத்துவர் கருதவில்லை. என்றாலும் செல்லம்மாள் கொடுத்துச் சென்ற அந்தப் பெட்டியும் போட்டோவும் அப்படியே நன்கு பாதுகாக்கப்பட்டிருந் தன. முதலில் போட்டோவைக் கொண்டுவரச் சொன்னார். அப்போட்டோ செல்வநாதருடையதுதான் என்பது அவருக் குத் திட்டமாகப் புரிந்தது. பிறகு அவர் அந்தப் பையன் இருக்கிறானா என்று கேட்டார். செல்வநாதர் 'ஆம்' என்று மகிழ்வோடு தானே வலியத் தன்னிடம் வந்து சேர்ந்த வர லாற்றைக் கூறினார். மருத்துவரும் அந்தக் குழந்தையை அப்போதே ஒரு படம் எடுத்து வைத்திருப்பதாகச் சொல்லி அதையும் கொண்டுவந்து கொடுத்தார். அப்படத்தில் முகத் தில் இருக்கும் 'மரு' மிக நன்கு விளங்கிற்று. தனியன்

தன் மகனே என்று ஐயமறத் தெளிந்தார் செல்வநாதர். தெரிந்ததும் அப்பெட்டியில் என்ன இருக்கிறது என்று காண முயன்ருர். அந்த மருத்துவர் முன்னிலையிலே அப் பெட்டியைத் திறந்தார். பெரு நம்பிக்கைக்கு இருப்பிட மாகிய கிறித்தவப் பாதிரிமார்கள் எவ்வளவு அக்கரையோடு அந்தப் பெட்டியைப் பாதுக்காத்தார்கள் என்பதை எண்ண எண்ண உளமகிழ்ந்தார். தான் ஒரு சிறு அறுவைை விடுதி நடத்துவதை மக்கள் பெருமையாகப் பாராட்டுவதை எண்ணி ஞர். ஊர்தோறும், நாடுதோறும், மக்கள் வாழும் இடந் தோறும் சென்று, உலகுக்கு உயிரீந்த இயேசுவின் திருப் பெயரைப் பரப்புமுகத்தான் கிறித்தவப் பாதிரிமார் செய்யும் செயல்களை யெல்லாம் எண்ணி எண்ணிப் பார்த்தார். இன்று நாட்டில் உள்ள பலபெரு மருந்தகங்கள், கல்விச் சாலைகள், கருத்தமைந்த அமைப்புக்கள் அனைத்தும் அக்கிறித்தவப்பெரு மக்களது மனவளனுல் ஆயின அன்ருே என்று எண்ணினர். அதே வேளையில் நம் நாட்டிலும் சமயம் வளர்ப்பதாக வாய்ப் பறை சாற்றி வயிறு வளர்த்தும், ஆடம்பரத்தில் பொழுது போக்கியும் வரும் மக்கள் நெறியினையும் எண்ணினர். 'என்ன, அப்பெட்டியைத் திறந்தும் உள்ளிருப்பதைக் காணவில்லையே' என்று எதிரிலிருக்கும் மருத்துவர் கேட்ட பிறகுதான் தன் நினைவுடன் பெட்டியை நோக்கினர் செல்வநாதர். தனது மற்ருெரு புகைப்படம் மேலேயே இருந்தது. செல்லம்மாளுடைய படமும் இருந்தது. அவளுக்கு அவளு டைய பெற்ருேரால் எழுதிவைக்கப்பட்ட சாசனங்கள் இருந்தன. அவற்ருல் அவளுக்கு, நிறையச் செல்வம் உண்டென்றும், அவற்றைப் பங்காளிகள் பயன் படுத்து கின்ருர்கள் என்றும் அவர் அறிந்தார். அவற்றுடன் தான் எழுதிய காதற் கடிதங்களில் சில இருந்தன. அவற்றைக் காணுந்தோறும் செல்வநாதர் உள்ளம் நைந்தார். கண்ணீர் கசிய நீர் பெருக்கெடுத்தது. அவளுடைய அழகிய படம்

ஒன்றும் இருந்தது. அதைக் கண்டதும் அப்படியே கதறி விட்டார் செல்வநாதர். பிறகு மருத்துவர் தேற்றத் தேறினார். எப்படியாவது தனியன் தன்னிடம் வந்து சேர்ந்தானே என்பதை எண்ணும்போது உளம் மகிழ்ந்தார். செல்லம்மாளுடைய பொருள்களையெல்லாம் பெற வழிகாண வேண்டுமென முயன்றார். என்றாலும் உடனே சென்னை சென்று அனைவரையும் கண்டு, தனியன் தன் மகன் என்பதையும் எடுத்து விளக்கிக்காட்டிய பின்னரே வேறு வேலை என்று முடிவு செய்துகொண்டார். அந்த மருத்துவரை வணங்கி, நன்றிகூறி, விடைபெற்றுக்கொண்டு அன்று இரவே சென்னை செல்லும் இரயிலில் திரும்பினார். எத்தனையோ எண்ணங்கள்—இன்ப துன்ப நிகழ்ச்சிகள்—அவர் உளப்படத்தில் நிழலாடின.

நேராக மாம்பலத்தில் இறங்கித் தன் கடமைகளையெல்லாம் முடித்துக்கொண்டு, அனாதை விடுதிக்குப் போனார். மறுநாள் அங்குள்ள அனைவருக்கும் நல்ல விருந்து உண்டென்று கூறினார். அதற்கேற்ற ஏற்பாடுகளையெல்லாம் செய்யுமாறு அதன் தலைவருக்குத் தெரிவித்துவிட்டு, அதற்காக இருநூறு ரூபாய் தனியாகக் கொடுத்துவிட்டு எல்லா ஏற்பாட்டையும் பார்த்துக்கொள்ளச் சொன்னார். விருந்தின் காரணத்தை மட்டும் யாருக்கும் சொல்லவில்லை. எல்லோருக்கும் ஒரே வியப்பாக இருந்தது. பிறகு காரிலேயே தான் கொண்டுவந்த பெட்டியுடன் பிரம்பூருக்குச் சென்றார். அவரது வருகையை ஆவலோடு எதிர்பார்த்த கமலாம்பாள் 'வா அண்ணா! எல்லாம் நாம் எண்ணியபடிதானே' என்று கூச்சலிட்டாள். உணர்ச்சிப் பெருக்கால் தன் தலையை ஆட்டிவிட்டு உள்ளே சென்றார் செல்வநாதர். தனியன் எங்கே என்றார்? கமலாம்பாள் ஓடிச் சோலையிலிருந்த தனியனைக் கட்டித் தழுவிக்கொண்டு 'கலிதீர்க்க வந்த கண்ணே' என்று முத்தமிட்டாள். செல்வி மணிமேகலை ஒன்றும் அறியாதவ

ளாய் 'அவருக்கு என்ன அம்மா' என்று கேட்டாள். 'மேகலை அவன் உன் அத்தானடி. இதுவரை யாரோ என்று தானே எண்ணிஞய். இல்லை, இல்லை. அவன் உன்னை வாழ்விக்க வந்த அத்தானே' என்று கூறிஞள். சிறுவர் இருவரும் ஒன்றும் அறியாது திகைத்தனர். அதற்குள் செல்வநாதரே இந்த இடத்திற்கு வந்து அப்படியே தனிய னைக் கட்டி அணைத்துக்கொண்டு, கோவெனக் கதறிஞர். கமலாம்பாள் 'என்ன அண்ணு, இப்படி நல்லவேளையில் அழலாமா' என்ருள். 'ஐயோ! என் மகன் என அறியாது இத்தனை நாள் உன்னை வாடவைத்தேனே. கண்ணே! நீயாக என் வீட்டுக்கு வந்தும் உன்னைக் காக்காது விட்டுவிட்டேனே' என்று கூறி மேலும் அழத் தொடங்கிஞர். சிறுவரும் கலங் கினர். கமலாம்பாள் செல்வநாதரைத் தேற்றிஞள். 'சென்றது சென்றுவிட்டது. இனி அதுபற்றி வருந்தி என்ன பயன். இதோ நம் கண்மணிகள் இரண்டும் விளையாடும் விளையாட் டைப் பார்' என்று சொன்ஞள். உடன் கொண்டுவந்திருந்த செல்லம்மாளின் புகைப்படத்தைக் காட்டி அவளே தனிய னின் தாய் என்று உரைத்தார் அவர். தனியன் சிறிது தயங்கிஞன். 'ஆம், இதே படத்தை தங்கள் மாளிகையில் பார்த்திருக்கிறேன். அன்று ஏனே அந்தப் படத்தைக் கண்டதும் எனக்கு மிகவும் கசிவு உண்டாயிற்று. அப்படி யாஞல் அவர் எனது அன்னை தாஞ' என்று அலறிவிட்டான். அருகே இருந்த மணிமேகலையும் தனியன் இருந்த நிலைமை கண்டு தானும் அழத் தொடங்கிஞள். இருவரையும் செல்வநாதர் ஒரு சேர அழைத்துக்கொண்டு 'செல்வங்களே! நீங்கள் என்றும் இவ்வாறு இணைந்தே வாழவேண்டும்' என்று வாழ்த்திவிட்டுக் கமலாம்பாள் முகத்தை நோக்கிஞர். 'ஆம்; அதுவேதான் எனது விருப்பமும்' என்று தலையசைத்தாள் கமலாம்பாள்.

தனியன் செல்வநாதர்தான் தன் தந்தை என அறிந்து கொள்ள நெடுநேரமாயிற்று. தான் இளமையில் செல்லம்மா ளோடு இருந்ததையும், திரும்பி வருவதற்குள் செல்லம்மாள் அவனைப்பெற்று இறந்ததையும், அவன் அனாதையாகச் சுற்றித்திரிவதையும், அவனை எப்படியும் கண்டு பிடிக்கலாம் என்று, யாருக்கும் கூறாது அனாதை விடுதி தொடங்கி நடத் தியதையும், அவ்விடுதியில் அவனைக் காணாவிட்டாலும் வேறு எப்படியோ கண்டெடுக்கப்பட்டதையும் நன்கு விளக்கிவந்த செல்வநாதர் அவனது குழந்தைப் படத்தைக் காட்டி, முக மருவே அவனை அறிமுகப்படுத்திற்று என்றும் கூறினார். 'அப்பா' என்று அலறி அவன் அப்படியே செல்வநாதரைச் சேர்த்து அணைத்துக்கொண்டான். அவரும் அவன் முதுகைத் தடவிக்கொடுத்தார். மணிமேகலை தன் தாயைப் பார்த்தாள். அவளைச் சேர்த்து அணைத்து 'உன் அத்தானை விடாதே' என்று சொல்லிக்கொண்டாள் அன்னையார். செல்லம்மாளின் அன்புப் பரிசான தனியனுக்காகவே அவர் மறுமணமும் செய்துகொள்ளாதிருந்ததை யெல்லாம் எடுத்துக் கூறி இனி எல்லாத் துன்பத்தையும் மறந்துவிடவும் சொன்னார். செல்வ நாதர் கள்வர் தம் ஒழிவு பற்றியும் பிற தகவல்களையும் கூறி, இனி அனைவரும் ஒன்றுபட்டோம் என்றும் மகிழ்ந்தார். கமலாம்பாள் இருவரையும் நிற்கவைத்துத் திட்டிகழித்தாள். இறுதியாகத் தான் நினைத்த மைந்தன் கண்டுபிடிக்கப்பட் டான் என்பதை அறிய அளவிலா மகிழ்ச்சி அடைந்த செல்வநாதர் மறுநாள் அனாதை விடுதியிலிருக்கும் விருந் தைப் பற்றிக் கூறினார். அனைவரும் அன்று மாலையே மாம்பலம் செல்ல ஏற்பாடு செய்தனர்.

மாலை ஐந்து மணிக்கெல்லாம் செல்வநாதர் அனைவரை யும் தன் வீட்டில் கொண்டுவந்து விட்டார். முன் ஏற்பாட்

டின் படியே வேலைக்காரர்கள் பெருவிருந்துக்குத் தயார் செய்திருந்தனர். விருந்துக்கு முக்கியமான உறவினர்களை அழைக்கவும், தனியனுக்கு வேண்டிய துணிமணிகளை வாங்கவும் செல்வநாதர் வெளியே புறப்பட்டுச் சென்றார். உள்ளே சென்ற தனியன் வெளிக்கூடத்தில் மாட்டியிருந்த செல்லம்மாளின் படத்தின் முன் மண்டியிட்டு 'அன்னையே! உன்னை என் அன்னையென்று அறிவதன் முன்னமே நீ என் உள்ளத்தை ஈர்த்தாய், இதோ இன்று அறிந்து உன்னை வணங்குகின்றேன்' என்று சொல்லிக் கண்ணீர் பெருக அழுதான். வேலைக்காரர்கள் கூடிவிட்டனர். கமலாம்பாள் அவர்களுக்கு எல்லாவற்றையும் விளக்கி, அந்தப் படம் செல்வநாதர் மனைவியுடையதென்றும், தனியன் அவர்தம் மகனென்றும் கூறினார். அனைவரும் மகிழ்ந்தனர்: தனியன் முன்னமே அங்கு இருந்தவன் ஆதலால் அவனை யாவரும் அறிவர். அன்று ஒரு அனாதையாக இருந்தவன் இன்று வீட்டுக்கே தலைவனாக வந்ததைக் குறித்து மகிழ்ந்தனர். அறியா முன்பே, செல்வநாதர் அவனிடம் பற்றுக்கொண்டதை எண்ணும்போது, பாசம் எப்படியாவது பற்றிக் கொள்ளும் என்பதை அவர்கள் எண்ணாதிருக்க முடியவில்லை. அன்று இரவில் விருந்து சிறப்பாக நடைபெற்றது.

மறுநாள் பொழுது விடிந்தது. அன்று அனாதை விடுதியில் விருந்து. பல நண்பர்கள் அங்கும் விருந்துக்கு வரவழைக்கப்பட்டிருந்தனர். செல்வநாதர், கமலாம்பாள், தனியன், மணிமேகலை ஆகிய நால்வரும் காரில் புறப்பட்டனர். அனாதை விடுதியின் வாயிலில் கார் நின்றது. அனாதை விடுதியில் அனைவரும் புகுந்தனர். தனியனும் அந்த அனாதை விடுதியில் கால் வைத்தான். அனாதையாக அல்ல. ஆம், பல

ஆண்டுகள் அனுதையாக மாணவர் விடுதியில் வாழ்ந்து, கண்ட இடத்தில் காலம் கழித்து, கள்வனுகவும் இருந்து, உலகம் ஒரு அனுதை என்று பேசிட வாழ்ந்த அந்தத் தனியன் இன்று அனுதையாக அவ்விடுதியில் கால் வைக்க வில்லை. அவ் வனுதை விடுதியின் தலைவனுக அதன் உள்ளே நுழைந்தான். அனுதைகளை வாழ்விக்கும் வள்ளலின் மைந் தனுக உள்ளே வந்தான் தனியன்.

## அ. மு. ப. வின் பிற நூல்கள்

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| கவிதையும் வாழ்க்கையும் | ... | 7 | 00 |
| தமிழக வரலாறு | ... | 6 | 00 |
| தமிழ் உரைநடை | ... | 3 | 50 |
| பாட்டும் பயனும் | ... | 2 | 00 |
| இளமையின் நினைவுகள் | ... | 2 | 50 |
| சமயமும் சமூகமும் | ... | 2 | 25 |
| மணிபல்லவம் | ... | 1 | 25 |
| பாசம் | ... | 1 | 75 |
| தமிழ்நாட்டு விழாக்கள் | ... | 1 | 25 |
| பெண் | ... | 1 | 50 |
| மனிதன் எங்கே செல்கிறான் ? | ... | 1 | 50 |
| கங்கைக் கரையில் காவிரித் தமிழ் | ... | 2 | 50 |
| வையைத் தமிழ் (அச்சில்) | | | |

*In English*

| | | | |
|---|---|---|---|
| Gleanings of Tamil Culture | ... | 1 | 50 |
| Tamilnad Through Ages (under print) | | | |


**தமிழ்க்கலைப் பதிப்பகம்,** சென்னை-30

விற்பனை உரிமை :

**பாரி நிலையம்,** சென்னை-1